

பிரபல சமையல் கலைஞர் திருமதி பிரமீளா லால் தமது விசேஷப் பக்குவ முறை ஒன்றை உங்களுக்கு உதவுகிறார்.

# பிரவுன் & போல்ஸன்

## கஸ்டர்டு பவுடர்

## உபயோகித்து சாக்கோ மூஸ் செய்து பார்த்திருக்கிறீர்களா?

**இன்சுவை ததும்பும், மென்மையான சாக்கோ மூஸ் உங்களுக்குக் கிடைக்கும்.**



பிரவுன் & போல்ஸன் கஸ்டர்டு பவுடர் மென்மையானது, செழுமையானது, சத்தானது. பிரனி, ஐஸ் கிரீம், டிரிபிள் போன்ற பலவகைப் புட்டிங்குகளையும், பழவகைத் தின்பண்டங்களையும் தயாரிக்க அது எப்போதும் கைவசமிருக்கட்டும். தயிர், ஜெல்லி, ப்ரூட் ஸாலட்டுகளுடன் சேர்க்கும்போது இன்சுவை பெருகும். பிரவுன் & போல்ஸன் கஸ்டர்டு பவுடர் அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்துடன் பக்குவப் படுத்தப் பட்டது.




முட்டை கலவாதது

பக்குவ முறை:

- 2 டேபிள் ஸ்பூன் பிரவுன் & போல்ஸன் கஸ்டர்டு பவுடர் (ப்ளெயின்)
- 2 டேபிள் ஸ்பூன் கோகோ
- ½ லிட்டர் பால்
- 4 டேபிள் ஸ்பூன் அல்லது தேவையான சர்க்கரை.
- சில துளிகள் வெனில்லா எஸன்ஸ்
- 25 கிராம் டேவிஸ் ஜிலடின்
- 125 திரவ கிராம் பாலேடு

1. பிரவுன் & போல்ஸன் கஸ்டர்டு பவுடரையும் கோகோவையும் கிண்ணம் பாலில் கலக்கவும்; எஞ்சிய பாலை கொதிக்க வையுங்கள். 2. கொதிக்கும் பாலை கஸ்டர்டு பவுடர் கலவையில் விட்டுக் கிளறவும். 3. அதை ஒரு பாத்திரத்தில் திருப்பிக் கொட்டி இரண்டு நிமிஷங்களுக்கு வேகவிடவும், அக்கடி கிளறியவண்ணம். 4. சர்க்கரையையும் எஸ்ஸென்ஸையும் சேர்த்து, சற்றே குளிர வைக்கவும். 5. ஆறு மேசைக்கரண்டி வெந்நீரில் கரைத்த ஜெலடினை சேர்க்கவும். 6. கட்டியாகும் வரை பாலேட்டை கலக்கி, கலவையுடன் சேர்க்கவும். 7. எண்ணெய் தடவிய அச்சில் ஊற்றவும்; இறுகும் வரை விட்டு வைக்கவும்.

பக்குவ முறைகள் அடங்கிய இலவசமான செட் ஒன்றை எனக்கு ஆங்கிலம்/இந்தி/வங்காளம்/தமிழ்/தெலுங்கு மலயாளம்/குஜராத்தி மராத்தி/கன்னடம் மொழியில் தயவு செய்து அனுப்பவும்.

பெயர்

முகவரி

இக் கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்புக:

கார்ன் ப்ராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட், ஸ்ரீ நிவாஸ் ஹவுஸ், வாட்பி ரோடு, பம்பாய்-1 பிஆர்

**உங்கள் சமையல் உன்னதமாக இருக்க உயர்ந்த சாமான்களையே உபயோகியுங்கள்!**

இதுபோல் இன்னும் பல உணவு வகைகளைத் தயாரித்து உங்கள் குடும்பத்தினரை மகிழ்விக்கலாம், பின்வரும் இதழ்களைக் கவனித்து வாருங்கள்.

**கார்ன் பிராடக்ட்ஸ் கோ. (இந்தியா) பிரைவேட் லிட்.**
ஸ்ரீ நிவாஸ் ஹவுஸ், வாட்பி ரோடு, பம்பாய்-1. (பிஆர்)



ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்.
பாரி & கம்பெனி, டேர் ஹவுஸ், மதராஸ் 1.
மற்றும் அவர்களது கிளைகள்

ஆஹா!
என்னுடைய




பாரி மிட்டாய்கள்
எவ்வளவு
சுவை மிகுந்து
இருக்கின்றன!





பாரிஸ் கன்பெக்ஷனரி லிமிடெட், சென்னை

PRS-4833

# 'ஆஸ்ப்ரோ' மட்டுமே மைக்ரோஃபைன்ட் செய்யப்படுகிறது

## *அதிவேகமாக* வலியை வெளியே இழுப்பதற்காக

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' செயல்புரியும் விதம்







ஒரு மாத்திரையில் உள்ள அணுக்கூறு எவ்வளவுக்கெவ்வளவு பெரியதாக உள்ளதோ அது உங்கள் உடலில் கலப்பதற்கு அவ்வளவுக்கவ்வளவு நேரமாகிறது. நீங்கள் வலியிலிருந்து நிவாரணம் பெறவும் அவ்வளவுக்கவ்வளவு காக்க வேண்டியிருக்கிறது.

மைக்ரோஃபைன்ட் ஆக இருப்பதனால் புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' வின் ஒவ்வொரு மாத்திரையிலும் சுமார் 15 கோடி நுண்ணிய அணுக்கூறுகள் அடங்கியுள்ளன —எனவே, அது மேலும் துரிதமாக இரண்டறக் கலந்து விரைவில் நிவாரணம் அளிக்கிறது.

மேற்கண்டவைகளுக்கு புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்: நோவு • தலைவலி • உடல்வலி • ஃப்ளு • ஜுரவேகத்துடன் கூடிய ஜலதோஷம் • மூட்டுவலி • தொண்டை அழற்சி • பல்வலி

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' இப்பொழுது கிடைக்கும் அதி நவீனமான வலி நிவாரணியாகும்.

சாப்பிடும் அளவு:

வயது வந்தவர்கள்: இரண்டு மாத்திரைகள். தேவையானால் மீண்டும் சாப்பிடவும்.

குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொல்படி






புதிய

**மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'**

அதி வேகமாக வலியை வெளியே இழுத்து விடுகிறது.

நிகோலஸ் (N) தயாரிப்பு










மர்பியின் அழகான மீடியம் வேவ் டிரான்ஸிஸ்டர்-முன்னா. ஸ்டேஷன்களை சுத்தமாகவும், நாதத்துடனும் பிடிக்கக்கூடியது. சக்தி வாய்ந்தது, கரகரப்பான சத்தமில்லாத தன்மையுடையது.

4 டார்ச் செல்களை உபயோகியுங்கள் எல்லா இடங்களிலும் சுலபமாகக் கிடைக்கும்.

*விற்பனைவரி மற்றும் இதர ஸ்தல வரிகள்தனி, விலை பாட்டரிகளைத் தவிர்த்தது.




மர்பி — இல்லத்தை மகிழ்விக்கிறது!



MAS 331

# கல்கி



## பொருளடக்கம்

**கீலக வருஷம், மார்கழி 8உ. டிசம்பர் 22உ.**


| | | |
|---|---|---|
| அஸ்திவாரத்தை ஆட்டலாமா? | — | 7 |
| ராஜாஜியின் கருத்துக்கள் | — | 9 |
| ''சங்கீத கலாநிதி'' | — | 11 |
| மகிஷ உருவில் மகாதேவன் | — | 13 |
| பொன்னியின் செல்வன் | — | 18 |
| மகாபாரதம் | — | 30 |
| கண்டங்கள் கடக்கும் கார்கள் | — | 35 |
| 007 பாது | — | 38 |
| கிளிஞ்சல் கோபுரம் | — | 41 |
| புகையிலே புராணம் | — | 51 |
| ஒற்றைப் பனை | — | 57 |
| அன்பிற்கு அப்பால் | — | 64 |
| சரப சாஸ்திரி சில்வியா செல்கிறார் | — | 74 |


''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே, சம்பவங்களும் கற்பனையே.


பாலைக்குடிக்கக் கூடாது
என்று உன் குட்டிகளுக்கு
நீ உத்தரவு போடு —



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

மலர் 28 இதழ் 21



# அஸ்திவாரத்தை ஆட்டலாமா?

அரசியல் சாஸனப்படி நமது பிரஜைகள் பெற்றுள்ள ஜீவாதார உரிமைகளில் ஒன்று சொத்துரிமை. ஏழைகளைப் பணக்காரர்களாக்க வழி காணாத அரசியல்வாதிகள், பணக்காரர்களை ஏழைகளாக்குவதின் மூலமே பெரும்பாலான ஏழைகளின் வாக்கைப் பெற முடியும் எனக் கருதுகிறார்கள். எனவே சாஸனம் தந்துள்ள சொத்துரிமை இவர்களுடைய கண்களை உறுத்துகிறது. அதைப் பறிக்கும் விதத்தில் பல காரியம் செய்கிறார்கள். இதற்குப் பார்லிமெண்டிலுள்ள பெரும்பாலான பலம் உதவி செய்கிறது. எனினும் சென்ற ஆண்டில் ஸுப்ரீம் கோர்ட், சாஸனம் தருகிற ஜீவாதார உரிமைகளைப் பார்லிமெண்டின் பலம் கொண்டு மாற்றலாகாது என்று தீர்ப்புத் தந்துவிட்டது.

இந்தத் தீர்ப்பின் விளைவை அற்றுப் போகச் செய்கின்ற உத்தேசத்துடன் பி. எஸ். பி. அங்கத்தினர் ஸ்ரீ நாத்பாய் மக்கள்சபையில் ஒரு மசோதா பிரேரித்திருக்கிறார். 'சாஸனம் தரும் ஜீவாதார உரிமைகளையும் பார்லிமெண்ட் மாற்றலாம்' என்பதே இவரது மசோதாவின் தாத்பரியம். இப்போது அரசாங்கம் இம்மசோதாவை ஆதரிப்பதாக உறுதியாகிவிட்டது.

வாழ்வதற்கு உபாயமாக வேலை செய்கிறோம்; வேலை செய்து சம்பாதிக்கிறோம்; அதில் நிகழ்காலத் தேவை போக, பிற்காலத்துக்கெனச் சேமித்து வைத்துக் கொள்கிறோம்; இந்தச் சேமிப்பே சொத்தாகிறது. வாழும் உரிமையும், தொழில் உரிமையும், சம்பாதிக்கும் உரிமையும், சேமிக்கும் உரிமையும், சொத்து வைத்துக் கொள்ளும் உரிமையும் ஒன்றோடொன்று தொடர்புள்ளவை. இவற்றை அரசாங்கத்தின் குறுக்கீடு இன்றி மக்கள் அநுபவிப்பதற்கு சாஸனம் உத்தரவாதம் தருகிறது.

சொத்துரிமை இருப்பதால், தகாத முறையில் சொத்து சேர்க்க முடியும் என்று அர்த்தமாகாது. சுதந்திர மனிதனாக வாழ ஒரு பிரஜைக்கு உரிமையிருந்தாலும், அந்தச் சுதந்திரத்தை அவன் பிறர் நலனுக்கு எதிராகப் பிரயோகிக்கும்போது, அவனைக் கைது செய்யவும், விசாரணை செய்து சிறை வைக்கவும் அரசாங்கத்துக்கு உரிமை உள்ளதல்லவா? இதேபோல் சட்டத்துக்கு உகந்த முறையில், நியாயமான காரணங்களுக்காக ஒருவரின் சொத்தை அரசாங்கம் ஆர்ஜிதம் செய்து கொள்ளலாம். பொதுநலக் காரியங்களுக்காக அரசாங்கம் சில சொத்துக்களை ஆர்ஜிதம் செய்யலாம். ஆனால் இதற்கு மனம் போனபடி நஷ்டஈடு தராமல், நியாயமான நஷ்டஈடு தரவேண்டும். இதைப் புறக்கணிப்பதற்காக சாஸனத்தையே திருத்துவது தகாது.

வாழும் உரிமை படிப்படியாகச் சொத்துரிமையோடு தொடர்புடையது என்று பார்த்தோம். ஒரு மனிதனின் வாழ்க்கையைப் பறிக்கவேண்டுமாயின் அவனைக் கத்தியால் குத்தவோ, துப்பாக்கியால் சுடவோ, மூச்சை நெரித்து நிறுத்தவோ, பட்டினி போடவோதான் வேண்டும் என்பதில்லை. ஒரேயடியாகவோ, சிறுகச் சிறுகவோ ஒருவனின் சொத்தைப் பறிப்பதாலும் நாளடைவில் அவன் வாழ்வைப் பறித்துவிட முடியும். சொத்துரிமையைப் பறிப்பது அதோடு நின்றுவிடாமல் எவ்வளவு தூரம் செல்லும் என்பதை எண்ணிப் பார்க்கவேண்டும்.

மக்கள் சுதந்திரங்கள் அனைத்தையும் சாஸனம் அநுமதித்துள்ளது. அவற்றில் ஒன்றைப் பறிப்பதன் மூலம் மற்றவையும் பறிக்கப்படும்.

'சாஸனம் தரும் ஜீவாதார உரிமைகளுக்கு மாறாக பார்லிமெண்ட் செய்த முடிவை ஒப்புவதற்கில்லை' என்று ஸுப்ரீம் கோர்ட் விதிக்கும்போது 'அப்படியானால் சாஸனத்தின் ஜீவாதார உரிமைகளை மாற்றவும் அந்தப் பார்லிமெண்டின் பலத்தைக் கொண்டே பார்லிமெண்டுக்கு அதிகாரம் வழங்குவோம்' என்று சொல்லுவது சற்றும் பொருந்தாது.

அரசியல் சாஸன விவகாரங்களில் முடிவெடுக்கும் உரிமை ஸுப்ரீம் கோர்ட்டுக்கே உள்ளது. நாத்பாயின் யோசனை ஏற்கப்பட்டால் ஸுப்ரீம் கோர்ட்டின் இந்தச் சட்டரீதியான அந்தஸ்தே ரத்து

செய்யப்பட்டதாகும். நீதிபீடத்துக்கு யாவரும் தலை வணங்குமாறு மரியாதை உணர்ச்சி யூட்டுவது அரசாங்கத்தின் முக்கிய பொறுப்புக்களில் ஒன்றாகும். அரசாங்கமே நீதி பீடத்தின் கருத்தைப் புறக்கணித்தால் அதை என்னென்பது? அடிப்படை விஷயங்களில் மரியாதை வைத்து, விவேகத்துடனும், கௌரவத்துடனும் பார்லிமெண்டில் நடப்புக்கள் அமைந்தால்தான் ஒரு நாட்டுக்கு உலகில் மதிப்பு ஏற்படும். இந்த அடிப்படைகளில் ஒன்று, அரசியல் சாஸனத்திடம் காட்டுகிற மரியாதை. சுயாட்சி என்ற கடினமான பாதையில் பிரவேசிக்கும்போது தேசம் அனைத்தும் நலம் பெறுவதற்காக அரசியல் சாஸனம் பேரறிஞர்களால் வகுக்கப்பட்டது. இதைப் பார்லிமெண்டே உதாசீனம் செய்யலாமா? சாஸனத்தினால் அமைக்கப்பட்ட நீதிபீடத்துக்கு — சாஸனத்தைக் காக்கவே அமைக்கப்பட்ட நீதி பீடத்துக்கு — பார்லிமெண்டே உரிய மரியாதை தராதிருக்கலாமா?

# 'மெயில்' காணும் மகோற்சவம்

இந்திய மக்களுக்குச் சுதந்திர உணர்ச்சியை ஊட்டி வளர்த்த பெருமையில் ஆங்கிலேயர்களுக்கும் பங்கு உண்டு. இதற்கு வழிகாட்டியாக அமைந்தவை நம் நாட்டில் கும்பினி ஆட்சி காலத்திலேயே ஆரம்பித்து, நடந்து வந்த பல ஆங்கிலப் பத்திரிகைகளாகும். இவற்றில் ஒன்றே 1868ம் ஆண்டில் தோன்றி, நமக்கெல்லாம் நன்கு பரிசயமாகியுள்ள 'மெயில்' பத்திரிகை. மிகச் செல்வாக்குடனும் அசாதாரணத் திறமையுடனும், இங்கிலாந்தின் பிரபல பத்திரிகைகள் பின்பற்றிய சம்பிரதாய முறை வழுவாது அன்று முதல் இன்றுவரையில் பத்திரிகை உலகில் முக்கிய ஸ்தானம் வகித்து வருகிறது 'மதராஸ் மெயில்' பத்திரிகை. நாட்டின் அரசியல் நிலைமை வேகமாக மாறிக் கொண்டிருந்த காலங்களில் மெயில் பத்திரிகையும் தனது லட்சியங்களைத் தேச நலனுக்கு ஏற்ப மாற்றிக் கொண்டே வந்துள்ளது. ஆங்கிலேயர்களால், ஆங்கிலேய மூலதனத்துடன் ஆங்கிலேயர்களின் அக்கறைகளைப் பாதுகாத்துக் கொள்ளுவதற்காக ஆங்கில மொழியிலே ஆரம்பித்து நடத்தப்பட்ட தினசரி என்றாலும் - அன்றைய அரசாங்கம் எதுவாக இருந்தாலும் அதற்கு ஒத்துழைப்பதையே நடைமுறைச் செயலாகக் கொண்டு நடைபெற்று வந்துள்ளது என்றாலும் - பத்திரிகை சுதந்திரம், பத்திரிகையின் தர்மம் என்ற அம்சங்களில் ஒரு தேசிய பத்திரிகையின் உணர்ச்சிகளையும் ஆவேசங்களையும் மெயில் பத்திரிகை பிரதிபலிக்கத் தவறியதில்லை. மக்களின் குரல் என்று பத்திரிகைகளைப் பற்றிச் சொல்லப்படும் இலக்கணம் மெயில் பத்திரிகை சம்பந்தப்பட்டவரையில் முற்றும் பொருந்தும். ஆதிகாலத்தில் மதராஸ் வாழ் ஆங்கிலேய மக்களின் குரல் என்று கருதப்பட்டு வந்திருந்த போதிலும், சுதந்திரத்துக்குப் பின் மற்ற இந்திய தேசியப் பத்திரிகைகளுக்கு எந்த அம்சத்திலும் தான் குறைந்ததல்ல என்ற சிறப்புடன் செயலாற்றிவருகிறது மெயில் பத்திரிகை. மெயில் பத்திரிகை சில ஆண்டுகளாக காலஞ்சென்ற தொழிலதிபர் எஸ். அனந்தராமகிருஷ்ணனுடைய அமால்கமேஷன்ஸ் ஆதிக்கத்தின் கீழ் வந்துள்ளது. சென்னை மாநகரின் வரலாற்றுடனேயே இணைந்து சுடர் விட்டுப் பிரகாசிக்கும் 'மெயில்' பத்திரிகை தனது நூற்றாண்டு விழாவை மிகப் பெருமையுடன் திரு அனந்தராமகிருஷ்ணனுடைய செல்வக் குமாரன் திரு ஏ. சிவசைலத்தின் தலைமையில் கொண்டாடியது. ராஜாஜியும் யூனியன் மந்திரிகள் சவானும், ஷாவும், தமிழக முதல்வரும் விழாவில் கலந்துகொண்டது விழாவின் பெருமைக்கு அடையாளம்.

கல்கியும் தனது பாராட்டுதல்களைச் சகோதரப் பத்திரிகையான மெயில் பத்திரிகைக்குத் தெரிவித்துப் பல்லாண்டு கூறுகிறது.

# நாகர்கோவில் தேர்தல்

டாக்டர் மத்தியாஸ் சுயேச்சை வேட்பாளராக நாகர்கோவில் தொகுதியில் பலருடைய விருப்பத்துக்கிணங்கி நிற்கிறார். காலஞ்சென்ற நாகர் கோவில் தலைவர் திரு நேசமணிக்கு அடுத்தாற்போல் பொது மக்களின் பேரன்பையும் பேராதரவையும் பெற்ற ஒரே தலைவர் டாக்டர் மத்தியாஸ் அவர்கள்தான். படித்தவர்களும் பாமரர்களும், சமய சாதி வேறுபாடின்றி எல்லா மக்களும் அவரிடம் அன்பும் மதிப்பும் மரியாதையும் வைத்திருக்கிறார்கள். திராவிட முன்னேற்றக் கழகமும் டில்லி மக்கள் சபையில் நாகர்கோவில் தொகுதியின் பிரதிநிதியாக டாக்டர் மத்தியாஸ் அவர்களையே தேர்ந்தெடுத்து அனுப்பி வைக்குமாறு கோருகிறது.

டில்லி சர்க்காரும், பார்லிமெண்டிலுள்ள சுதந்திரக்கட்சி அங்கத்தினர்களின் யோசனைகளைக் கவனத்துடன் 'கேட்டு வருகிறார்கள். அத்தகைய அறிவாளிகளிடையே அமர நாகர்கோவில் தொகுதி டாக்டர் மத்தியாஸ் அவர்களையே தேர்ந்தெடுத்து அனுப்ப வேண்டும். தவறுதலாகக் காங்கிரஸ் வேட்பாளரைத் தேர்ந்தெடுத்தால் அந்த வேட்பாளரின் குரல் நூறோடு ஒன்றாகத்தான் போய் முடியுமே தவிர உருப்படியான பயன் விளையாது.

குறுகிய கால நோக்கோடு பார்த்தாலும் தீர்க்கதரிசனத்தோடு பார்த்தாலும் டாக்டர் மத்தியாஸுக்கு நாகர்கோவில் வாக்காளர்கள் தங்கள் அபரிமிதமான வாக்குகளை அளித்து வெற்றி பெறச் செய்வதே முறையாகும். நாகர்கோவில் மக்கள் தங்கள் கடமையில் ஊக்கமாக இருந்து மத்தியாஸ் அவர்களையே தேர்ந்தெடுத்து அனுப்புவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

பிறந்த நாளன்று அன்பும் வாழ்த்தும் அனுப்பிய அனைவருக்கும் தனிப்பட நன்றி தெரிவிக்க நான் விரும்பிய போதிலும் இயல வில்லை. அவர்கள் மன்னிக்க வேண்டும். அவர்களுக்கு நன்றியோடு நல்வாழ்த்தும் தெரிவிக்கிறேன். அனைவரும் உயர்ந்த நோக்கத்தோடு வாழ்ந்து, பிறருக்குச் சேவை செய்யும் போது ஏற்படுகிற சுமைகளைத் தாங்க ஆண்டவன் அருள வேண்டும்.

❁❁❁

தங்கள் பிறந்த தினத்தன்று என் நல் வாழ்த்துக்களையும் நல்லெண்ணத்தையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன். தாங்கள் செய்ய விரும்பும் அனைத்தையும் செய்ய முடியாவிட்டாலும் கூடத் தாங்கள் இவ்வளவு செயலூக்கத்துடனும், (அறிவைத்) தூண்டுபவராகவும் இருப்பது நமது பொது வாழ்வுக்கு நன்மை யூட்டுகிறது. நிறைந்த நூறு வருடங்கள் தாங்கள் எங்களுடன் இருப்பீர்களாக!

இந்த வார்த்தைகள் ஸ்ரீமதி இந்திரா காந்தியிடமிருந்து வந்தவை. அவருக்கு நன்றி கூறுகிறேன். அவருக்குத் தேவையான ஆண்டவன் அருள் முற்றிலும் கிட்டப் பிரார்த்திக்கிறேன். மலையிலிருந்து செதுக்கி எடுத்த துண்டுக்கு மலையின் குணங்கள் உண்டு. அன்புக்குகந்த நேரு மலையிலிருந்து பிறந்த துண்டு இந்திரா என்பதற்கு இவ்வாழ்த்து நிருபணம்.

❁❁❁

நக்ஸல்பாரி பாணியினரின் நடவடிக்கைகளில் கூர்ந்த கவனம் செலுத்த வேண்டும் என்று ராஜ்ய அரசாங்கங்களை யூனியன் உள்துறை மந்திராலயம் எச்சரித்திருக்கிறது. தேசம் முழுவதிலும் தீவிரமாக நாச வேலை செய்கிற இயக்கமாகக் கம்யூனிஸ்ட் கட்சி பரவாமல் விரைவில் போதிய நடவடிக்கை எடுக்க வேண்டியது யூனியன் உள்துறை மந்திராலயத்தின் காரியமே எனக் கொள்வது அதிகப் பொருத்தம். ராஜ்யங்களுக்கு "எச்சரிக்கை" செய்வதன் மூலம் ஆபத்தை முறியடிக்க நினைப்பது வியர்த்தமே.

கம்யூனிஸ்ட் கட்சியின் எல்லாப் பிரிவுகளையும் தடை செய்வது தவிர விமோசனத்துக்கு வேறு வழியே இடையாது.

கம்யூனிஸ்டுகளில் எவருக்குமே ஜனநாயகத்தில் நம்பிக்கை இல்லை. அவர்களுக்கு ஜனநாயகம் பிடிக்கவில்லை. அவர்களுக்கு நாச வேலையிலேயே நம்பிக்கை. அதையே பலவிதங்களில் செய்து வருகின்றனர். இந்தப் பொது நோக்கத்தில் இடதுசாரி, வலதுசாரி என்கிற பிரிவுகளிடை மாறுபாடு இல்லை. வெளிப்படையாகத் தெரிந்தோ, அல்லது உள்ளுறை வினைவாகவோ, கம்யூனிஸ்டுகளின் பல பிரிவினரும் நாச வேலை முயற்சியில் பரஸ்பரம் உதவிக் கொள்பவராவர்.

❁❁❁

சென்னையில் மாணவரிடையே நடைபெற்ற மோதல் அரசியல்வாதிகள், மாணாக்கர்கள் இருவருக்குமே ஓர் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

மாணவர்கள் படிப்பில் எண்ணத்தை ஒருமுகப்படுத்த வேண்டும்; அரசியல் இன்னவென்று கேட்டறியலாம், புரிந்து கொள்ளலாம்; ஆனால் தங்களையே அரசியல் கட்சிகளுடன் சம்பந்தப்படுத்திக் கொள்ளக் கூடாது. இது எப்போதுமே என் கருத்து. இதுவே சரியான கருத்து என்று நம்புகிறேன்.

கல்லூரியில் உள்ள மாணவர் சங்கங்கள், எல்லா மாணவர்களின் விவாதத் திறனும் வெளிப்படுவதற்கு உதவும் பொது மேடையாக இருக்க வேண்டும். அதில் மாணவர்கள் கருத்துக்களையும், கொள்கைகளையும் ஆதரித்துப் பேசலாம். ஆயினும் தம்மை எந்த ஓர் அரசியல் கட்சித் தொண்டராகவும் அவர்கள் எண்ணலாகாது.

குறுகிய கால நோக்குப் படைத்த அரசியல் சிந்தனை தலைவர்களைப் பயங்கரத் தவறுதல்களுக்கு இட்டுச் செல்கிறது. இந்தியாவில் கல்லூரி மாணவர்கள் எவ்வளவு முதிர்ச்சி பெறாதவர்கள் என்பதை நாம் அறிவோம். இப்படிப்பட்டவர்களை ஏதோ ஒரு கட்சிக்காக கோஷிக்கச் செய்வது பெரும் தீமையில் முடிகிறது. இது உடனடியாக மாணவரிடை உண்டாக்கும் மோதல் ஒருபுறமிருக்க, இறுதியில் தேசிய ரீதியிலேயே தீய விளைவை உண்டாக்கும்.



# அணுவைப் பற்றி....

☐ பேசுபவர்: திரு விக்ரம் சாராபாய், அருகில் அமைச்சர் நெடுஞ்செழியன்.

☐ டாக்டர் பாபா நினைவாக 'அணுவைப் பற்றி' நூலை பம்பாய் மேயர் திரு குல்கர்னி, சகோதரர் ஜே. ஜே. பாபாவிடம் வழங்குகிறார்.

அணுவை ஆராய்ந்த விஞ்ஞானிகள் அதன் மையத்தில் நியூக்ளியஸ் என்ற பகுதி உள்ளதென்றும் அதைச் சுற்றிலும் எலெக்ட்ரான் என்ற பகுதிகள் வலம் வந்து கொண்டே இருக்கின்றன என்றும் கண்டுபிடித்திருக்கிறார்கள் — பிரபஞ்சத்தில் சூரியனைச் சுற்றி பூமியும் மற்ற கிரகங்களும் வலம் வந்து கொண்டே இருப்பது போல.

சின்னஞ் சிறு அணுவிலும் மிக மிகச் சிறிய பகுதிதான் நியூக்ளியஸ். எனினும் ஒரு நீர்த்துளி அளவுக்கு நியூக்ளியஸ்களைப் பிரித்து எடுக்க முடியுமானால் அந்த ஒரு துளியின் எடை என்னவாக இருக்கும், தெரியுமா? இரண்டு மில்லியன் டன்!

நம்புவது கடினமாக இருக்கிறதல்லவா? இதே போல் நம்பக் கடினமான ஒரு காரியத்தை பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தினர் செய்திருக்கிறார்கள்! அணுவைப் பற்றிய ஓர் ஆராய்ச்சி நூலைத் தமிழில் வெளியிட்டிருக்கிறார்கள்! கல்லூரி மாணவர்களுக்கு — குறிப்பாக அணு ஆராய்ச்சித் துறையில் ஈடுபட விரும்பும் தமிழார்வம் உள்ள இளைஞர்களுக்கு — இந்த நூல் பெரிதும் பயன்படுவதோடு 'தமிழில் முடியும்' என்ற முறையிலே பெருமிதமும் அளிக்கும்.

பம்பாயில் உள்ள அணு ஆராய்ச்சி நிறுவனங்களில் பணியாற்றும் இருபத்தியொரு இளம் தமிழக விஞ்ஞானிகளின் கூட்டு முயற்சியினால் ''அணுவைப் பற்றி...'' என்ற இந்நூல் உருவாகியிருக்கிறது. நூல் வெளியீட்டு விழா அண்மையில் பம்பாயில் திரு நெடுஞ்செழியன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. நூலை வெளியிட பாபா அணு ஆராய்ச்சி நிறுவனத் தலைவரும் இந்தியாவில் மிகச் சிறந்த விஞ்ஞானிகளுள் ஒருவருமான விக்ரம் சாராபாய் வந்திருந்தார்.

விக்ரம் சாராபாய் வட நாட்டைச் சேர்ந்தவராயினும் தமிழ் நாட்டைச் சேர்ந்தவரை மணந்திருப்பதால் தமிழகத்தின் மாப்பிள்ளையாகக் கருதி நாம் பெருமைப்படலாம்.

இந்தியாவில் அணு ஆராய்ச்சித் துறைக்கு அடிக்கல் நாட்டியதுடன் மகத்தானதொரு மாளிகையையும் எழுப்பியவர் காலஞ்சென்ற திரு ஹோமி பாபா. விஞ்ஞானி பாபாவின் நினைவுக்கு இந்த நூலைச் சமர்ப்பித்து, முதல் புத்தகத்தை பம்பாய் மேயர் குல்கர்னி ஹோமி பாபாவின் சகோதரர் ஜே. ஜே. பாபாவிடம் வழங்கினார்.

இவ்விழாவின் முக்கியத்துவத்தை உணர்ந்து ஆங்கிலத்தில் தமது சொற்பொழிவைத் தயாரித்துக் கொண்டு வந்து படித்தார் திரு நெடுஞ்செழியன். விஞ்ஞானத் துறையில் மனிதனின் அறிவு வளர்ச்சி அடைந்த அளவுக்கு மனிதனின் மனம் வளர்ச்சி அடையாத காரணத்தினால்தானே இன்னமும் அணுகுண்டு சோதனைகளும் உற்பத்தியும் நடைபெறுகின்றன என்று கேட்டார் தொழில் அமைச்சர். அணு ஆராய்ச்சித் துறை ஆக்க ரீதியில் மட்டுமே செயலாற்றும் வகையில் மனித மனம் பண்பட வேண்டும் என்றார். அடுத்துத் தமிழிலும் சற்று நேரம் பேசி, தமிழக அரசின் கல்விக் கொள்கையையும் விளக்கினார். தமிழகத்தில் தமிழுக்கும் ஆங்கிலத்துக்கும் சம முக்கியத்துவம் அளித்து வருவதாயும் இதனால் தமிழகத்தில் விஞ்ஞானம் வளர்வதுடன் தமிழும் வேகமாக வளம் பெறும் என்றார். 'தமிழில் விஞ்ஞான நூல்களை எழுதும்போது தமிழில் ஒரு வார்த்தை இல்லையேல் ஆங்கிலவார்த்தையையே தமிழில் எழுதி விடுங்கள்' என்று தாம் கல்வித் துறையினருக்குக் கூறி வருவதைச் சொன்னார்.

பம்பாய் தமிழ்ச் சங்கத்தினர் வெளியிட்ட ''அணுவைப் பற்றி...'' என்ற புத்தகம் சிறப்பாக இருந்ததென்றால், வெளியீட்டு விழா அதனினும் சிறப்பாக இருந்தது. விழாவுக்குப் பின் அவர்கள் அளித்த விருந்து உயர்வாக இருந்ததென்றால் அந்த விருந்தின்போது ஸுட்டும் டையும் அணிந்த சங்க அங்கத்தினர்கள் கொஞ்சம் கூடச் சுய கௌரவம் பாராட்டாமல் தயக்கமின்றி விருந்தினருக்குப் பரிமாறியது அதைவிட உயர்வாக இருந்தது. பம்பாய் தமிழ்ச் சங்கத்தின் நற்பணிகள் அணுச் சக்தி பெற்று வளரட்டும்.

- நமது நிருபர்

# “சங்கீத கலாநிதி”

ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களைச் சென்னை சங்கீத வித்வத் சபையினர் இவ்வருட மகாநாட்டுத் தலைவராகத் தேர்ந்தெடுத்து, சங்கீத கலாநிதி விருது சூட்டுவது குறித்து எண்ணிறந்த இசையன்பர்கள் மகிழ்ச்சி அடைந்துள்ளனர். ஒரு பெண்மணிக்கு இப்பதவியும் பட்டமும் அளிக்கப்படுவது இதுவே முதன்முறை.

இவ்விதழ் அட்டையை அலங்கரிக்கும் எம். எஸ்ஸின் பெருமைகளை உலகமே அறியும். நீண்ட காலத்துக்கு முன்பே, தமிழகத்தின் தலைசிறந்த புகழ்படைத்த விதுஷியான எம். எஸ்., பிற்பாடு அகில பாரதத்திலும் எல்லையற்ற பிராபல்யம் பெற்று, இப்போது சர்வதேச அரங்கிலேயே மகத்தான கியாதி பெற்று விளங்குகிறார். கர்நாடக சங்கீத எல்லையை உலகம் தழுவ விஸ்தரித்ததில் எம். எஸ்ஸின் பங்கு ஈடிணையற்றது. ‘சங்கீதம் என்றால் எம்.எஸ்.’, ‘எம்.எஸ் என்றால் சங்கீதம்’ என்று கருதுபவர் அனந்தம்.

சங்கீதத்தை ஈசுவரார்ப்பணம் செய்கின்ற போதே, அதனால் சமூக நலப் பணிகளுக்கும் பெருதவி செய்யும் வள்ளல் என்கிற முறையில் எம். எஸ்ஸுக்கு நமது இசை வரலாற்றில் மட்டுமின்றி, சமூக சரித்திரத்திலுமே பெருமைக்குரிய இடம் உண்டு. எம். எஸ். இசையினால் ஆயிரமாயிரம் குழந்தைகள் பயிலப் பள்ளிகளை எழுப்பியிருக்கிறார். ஆயிரமாயிரம் நோயாளிகள் குணம் பெற இசையினால் வைத்தியசாலைகள் எழுப்பியிருக்கிறார். இன்னும் இதுபோல் எத்தனை எத்தனையோ புனிதப் பணிகளுக்காக இதுவரை சுமார் அரைக் கோடி ரூபாய் கிடைக்க உதவியிருக்கிறார். இவற்றால் பயன் அடைந்த அத்தனை உள்ளங்களும் அவரை வாழ்த்தும்.

எம். எஸ். குழந்தை உள்ளம் படைத்த ஓர் ஆதரிச ஹிந்து குடும்பத் தலைவி. பேராசை அவரை அண்டவே முடியாது. இப்படிப்பட்டவர் சங்கீதத்தின் மூலம் அநாயாசமான சாதனைகளைப் புரிந்து, கோடானு கோடி உள்ளங்களை நல்ல எண்ணங்களில் செலுத்த முடிந்திருக்கிறது என்பதிலிருந்து எளிமையின் சிறப்பே வெற்றி பெற்றதாகச் சொல்லலாம். அவரது சங்கீதமும், சமூகப் பணியும் என்றும் உயர்ந்தோங்க இசையன்னை அருள்வாளாக!

# “இசைப் பேரறிஞர்”

லயம் இன்றி உலக வாழ்வில்லை. இதைக் காட்டத்தான் மனிதனுடைய உயிர்ப்பின் அடையாளமாக நாடித் துடிப்பை இறைவன் ஏற்படுத்தியிருக்கிறான் போலும்!

சங்கீதத்தின் மாதாவாக சுருதியும், பிதாவாக லயமும் பேசப்படுகின்றன. இப்பேர்ப்பட்ட மகத்துவம் பொருந்திய லய ஞானத்தில் பூரண பக்குவம் பெற்ற மிருதங்க மகா வித்வான் பாலக்காடு ஸ்ரீ டி. எஸ். மணி அய்யர் அவர்களுக்கு இவ்வருடம் தமிழிசைச் சங்கத்தினர் ‘‘இசைப் பேரறிஞர்’’ என்ற விருதினை வழங்குவது சாலப் பொருத்தம்.

மிருதங்கத்தை நினைத்தவுடன் மணி அய்யர் நம் கண் முன் வந்து நிற்குமளவுக்கு அந்த வாத்தியத்துடன் ஐக்கியமாகியிருப்பவர் பாலக்காடு ஸ்ரீ மணி அய்யர் அவர்கள். சங்கீதக் கச்சேரியில் தாள வாத்தியத் தனி ஆவர்த்தனத்தைச் சபையோர் ஓய்வெடுத்துக் கொள்ளும் இடைவேளையாக நினைத்து வந்தபோது, இதுவும் கச்சேரியின் முக்கியமான அங்கம் என்று உணரும்படி தமது வாத்தியத்துக்கு ஏற்றம் அளித்தவர் மணி அய்யர். அவரது கற்பனை வளமும், பிருகருவும், கன நயமும், கச்சிதமும் அவருக்கே உரியவை. நல்ல சங்கீத ஞானமுள்ளவராதலால் கீர்த்தனங்களையும் அப்படியே மிருதங்கத்தில் வாசித்துவிடுவது போன்ற மாய மந்திரம் செய்பவர். பாடகர் காலப் பிரமாணம் தவறுதபடி பாடகருக்கே தமது வாசிப்பினால் அழுத்தமான பாட்டை அமைத்துத் தருபவர். இளம் பாடகர்களுக்கும் மனமார ஸ்ரீ மணி அய்யர் பக்கவாத்தியம் வாசிப்பது அவரது நல்லியல்பின் பிரதிபலிப்பு ஆகும். கண்டிப்பான கொள்கைகள் உடையவர். அவற்றைப் பளிச்சென்று வெளியிடவும் தயங்காதவர்.

இன்றைய தாள வாத்திய விற்பன்னர்களில் தலைமை ஸ்தானம் வகிக்கும் பாலக்காடு ஸ்ரீ மணி அய்யர் அவர்கள் மேலும் பேரும் புகழும், சீரும் சிறப்பும் பெற நந்திகேசுவரன் அருள்புரிவானாக!



# டாடாவிஷன்



டாடாவின் பெருநோக்கு. தீர்க்க தரிசனமுள்ள கருத்துக்கள் இருந்து என்ன? அவை மக்களிடையே பரவாவிட்டால் என்ன பயன்?— அவை மக்களைத் தழுவுது என்று செயல்படுத்த வேண்டாமா?

ஜாம்ஷெட்பூரில் நல்ல கருத்துக்கள் செயலாகாமல் வீணாவதில்லை. ஏற்ற உதவிகளும் சூழ்நிலையும் அங்கே உள்ளன. இத்தகைய ஒன்றே குடும்ப நலத்திட்டம்.

இந்தத் திட்டம் ஜாம்ஷெட்பூரில் தொடங்கிய மூன்று ஆண்டுகளுக்குள் 'விவாத-வட்டங்களில்' கலந்து கொள்வோர் தொகை பத்து மடங்காக உயர்ந்து விட்டது. விவாதத்தின் விளைவாக எழுந்த தெளிவான உறுதி: 1965-இல் ஜாம்ஷெட்பூரில் பிறப்புவிகிதம் குறையத் தொடங்கி விட்டது.

**டாடா எஃகு ஸ்தாபனத்தின் குடும்ப நலத் திட்டத்தினால் ஜாம்ஷெட்பூர் மக்களுக்கு என்ன பயன்?**

இரண்டு நவீன நகரத்துக் குடும்பத் திட்ட நிலையங்களும் ஆறு பிரசவ, குழந்தை பராமரிப்பு விடுதிகளும் இனமாகக் குடும்பக்-கட்டுப்பாட்டு சாதனங்களை வழங்குகின்றன, ஆலோசனை கூறுகின்றன.

இரண்டு நகர நிலையங்களிலும் டாடா மெயின் ஆஸ்பத்திரியிலும் 'வாஸக்டமி' ஆபரேஷன் செய்யப்படுகிறது. அதைச் செய்து கொள்ளும் கம்பெனி ஊழியருக்கு ஆபரேஷன் செலவு இல்லை. அதோடு ரொக்கப் பரிசாக ரூ. 200/- தரப்படுகிறது. போனவருஷம் ஆகஸ்டு டிசம்பர் காலத்தில் 1650 பேர் ஆபரேஷன் செய்து கொண்டதில் வியப்பில்லை. கம்பெனி ஊழியரின் மனைவியர் 'டியூபெக்டமி' ஆபரேஷன் செய்து கொண்டாலோ, 'லூப்' பொருத்திக் கொண்டாலோ ஊக்கப்படுத்தும் வகையில் ரொக்கம் வழங்கப்படுகிறது.

***டாடா ஸ்டீல***

TN 408

# மகிஷ உருவில் மகாதேவன்

ரா. கணபதி

"கரும்பு தன்னைக் கசக்கிப் பிழிபவனுக்கு மதுர ரஸத்தைத் தருகிறது; பக்தன் அப்படித்தான் இருக்க வேண்டும். இத்தகைய பக்தனைக் கட்டித் தழுவ இரண்டு கைகள் போதாவென்றே எனக்கு நாலு கைகள் இருக்கின்றன." — இப்படி பகவான் எங்கே சொல்லியிருக்கிறான்? எந்தப் புராணத்திலும் இந்தச் சந்தர்ப்பத்தைக் காண முடியாது. ஸ்ரீமத் பகவத்கீதைக்கு ஞானேசுவரர் இயற்றிய 'ஞானேசுவரி' என்ற உரையில் பக்தியைப் பற்றிப் பரமன் மொழியும் சுலோகங்களை விளக்குகையில், மேலே கண்ட தேனான எண்ணம் வாஸுதேவனின் வாய்மொழியாக நிரம்பி வழிகிறது.

'ஞானேசுவரி'தான் மராட்டிய இலக்கியத்தின் முடிமணி. கவித்துவம், தத்துவம் இரண்டுக்கும் ஈடற்றது அது. 'ஞானேசுவரி' படிப்பதற்காகவே மராட்டியமொழி பயில வேண்டும் என்பார்கள்.

ஞானேசுவரர் முதலிலேயே தமக்கென ஒரு ஸித்தாந்தத்தை வைத்துக் கொண்டு, "இந்த ஸித்தாந்தத்தைத்தான் கீதை சொல்வதாக எடுத்துக் காட்ட வேண்டும்" என்ற ரீதியில் கீதையை அணுகவில்லை. எவ்வித கோட்பாட்டிலும் சாராமல், கீதையை கீதையாகவே பார்த்தார். இதனால்தான் இன்று வெவ்வேறு ஸித்தாந்திகளும் அவரைத் தமக்கு ஆதரவாகக் காட்டிக் கொள்ள முடிகிறது.

பரம்பொருளுடன் ஒன்றி, அதுவாகவே அத்வைதமாகிவிடும் முக்தி நிலையைத்தான் அவர் சொல்கிறார் என்பதில் சந்தேகமே இல்லை. ஆனால் சம்பிரதாயமான அத்வைத மார்க்கத்தில் ஞானத்தின் மூலமே இந்த முக்தி நிலையைப் பெறலாம் என்றும், இதன் ஓர் அங்கமான மன ஒருமைப்பாட்டுக்கு உதவ பக்தி வேண்டும் என்றும், சித்த சுத்திக்காகக் கர்மம் வேண்டும் என்றும் கூறுவர். ஞானேசுவரரோ கர்மம் — அதன் மூலம் சித்த சுத்தி; பக்தி — அதன் மூலம் மன ஒருமைப்பாடு, இதன் **பிறகே** ஞானம்— அதன் மூலம் முக்தி என்கிற கிரமத்தை ஏற்கவில்லை. இவற்றில் ஒன்றுக்குப் **பின்** மற்றது என்றோ, ஒன்றிலிருந்து மற்றது மாறுபட்டது என்றோ அவர் கருதவில்லை. குறிப்பாக, பக்திக்கும் ஞானத்துக்கும் இடையே அவர் வித்தியாசம் காணவேயில்லை. இவ்வாறே யோக சாதனங்களையும் அவர் ஏற்றார். யோகம் கலந்த 'நாத சம்பிரதாய'த்தில் அவர் ஒரு முக்கியமான புள்ளி ஆவார்.

சில அம்சங்களில் அவர் ஒரு புரட்சியாளராகவே தோன்றுவார். 'சப்தம்' என்கிற வேதத்தைப் பிரமாணமாகக் கொண்டவையே வேதாந்த தரிசனங்கள். ஞானேசுவரரோ, முக்தி என்கிற ஆத்மானுபவத்துக்கு சப்தமும் பிரமாணமாகாது; அதற்குப் புறப் பிரமாணம் ஏதுமே தேவையில்லை என்றவர். 'சூரியன் அனைத்தையும் ஒளிரச் செய்வது போல், சுயம்பிரகாசமான மெய்ப்பொருள் எல்லா ஞானங்களையும் ஒளிரச் செய்கிறது. இந்த மெய்ப் பொருள் தன்னால்தானே விளங்குவது. எனவே இது உண்டு என்றோ இல்லை என்றோ வெளியே உள்ள ஒன்றால் நிரூபிக்க முடியாது. சப்தப் பிரமாணத்தால் ஆன்மானுபவத்தை விளக்க முற்படுவது, தீபத்தின் மூலம் சூரியனைக் காட்ட முற்படுவது போன்றதே' என்பது ஞானேசுவரரின் கருத்து.

இப்படிப்பட்டவருக்கு வாழ்க்கையின் மிகுந்த சோதனைக் கட்டத்தில் உதவி புரிந்தது வேத வாக்கியங்கள்தாம். அந்த வேத வாக்கியங்களை மொழிந்தது யார் என்று பார்த்தால் ஆச்சரியமாக இருக்கும்.

கோதாவரிக் கரையில் உள்ள ஆபேகாம் கிராமத்தைச் சேர்ந்த விடோபா ஒரு குலகர்ணி — அதாவது கணக்குப்பிள்ளை. அவருக்குக் கணக்கில் ஈடுபாடு இல்லை. ஒன்று, இரண்டு, மூன்று என்று அனந்தமான எண்களில் அவருக்கு மனம் செல்லவில்லை. ஒன்றை விட்டுத் தாண்ட மறுத்தது அவரது உள்ளம். எந்த ஒன்று இந்த எல்லாமாகவும் ஆகின்றதோ அந்த ஒன்றையே பற்றியிருந்தது விடோபாவின் சித்தம்.

இளம் பருவத்தில் அவர் க்ஷேத்திராடனம் புறப்பட்டார். புனாவுக்கு அருகே உள்ள ஆளந்தி என்ற ஊரில் சிதோபந்த் என்ற குலகர்ணியின் இல்லத்தில் தங்கினார். தவிர்க்க முடியாத ஒரு சூழ்நிலையில் சிதோபந்தின் மகள் ருக்மாபாயை மணந்தார்.

ஆயினும் விடோபாவால் இல்லறத்தில் ஈடுபட முடியவில்லை. தமது தந்தையும், தாயும் காலமானபின் அவர்களது அஸ்தியைக் கங்கையில் கரைப்பதாகச் சாக்கு சொல்லிக் கொண்டு, வீட்டை விட்டுப் புறப்பட்டார் விடோபா. காசி அடைந்தார். அங்கு ராமாசிரமர் என்ற துறவியிடம் அடைக்கலம் புகுந்தார். தமக்கு மனைவி இருப்பதைக் கூறாமலே, ராமாசிரமரிடம் துறவு பெற்றார். காசியிலேயே தங்கிவிட்டார்.

ராமாசிரமர் க்ஷேத்திராடனம் கிளம்பினார். எங்கெங்கோ சஞ்சாரம் செய்த பின் மகாராஷ்டிரத்தை அடைந்தார். ஆளந்திக்கே வந்து சேர்ந்தார்.

அங்கே அகவத்த விருக்ஷத்தைப் பிரதட்சிணம் செய்து கொண்டிருந்த ஒரு மங்கையை—பக்தியும் சோகமுமே உருவானவளை—கண்டார். அவளும் துறவியைக் கண்டாள். தியாக விருட்சமாக விளங்கிய அவரைப் பிரதட்சிணம் செய்து நமஸ்கரித்தாள்.

பிள்ளைப் பேறு இல்லாதவர்தாமே அரசமரப் பிரதட்சிணம் செய்வர்? இதனால் ராமாசிரமர், "பிள்ளைக் குட்டிகளைப் பெற்று வாழ்வாய்!" என்று அவளை ஆசிர்வதித்தார்.

அவள் சிரித்து விட்டாள்; ஆனால் அவள் கண்களிலிருந்தோ குபுகுபு என்று நீர் வழிந்தது. சிரிப்பொலியும் விம்மலும் கலந்தன.



படம் : கனுதேசாய்.

''என் கணவர் என்னை விட்டுக் காசி சென்று ஆண்டுகள் எத்தனையோ ஆகி விட்டன. அங்கே ராமாசிரமர் என்பவரிடம் சந்நியாசம் வாங்கிக் கொண்டு விட்டார் என்று தெரிகிறது. உயிருடனேயே அவரை இழந்து விட்டேன். நான் புத்திரவதியாவது எப்படி? ஆனால் மகானுகத் திகழும் தங்கள் வாக்குப் பொய்க்குமா?'' என்றுள் ருக்மா.

துறவி யோசனையில் ஆழ்ந்தார்.

க்ஷேத்திராடனத்தை அதோடு முடித்துக் கொண்டு காசிக்குத் திரும்பினுர் ராமாசிரமர். விடோபாவைக் கடிந்து கொண்டார். ''மல்லிகை மலர், அதன் காம்பைக் கவ்வியுள்ள மோதிலிருந்து விடுபடும்போது அந்த மலர் விடுதலைக்குப் பக்குவமாயிருப்பது மட்டுமின்றி, அதைப் பற்றியுள்ள மோதும் அதை விடுவிக்கப் பக்குவமாகி விரிந்து கொடுக்கிறது. நீ வீட்டிலிருந்து விடுபடும் மனேபாவம் பெற்றுல் மட்டும் போதுமா? நீ விடுபடுவதற்கு அநுமதி தருகிற அளவுக்கு உன் மனைவியையும் விடுபடச் செய்திருக்க வேண்டும். முடியாவிடில் நீ துறவு பூண்டே இருக்கக் கூடாது. ஒரு பெண்ணின் கண்ணீர் வெள்ளத்தின் மேல் நீ எப்படி முக்தி மாளிகை எழுப்ப முடியும்? உடனே ஆளந்திக்குத் திரும்பிப் போ. மனைவியிடம் அநுமதி பெற முடியுமானுல் துறவுக்குத் திரும்பு; இல்லாவிடில் இல்லறத்திலேயே இரு'' என்றுர்.

மகத்தான சோதனையைச் சுமந்து வீடு திரும்பினார் விடோபா!

இறைவன் லீலை செய்தான்.

விடோபா தாம்பத்தியம் மேற்கொள்ள வேண்டியதாயிற்று.

ருக்மாபாயின் சொப்பனத்தில் அசுவத்த விருட்சம் கம்பீரமாகத் தோன்றியது. தன் இலைகளை யெல்லாம் சலசலத்துப் புனிதமாகப் பேசிற்று. ''கணவனைக் குடும்ப வாழ்வில் ஈடுபடுத்தி விட்டோமோ என வருந்தாதே! உலக நலனுக்காக நாலு நன்மக்களை அவன் தரவே இந்த லீலை. என்னில் பிரம்மனும், விஷ்ணுவும், சிவனும் வசிக்கிறார்கள் அல்லவா? என்னை வலம் வந்த உனக்கு இம் மும்மூர்த்தியின் அம்சமாக மூன்று புதல்வர்கள் பிறப்பார்கள். இம்மூவருக்கும் முதலான பராசக்தியின் அம்சமாக ஒரு பெண்ணும் பிறப்பாள். இவர்களால் மகாராஷ்டிரம் வாழும்; பக்தியும் ஞானமும் சங்கீதமும் சங்கீர்த்தனமும் வாழும்!''

சந்நியாசத்திலிருந்து கிருஹஸ்த தர்மத்துக்குத் திரும்பிய விடோபா நான்கு குழந்தைகளுக்குத் தந்தையானார். சிவாம்சமாக நிவிருத்திநாதன் பிறந்தான். பிரம்ம அம்சமாக சோபான தேவர் ஜனித்தார். தேவியம்சமாக முக்தாபாய் தோன்றினாள். நாராயண அம்சமாக அவதரித்தார் ஞானேசுவரர்.

தெய்வாம்சமாகிய குழந்தைகளைக் கண்டு ஊர் சிரித்தது. 'சந்நியாசி பெற்ற குழந்தைகள்' என்று எள்ளி நகையாடியது.

அவர்களைக் குற்றம் சொல்லுவது தகாது. துறவி இல்லறத்துக்குத் திரும்புவது கேள்விப்படாத ஒன்றுதானே? சாஸ்திரத்தில் நம்பிக்கை உள்ள சமூகம் இதை எப்படி ஒப்பும்?

''குழந்தைகள் படும் சிறுமையைக் காண மனம் கொதிக்கிறது. கங்காதேவிதான் அந்தக் கொதிப்பைத் தணிக்க வல்லவள். கங்கையிலேயே இந்த உடலை விட்டு அந்தத் தியாக சக்தியால் குழந்தைகளை வாழ்விப்போம்'' என்றார் விடோபா.

முன்பு வீட்டிலிருந்து விடுதலை பெறக் காசி சென்ற விடோபா, இப்போது உலகிலிருந்தே விடுதலை பெற, தம்பதி சமேதராக அங்கு சென்றார்.

ராமாசிரமரின் பாதங்களைப் பற்றிக் கொண்டு கண்ணீர் விட்டார். ''துறவியாகிச் செய்த தவத்தையெல்லாம் இல்லறத்தில் இழந்தேன். இப்போது ஆன்மஹத்தி என்ற பாவத்துக்கும் ஆளாகிறேன்'' என்றார்.

குரு கனிந்து புன்னகை பூத்தார். ''உன் தவம் வீணானால் என்ன? என் தவத்தையெல்லாம் உனக்கே தந்தேன். என் வார்த்தையால்தானே நீ இல்லறம் திரும்பினாய்? அதன் விளைவுக்கு என் தவமெல்லாம் பயனாகட்டும். இனி உனக்கு உலகவாழ்வு அவசியமில்லைதான். பத்தினியோடு கங்கா பவானியிடம் ஐக்கியமாகிவிடு. மக்களுக்காக உங்கள் உள்ளத்தில் பெருகும் தியாக கங்கையும் கலந்து கங்காதேவி மேலும் புனிதமாகட்டும்'' என்றார்.

விடோபாவும் ருக்மாபாயும் பாகீரதிக்குள் பிரவேசித்து இன்னுயிரை நீத்தனர்.

சுடச்சுட ஒளிருவதல்லவா பொன்? விடோபாவின் தங்கக் குழந்தைகளின் பிரகாசம் நன்கு பொலிவதற்கு இன்னும் சோதனைகள் தேவையாயிருந்தன.

அவர்களைச் சமூகம் பிரஷ்டம் செய்தது.

சின்னஞ் சிறு உள்ளங்கள் குற்றச்சாட்டில் நொந்தன. ஞானேசுவரன் பொங்கினான்.

தேவகிரியிலிருந்த மன்னர் ராமதேவ ராயரைச் சென்றடைந்தான். ராஜசபையில் வேகிற நெஞ்சோடு அலறினான்.

''என் பிதா உலக வாழ்வில் இச்சை கொண்டவர் அல்லவே அல்ல. அப்படிப் பட்டவர், குருவின் ஆணைக்காகவும் மனைவியின் விருப்பத்துக்காகவும் இல்லற வாழ்வில் ஈடுபட்டது ஈடிணையற்ற தியாகம் அல்லவா? அவரை உலகம் பழிக்கலாமா? மன்னவா! இதை நீ அனுமதிக்கலாமா?'' என்று கண்களில் கண்ணீர் வழியக் கதறினான்.

அரசன் உள்ளம் நெகிழ்ந்தது. எனினும் தான் அரசன் என்பதைக் கொண்டு எல்லாத் துறைகளிலும் இஷ்டப்படி பிரவேசிக்கக் கூடாது என்று தன்னைத்தானே கட்டுப்படுத்திக் கொண்டு, மாண்புடன் கூறினான்: ''குழந்தாய்! நீ சொல்வதை நான் மனப் பூர்வமாக ஒப்புக் கொள்கிறேன். ஆயினும் இது சாஸ்திர சம்பந்தப்பட்ட விஷயம். இதில் முடிவு சொல்ல எனக்கு உரிமை இல்லை. பைத்தானு நகரத்தில் உள்ள பிராமண சிரேஷ்டர்களின் சபைக்குச் செல். அவர்கள் முடிவு சொல்லட்டும்'' என்றான்.

அந்தச் சிறுவர்கள் நால்வரையும் முத்துச் சிவிகையில் ஏற்றி அனுப்பினான்.

பைத்தானுவில் அந்தணர்களின் அவையில் நியாயம் கோரினான் ஞானேசுவரன்—மறைந்த பெற்றோரின் நற்பெயரை நிலைநாட்ட.

''நீ சொல்வதெல்லாம் சரி, பிள்ளாய்! ஆனால் மன்னன் எப்படித் தனக்கு முடிவு வழங்க உரிமை இல்லை என்றானோ, அப்படியே நாங்களாகவும் இதில் முடிவு எடுப்பதற்கில்லை. வேதம் சொல்கிற முடிவுதான் எங்கள் முடிவு. துறவறத்திலிருந்து இல்லறம் திரும்புவதை வேதம் ஒப்புவதாக எங்களுக்குத் தெரியவில்லை. உனக்கு ஆதரவாக நீ வேத வாக்கியங்களைக் காட்ட முடியுமாயின், நாங்கள் ஒப்புக் கொள்கிறோம். எங்களுக்கு வேண்டியது வேதத்தின் ஆதாரம். அதை நீதான் எடுத்துக் காட்ட வேண்டுமென்பதில்லை. அதோ தெருவில் மேய்கிறதே, ஞான சூனியமான எருமை மாடு, அது எடுத்துக் காட்டினால் கூட வணங்கி ஏற்கிறோம்'' என்றனர் பிராமண சபையினர்.

ஞானேசுவரன் மகா புத்திமான். இதயத்தைப் போலவே அவனது அறிவும் பெரிது. சிறு பிராயத்திலேயே சகல சாஸ்திரங்களிலும் கரை கண்டவன். இப்போது தனக்கு ஆதரவான வேத மந்திரங்களை அவன் கண்டான். எனினும் அவற்றைத் தன் வாய்மொழியாகக் கூற அவன் விரும்பவில்லை. தன் பெற்றோரைப் பழித்தது போலவே, அந்த எருமை மாட்டை அவர்கள் பழித்ததும் அவன் நெஞ்சைச் சுட்டது. 'பிரபஞ்சத்தில் ஒவ்வொரு ஜீவராசி ஒவ்வொரு பயனுக்காக ஏற்பட்டிருக்கிறது. இந்த எருமையும்

அப்படி சிருஷ்டிக்கப்பட்டது. கெட்டியான பாலைப் பொழிந்து உபகாரம் செய்கிற அந்த ஜீவனை மநுஷ்யனின் புத்தி சக்தியால் எடை போட்டுப் பழிப்பானேன்? இந்த மகிஷம் கடவுளின் படைப்பு மட்டும்தானா? யாவுமான ஆண்டவனின் ஓர் உருவம்தானே இது? காலனின் வாகனமாகிய இந்த மகிஷமே காலகாலனாகி, வேத மந்திரம் மொழியலாகாதா என்று எண்ணினான். துர்காதேவி வேதங்களில் விளையாடும் தன் பாதங்களை மகிஷத்தின் சிரத்தில்தானே பொருத்தி நிற்கிறாள்?' எருமையை ஒருமை மனத்துடன் கும்பிட்டான்.

'ஸகல லோகமாம் ஸஹுனே வந்தே!' என்று வைஷ்ணவனைக் குறித்துச் சொல்கிறார் நரஸி மேதா. எல்லா வஸ்துக்களையும் நாராயண ஸ்வரூபமாகக் கண்டு வணங்குபவனே வைணவன் என்கிறார். இவ்விலக்கணத்துக்கு இலக்கியமானான் ஞானேசுவரன்.

அஞ்ஞானத்தின் உருவமாகச் சொல்லப்படும் மகிஷத்தை ஞான பூரணமாகப் பார்த்தான் ஞானேசுவரன். மகிஷத்தை வணங்கி, ''மறை மந்திரம் கூறி இந்த அந்தணர்களுக்கு மதிநலம் தருவாய்'' என்று பிரார்த்தித்தான்.

அடுத்த கணமே எருமை வாய் திறந்தது. திவ்வியமான குரலில் மறை மொழிகளைக் கோஷிக்கலாயிற்று.

'அமுத நிலை அடையத் தியாகமே உபாயம்' என்பதை வேத வாக்கியங்களால் நிலைநாட்டியது. அதிலிருந்து துறவறத்தையும் துறந்த விடோபாவின் தியாகம் அவரை அமுத நிலையில் சேர்த்துவிட்டதை உணர்த்தியது. ''பிறப்பால் அனைவரும் தொழிலாளிகளே! தொழிலைச் செம்மையாகப் புரிவதால் அனைவருமே பிரம்ம ஞானம் பெற்ற பிராமணர் ஆகின்றனர்'' என்று ஓதியது எருமை.

பிராமண சிரேஷ்டர்கள் இந்த அற்புதத்தைக் கண்டு புளகமுற்றனர். மகிஷத்தை வணங்கினர். ஞானேசுவரனையும் வணங்கினர்.

தந்தைமீது படிந்திருந்த குற்றக் கறையை நீக்கிவிட்டான் ஞானேசுவரன்.

'உள்ளத்தில் கள்ளமின்றி உதிக்கும் அன்பு உணர்வுக்கு அதுவே பிரமாணம். இதற்கு வேதப்பிரமாணம் தேடுவானேன்?' என்பதில் அவனது மனம் தீவிரமாகச் சென்றது. இதுவே ஆத்மாநுபவம் என்ற பேரன்புக்கு வேதமும் பிரமாணமாகாது என்று அவனைப் பிற்காலத்தில் மொழிய வைத்தது.

ஜீவராசிகளைத் தாழ்வாகப் பார்க்க இயலாதவர் ஞானேசுவரர். உலகை மாயை என்று கூறும்போது, அதில் தாழ்வாகப் பார்க்கும் பாவனையே அல்லவா உள்ளது? ஞானேசுவரர் இதை ஒப்பவில்லை. உலகம் என்பது பரம்பொருளின் 'சித்விலாசம்' என்று உயர்த்திப் பேசினார். 'பொன்னின் அழகும், பிரகாசமும் அதைப் பல அணிகளாகச் செதுக்கிப் பார்த்தால்தானே தெரிகிறது? அப்படியே பரம்பொருளின் பிரபாவம் பலவான உலகப் பொருட்களால்தான் வெளிப்படப் பிரகாசிக்கிறது. எல்லாம் அதே பொன்தான். ஆனால் பொன்னின் அழகு தெரிய இத்தனை நாமங்களும் ரூபங்களும் உள்ளன' என்றார்.

அழகுக் கண் வாய்த்த ஞானேசுவரர் பக்தியின் எல்லையில் பக்தனே பரமனாகி விடுவதையும் கண்டார். அதாவது பக்தியும் அத்வைதத்தில் முடிவதாகக் கண்டார். அன்பு செய்பவனே அன்பு செய்யப் படுபவனும் ஆகிறான் —அலை மடிந்து கடலில் விழுந்து கடலே ஆவது போல. சிவத்தில் ஐக்கியமான சக்தி இதைத்தான் உணர்த்துகிறாள். 'மொழிகிற உதடுகள் இரண்டாயினும், மொழி ஒன்றுதான்; பார்க்கிற கண்கள் இரண்டாயினும் பார்வை ஒன்றுதான். மேளம், கரம் என்ற இரண்டு மோதினாலும் பிறப்பது ஒரு நாதம்தான். இப்படியே சிவமும் சக்தியும். இப்படியே பரமாத்மனும் ஜீவாத்மனும்' என்றார்.

ஞானேசுவரரும், அவரது சோதர சோதரியும் செய்த அற்புதம் பல. மகாராஷ்டிரத்தில் பக்தியும் ஞானமும் தழைக்கச் செய்தனர்.

ஞானேசுவரி என்ற கீதா பாஷ்யம், அமிருதாநுபவம் என்ற அமுத நூல், இருபத்தெட்டு அபங்கங்கள் அடங்கிய ஹரிபாட் என்ற சங்கீர்த்தன கிரந்தம் ஆகியன ஞானேசுவரர் வழங்கிய ஞானச் செல்வங்கள்.

இருபத்தொரு பிராயத்துக்குள் இத்தனையும் செய்த ஞானேசுவரர் தம்மை உயிரோடு வைத்தே சமாதி எழுப்புமாறு பக்தர்களைக் கோரினார். அந்தச் சமாதியின் மூடுகல்லை அவரது தமையனார் நிவிருத்திநாதரே வைத்தார் — தமது தம்பி பிரபஞ்சத்தின் ஆன்மாவாகிவிடும் மகிமையை அநுபவித்தவாறு.

தேவாளா ஆளந்தி என்று பக்தர்கள் போற்றும் தலமே அந்தச் சமாதி.



## மகாத்மாவின் மணிமொழி

என் வாழ்க்கையில் நான் பெரிதாக எவற்றைச் சாதித்திருந்தாலும், அவற்றைப் பகுத்தறிவின் தூண்டுதலால் செய்யவில்லை. உள்ளுணர்ச்சியின் உந்துதலாலேயே செய்திருக்கிறேன். அதாவது ஆண்டவனின் தூண்டுதலாலேயே செய்துள்ளேன் எனலாம்.

நான் நம்பிக்கையே உருவானவன். ஆண்டவன் ஒருவனைத்தான் நான் சார்ந்திருக்கிறேன். என்னை ஓர் அடி முன்னால் அழைத்துப் போனாலும் போதும். அடுத்த அடி என்ன என்பதை நான் அறியவேண்டிய காலம் வரும்போது அவனே அதைத் தெளிவு படுத்துவான்.



## தூக்கக் கலக்கமா?

கிட்டுவுக்குத் தூக்கக் கலக்கம். பரீட்சைக்குப் படிக்க உட்கார்ந்தான். மாலையில் விளையாட்டு மைதானத்தின் அலுப்பிலே சாப்பிட்டு உட்கார்ந்ததும் தூக்கம்தான் கண்களைச் சுற்றியது. மனம் படிக்க விரும்பினாலும் உடல் தூக்கத்தை வேண்டிக் கெஞ்சியது. தன்னையறியாமல் கண்ணயர்ந்து போனான்...... விளக்கு எரிந்து கொண்டிருக்க இவன் தூங்குவதைக் கண்ட அப்பா ஓர் அதட்டல் போட்டார். திடுக்கிட்டு விழித்த அவன் கண்ணில் முதலில் பட்டது இந்த டைம்பீஸ்தான். ஆனால் அது ஏதோ மாதிரியாக (தலைகீழாக)த் தெரிந்தது. கிட்டுவுக்கு மணி என்ன ஆகிறது என்பதைக் கூறுவீர்களா? முடியாவிட்டால் அவனே கண்ணைக் கசக்கிக் கொண்டு அடுத்த பக்கம் புரட்டி விடுவான்.

போட்டோ அனுப்பியவர்:
வி. எஸ். சுதர்சனம்




தயாரிப்பு: வாண்டுமாமா



## இதற்கும் அதற்கும்

இங்கே இரண்டு படங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. பார்த்தால் ஒன்றே போலத் தோன்றினாலும் இரண்டுக்கும் பன்னிரண்டு மாறுதல்கள் இருக்கின்றன. அவை என்னவென்று உங்களால் சொல்ல முடியுமா?



## தப்பு...தப்பு...தப்பு...!

தூரதரிசினியை (டெலஸ்கோப்) கண்டு பிடித்தது யார் என்றதும் உடனே நீங்கள் பாட புத்தகத்தில் படித்தபடி கலிலியோ என்றுதான் கூறுவீர்கள். ஆனால் டெலஸ்கோப்பைக் கண்டு பிடித்தது கலிலியோ அல்ல. அதைப் பயன்படுத்தியவர் கலிலியோ. அதைக் கொண்டு ஜூபிடர் கிரகத்தின் சந்திரன்களைக் கண்டறிந்தார். ஹாலந்தைச் சேர்ந்த மிடில்பர்க் நகரவாசியான மூக்குக் கண்ணாடி தயாரிப்பாளர் ஹான்ஸ் லிப்பர்ஷே என்பவர்தான் முதலில் டெலஸ்கோப்பைத் தயாரித்த பெருமைக்குரியவர். ரோஜர் பேகன் என்பவர்கூட டெலஸ்கோப் உருவாக்கியதற்கான புகழுக்குரியவர்தாம். கண் சம்பந்தமான விஷயங்களில் வல்லவராக விளங்கிய பேகன் இரண்டு லென்ஸ்கள் தூரதரிசினியாகச் செயல்படக்கூடிய சாத்தியக்கூறுகளைப் பற்றி விவரித்திருக்கிறார். என்றாலும் முதல் டெலஸ்கோப்பைத் தயாரித்தவர் ஹான்ஸ் லிப்பர்ஷேதான் என்று ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது. 1608ம் ஆண்டு அக்டோபர் மாதம் இவர் தம் கண்டு பிடிப்பை நாட்டிற்கு வழங்கினார்.





### இதற்கும் அதற்கும் விடைகள்

1. முதல் மீனின் வாயின் கீழுள்ள தாடியில்.
2. 2வது மீனின் வாலில்.
3. 3வது மீனின் முதுகுக் கோடுகளில்.
4. இடது கோடியில் நீர்க் குமிழ்.
5. தூண்டிலின் அருகேயுள்ள நீர்க்குமிழ்.
6. தூண்டிலில் உள்ள புழு.
7. 4வது மீனின் முதுகுப்புறச் செதில்களில்.
8. 4வது மீனின் கன்னத்தில் உள்ள புள்ளி.
9. 5வது மீனின் வாலில்.
10. மேலுள்ள நீரோட்டக் கோடுகளில்.
12. 2வது மீனின் அடிப்பாகச் செதில்களின் கோடுகளில்.



## விஷ்ணு சக்கரம் !

தீபாவளியில் ஏராளமான வாணங்களும் வெடிகளும் கொளுத்தி விருப்பீர்கள்! விஷ்ணு சக்கரம், தரைச் சக்கரம் எல்லாம்தானே? அந்தத் தரைச் சக்கரத்தைப் போலப் பெரிய அளவில் விளையாட்டு மைதானத்தில் (மரவட்டைச் சுருள் போல) கோடு கிழியுங்கள். நீங்கள் சைக்கிள் விடுவதில் ரொம்ப 'எக்ஸ்பர்ட்' என்று கேள்விப்பட்டேனே? உண்மைதானா? அப்படியானால் உங்களுக்கு இந்த விளையாட்டின் மூலம் ஒரு 'டெஸ்ட்' வைக்கப் போகிறேன். சுழன்று சுழன்று உள்ளடங்கும்படி கோடு வரைந்திருக்கிறதே அதன் வெளி நுழைவாயிலுக்குள்ளிருந்து சைக்கிள் விட ஆரம்பிக்க வேண்டும். கோட்டின்மீது ஏறாமல், கால்களைக் கீழே வைக்காமல் நடு மையத்துக்கு சைக்கிளை ஓட்டிச் செல்ல வேண்டும். நேராக வேகமாகச் சைக்கிளை ஓட்டிவிடலாம். இப்படி வளைந்து வளைந்து சுழியிட்ட பாதைக்குள் ஓட்டுவது சுலபமல்ல. நிதானம், சமநிலை தவறாத (பாலன்ஸ்) தன்மை, லாகவம் இவை இருந்தால்தான் இந்த விளையாட்டில் வெற்றிபெற முடியும்.

## தெரியுமா, முடியுமா?

விளையாட்டுப் போட்டி. ஏராளமான கூட்டம். வெற்றி தோல்வியைக் கண்டு களிக்க. சின்ன 'ஒலிம்பிக்' போல அந்த மைதானம் காணப்பட்டது. வெற்றியடைந்து கொண்டிருக்கும் கட்சியோ மின் வாங்கிக் கொண்டிருந்தது. 'இது எப்படிச் சாத்தியமாகும்?' என்று கேட்கிறீரா? அதுதான் எனக்கும் புரியவில்லை. ஆனால் உண்மை என்னவோ அது தானும். புரிய வைக்க முடியுமா உங்களால்?

([illegible])

## தெரிஞ்சுக்கோ !

☐ 'போலோ' என்பது ஒரு சுவாரஸ்யமான விளையாட்டு. அழகும் வேகமும் திறமையும் கொண்ட குதிரைகளின் மீதிருந்தவாறே ஹாக்கிக்குப் பயன்படுவது போன்றதோர் மட்டையின் உதவியால் பந்தை அடித்து விளையாடுவது. ரொம்ப நன்றாக இருக்கும். ஆனால் இன்றைக்கு மேலே நாட்டவரின் விருப்பமான விளையாட்டாக இருக்கும் இதன் பிறப்பிடம் எது தெரியுமா? பாரதம்தான். நம் நாட்டிலிருந்து கற்றுக் கொண்டு போன ஆங்கிலேயர்கள் இன்று இதை விளையாடும்போது நாம் திறந்த வாய் மூடாமல் பார்த்துக் கொண்டிருக்கிறோம். பெருமைதானே!

☐ மிதக்கும் பனிப் பாறைகளைப் பற்றி (ஐஸ்-பர்க்) படித்திருப்பீர்களே. (பார்த்திருக்க முடியாது!) அவை வெள்ளையாக இருக்கும் என்றுதானே நினைக்கிறீர்கள்? ஐஸ் வெள்ளை, அதனாலான பாறையும் வெள்ளையாகத்தான் இருக்கும் என்பது உங்கள் வாதமாக இருக்கலாம். ஓரளவு உண்மைதான். ஆனால் வண்ண வண்ணப் பனிப் பாறைகளும் உண்டு. கடலில் பல வண்ணத் தாவரப் பொருள்கள் கலந்திருக்கின்றன. இந்தக் கடல் நீர் பனிப் பாறைகளாக உறையும்போது வண்ண வண்ணப் பனிப் பாறைகளும் தோன்றுகின்றன.

☐ தெருக்களுக்குப் பெயரோ வீடுகளுக்கு இலக்கமோ இல்லாததோர் நகரம் இருந்தது தெரியுமா? துருக்கி தேசத்தில் உள்ள கான்ஸ்டாண்டிநோபிள் நகரம்தான் இத்தகைய சிறப்பும் பெற்றது. இந்த நகரம் தோன்றி 1600 ஆண்டுகள் வரை இதிலுள்ள தெருக்களுக்குப் பெயரோ வீடுகளுக்கு இலக்கமோ இடப்படவில்லை. 1916க்குப் பிறகுதான் தெருக்கள் பெயர் பெற்றன; வீடுகள் எண்ணைப் பெற்றன!



"அப்பா! 'நம்மாத்து கார் 'ஷெட்' நன்னாவே இல்லே. இடிச்சுட்டுப் புதுசா கட்டணும்'னு அம்மா சொல்லிண்டிருந்தாளே...."

"அவளுக்கென்ன, ஏதாவது ஒன்றைச் சொல்லிண்டிருப்பாள். பணத்துக்கு எங்கே போறது?"

"பைசா செலவில்லாமல் பாதி வேலே முடிஞ்சுதே! இடிச்சாச்சு, கட்டவேண்டியதுதான் பாக்கி!"



தூக்கக் கலக்கமா ? - விடை:
மேலே பார்த்தபோது கடிகாரம்
காட்டிய மணி இதுதான்.

# கப்பித்தான் அணிந்த ஆடவன்



## கப்பித்தான் சட்டை

- கழுத்தின் வடிவத்துக்குப் பொருந்தும்படியான காலர்
- கச்சிதமாகப் பொருந்தக்கூடிய தோள்ப் பாகம், கைப்பாகம்
- உடலுக்கு அழகாக அமையும்படியான நடுப் பாகம்
- பிதுங்கி மேலே வராத வண்ணம் சட்டையின் நீண்ட கீழ்ப்பாகம்
- ஸ்பெஷலாக உறுதியுடன் 'க்ராஸ் ஸ்டிச்' போடப்பட்ட பித்தான்கள்
- இஸ்திரி மிகக் குறைவே தேவை

**கோல்ட் ஸ்டார்**
'டெரின்'/காட்டன். இஸ்திரி தேவையில்லை
**ஸில்வர் ஸ்டார்**
2x2, சுத்திகரிக்கப்பட்ட சூப்பர்பைன் பருத்தியாலானது. இஸ்திரி மிகக் குறைவே போதும்
**ப்ரான்ஸ் ஸ்டார்**
100 சதவிகிதமும் பருத்தியாலானது
தேர்ந்தெடுக்க ஒயிட், ஐவரி, க்ரே, புளு, ஃபான் ஆகிய கவர்ச்சியான வண்ணங்கள்,மற்றும் கட்டங்களும் கோடுகளும் போடப்பட்ட பகட்டான ரகங்கள் உள்ளன

**பாம்பே டையிங்**

# பொன்னியின் செல்வன்

அமரர் **கல்கி**



## நாற்பத்துநான்காம் அத்தியாயம்

## "எல்லாம் அவள் வேலை!"

மாமல்லபுரத்து மகா சிற்பிகளின் பரம்பரையில் தோன்றிய சிற்பக் கலைஞர் ஒருவர் இப்போது முன் வந்தார். புதிய முறையில் கருங்கற்றளி அமைப்பதற்கு அவருடைய மனோதர்ம கற்பனைப்படி சிறிய பொம்மைக் கோயில் ஒன்று அவர் செய்து கொண்டு வந்திருந்தார். அதை இப்போது மகாராணியிடம் காட்டினார்.

அதைப் பார்த்து மகாராணி மிகவும் வியந்தார். ஆழ்வார்க்கடியானுக்கு அருகில் நின்றவரைப் பார்த்து, "பட்டரே! இந்த ஆலய அமைப்பு எவ்வளவு சிறப்பாயிருக்கிறது, பார்த்தீர்களா? தமிழகத்திலுள்ள முக்கியமான சிவஸ்தலங்களிலெல்லாம் இம்மாதிரி புது முறையில் ஆலயம் எடுப்பிக்க வேண்டும் என்று என்னுடைய உள்ளத்தில் ஆவல் பொங்குகிறது!" என்று சொன்னார்.

"தாயே! தங்கள் விருப்பம் நிறைவேறுவதில் தடை என்ன இருக்கிறது? தேவாரப் பதிகப் பாடல் பெற்ற சிவஸ்தலங்களில் இம்மாதிரி கற்றளிகள் எடுப்பிக்கலாம். இந்த ஆலய அமைப்பைப் பார்த்தவுடனே இது 'பாடல் பெற்ற ஸ்தலம்' என்பதை ஜனங்கள் உணர்ந்து கொள்வார்கள்!" என்று சொன்னார் ஈசான சிவபட்டர்.

"ஆம், ஆம்! அப்பர் பெருமானும் ஞானசம்பந்தரும் சுந்தரமூர்த்தியும்



பாடிய பதிகங்களையெல்லாம் சேகரிக்க வேண்டும். அவர்களுடைய பாதங்கள் பட்டுப் புனிதமாகி, அவர்களுடைய பாடல்களினால் தெய்வீக மடைந்த ஸ்தலங்களில் எல்லாம் இம்மாதிரி வானளாவிய விமான கோபுரங்களுடன் கற்றளிகளை எடுக்க வேண்டும். இந்த இரண்டுந்தான் என் மனோரதங்கள். இவை நிறைவேறுமா என்று அடிக்கடி ஐயம் உண்டாகிறது. என்னுடைய நாயகர் மட்டும் மேற்குத் திசை சென்று அகாலத்தில் இறைவன் திருவடிகளைச் சேராதிருந்தால்,—இன்னும் சிலகாலம் ஜீவித்திருந்தால்,—என் மனோரதங்கள் எல்லாம் நிறைவேறியிருக்கும்....''

''இப்போது மட்டும் என்ன குறைவு, தாயே! தாங்கள் நினைத்ததை நினைத்தபடி நிறைவேற்றித் தர வேண்டும் என்று சக்கரவர்த்தி கட்டளை பிறப்பித்திருக்கிறார் அல்லவா? அவருடைய புதல்வர்கள் இருவரும் தாங்கள் மனத்தில் நினைப்பதற்கு முன்னாலேயே, தங்களுக்கு இது விருப்பமாயிருக்கும் என்று ஊகித்தறிந்து, அதை நிறைவேற்றச் சித்தமாயிருக்கிறார்கள். அப்படியிருக்கும் போது....''

''இருந்தாலும் என் மனத்தில் இப்போது அவ்வளவு உற்சாகம் இல்லை. ஏதேதோ கேள்விப்படுகிறேன். நான் செய்யும் கோயில் திருப்பணியினால்

அரசாங்கப் பொக்கிஷம் காலியாகி விடுகிறதென்று சிலர் குறைப்படுகிறார்களாம். 'சிவனுக்கு இவ்வளவு ஆலயங்கள் என்னத்திற்கு?' என்று கேட்கிறார்களாம். மற்றவர்கள் கேட்பதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. காஞ்சியில் உள்ள இளவரசர்கூட....''

இவ்விதம் பெரிய பிராட்டியார் சொல்லிய போது, ஆழ்வார்க்கடியான் ஓர் அடி முன்னால் வந்து நின்று, ''தாயே! அந்த மாதிரி கேட்பவர்களில் அடியேனும் ஒருவன்!'' என்றான்.

மகாராணி அவனைச் சற்று வியப்புடன் பார்த்தார். மற்றவர்கள் 'இது என்ன விபரீதம்?' என்ற முக பாவத்துடன் ஆழ்வார்க்கடியானை உற்று நோக்கினார்கள்.

ஆழ்வார்க்கடியான் மேலும் தொடர்ந்து ஆத்திரம் ததும்பிய குரலில், ''அன்னையே! என் வயிறு கொதிக்கிறதே! இந்த மாதிரி அநியாயம் உண்டா? தர்ம தேவதையின் அவதாரமாக விளங்கும் தாங்கள் இந்த அநீதிக்கு இடம் கொடுக்கலாமா?'' என்று அலறினான்.

திருமலையப்பனுக்குப் பக்கத்தில் நின்ற ஈசான சிவபட்டர், ''மகாராணி! என் சகோதரன் இப்படித்தான் ஏதாவது உளறுவான். திடீரென்று அவனுக்கு வெறி வந்துவிடும். தயவுசெய்து மன்னித்து அருள வேண்டும்!'' என்றார்.

அக்காலத்தில் சைவர்களும் வைஷ்ணவர்களும் தனித் தனி ஜாதியாகப் பிரிந்திருக்கவில்லை. ஒரே குடும்பத்தில் சைவப் பற்றுள்ளவர்களும் வீர வைஷ்ணவர்களும் இருப்பார்கள். ஒரே பட்டர் சிவன் கோவிலிலும் திருமால் கோவிலிலும் பூஜா கைங்கரியம் செய்வார். ஈசான சிவபட்டர் அத்தகைய பரந்த நோக்கம் கொண்டவர். திருமலையப்பன் அவருடைய ஒன்றுவிட்ட சகோதரன். இருவரும் பரஸ்பரம் மிக்க அன்பு கொண்டவர்கள். ஆகவே தம்பியின் பதற்றமான பேச்சுக்காக ஈசான சிவபட்டர் மகாராணியிடம் மன்னிப்புக் கோரினார்.

தேவி புன்னகை புரிந்து, ''திருமலை! சற்று அமைதியாகப் பேசு! இப்போது என்ன அநியாயம் நடந்துவிட்டது?'' என்று கேட்டார்.

''அம்மா! பேயாண்டியும் கையில் கபாலம் ஏந்திப் பிகைஷ எடுத்துப் பிழைப்பவனுமாகிய சிவனுக்கு எத்தனை ஆலயங்கள்? எத்தனை மாடக் கோயில்கள்? எத்தனை கற்றளிகள்? உலகத்தையெல்லாம் காத்து ரக்ஷிக்கும் விஷ்ணுமூர்த்திக்கு ஒரு திருக்கோயில் கூடக் கிடையாதா? ஒரு பழைய கோயிலைத் திருப்பணியாவது செய்யக் கூடாதா?'' என்று திருமலையப்பன் ஓலமிட்டான்.

''அம்மா! அகில புவனமும் உய்ய ஆனந்த நடனமாடும் பெருமானுக்கு அரங்கமும் அம்பலமும் சிற்சபையும் பொற்சபையும் மாடக் கோயிலும் மதில் சூழ்ந்த மாளிகையும் வேண்டும். ஓயாமல் தூங்குகிற திருமாலுக்கு ஒரு சிறிய இடம் போதாதா? தீபம் இல்லாத இருட்டறைதானே அவருக்கு வேண்டும்? மாடக் கோயில்களும் கற்றளிகளும் என்னத்திற்கு?'' என்றார் ஈசான சிவபட்டர்.

''அண்ணா! ஓயாமல் தூங்கும் பெருமான்தான் உலகளந்த பெருமான்? மகாபலியைப் பாதாளத்தில் அழுத்திய பெருமான்?'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''அப்படிப்பட்ட உலகளந்த பெருமாள் எங்கள் சிவபெருமானுடைய பாதார விந்தங்களைத் தரிசிப்பதற்குத் தோண்டித் தோண்டிப் பாதாளம் வரையில் சென்றும் எம்பெருமான் பாதங்களைக் கண்டுபிடிக்க முடியவில்லை!'' என்றார் ஈசான சிவபட்டர்.

''உங்கள் சிவன் அவ்வளவு பெரியவராயிருந்தால், அவருக்குக் கோயில் எதற்கு என்றுதான் கேட்கிறேன். கோயிலுக்குள் வரும் போது அவர் தலை இடித்துக் கோயில் இடிந்து விழுந்துவிடுமே!'' என்று சொன்னான் ஆழ்வார்க்கடியான்.

மழவரையர் திருமகள் இதைக் கேட்டுச் சிரித்துக் கொண்டே, ''உங்கள் சண்டையைக் கொஞ்சம் நிறுத்துங்கள். திருமலை! நீ சொல்லுவது என்ன? பெருமாளுக்குக் கோயில் கட்டக் கூடாது என்று யார் சொன்னது? எந்த ஊர் விண்ணகரத்தைப் புதுப்பிக்க வேண்டும் என்கிறாய்? அதை நல்ல முறையில் சொல்லுவது தானே?'' என்றார்.

''அம்மணி! தங்களுடைய மாமனார், மூன்று உலகும் கீர்த்தி பெற்ற பராந்தக சக்கரவர்த்தி, — அவருடைய பட்டப் பெயரால் விளங்கும் வீரநாராயண புரத்துக்குப் போயிருந்தேன். அங்கே வீரநாராயணப் பெருமாள் அல்லும் பகலும் தூங்காமல், கண் மூடாமல், மாகடல் போன்ற வீர நாராயண ஏரியைக் காத்து அருள் புரிந்து வருகிறார். அத்தகைய பெருமாளுடைய கோயிலில் செங்கல் சுவர்கள் இடிந்து விழுந்து வருகின்றன. கோயில் இடிந்தால்

ஏரிக் கரையும் இடிந்து நூறு நூறு ஊர்கள் பாழாகி விடும். வீரநாராயணப் பெருமாளின் கோயிலைக் கற்றளியாக்கித் திருப்பணி செய்ய வேண்டும்!'' என்றான்.

''ஆகட்டும்; செய்வோம்! அதைப் பற்றி விவரமாக என்னிடம் சொல்! இவர்கள் எல்லாரும் இப்போது போகட்டும்!'' என்று சோழகுல மூதாட்டி கூறினார்.

அந்தக் குறிப்பை உணர்ந்து ஈசான சிவ பட்டர் உள்பட அனைவரும் வெளியேறிச் சென்றார்கள்.

**உ**டனே, செம்பியன் மாதேவி குரலைத் தாழ்த்திக் கொண்டு, ''திருமலை! யாத்திரையில் எங்கெங்கே போயிருந்தாய்! என்னென்ன பார்த்தாய்? என்னென்ன கேள்விப்பட்டாய்? விவரமாய்ச் சொல்லு! ஏதோ முக்கியமான விஷயம் கொண்டு வந்திருக்கிறாய். அதனால்தான் அப்படிக் குறுக்கிட்டுப் பேசினாய். இல்லையா?'' என்று சொன்னார்.

''ஆம், தாயே! முக்கியமான விஷயம் பல கொண்டு வந்திருக்கிறேன். ஆயினும் தங்கள் திருவுள்ளத்தை நோக்கிக் காத்திருந்திருப்பேன். ஆனால் காஞ்சியில் உள்ள இளவரசரைப் பற்றி ஏதோ சொல்லத் தொடங்கினீர்கள். அதற்காகவே தடை செய்தேன். சற்று முன் இங்கே இருந்தவர்களில் உண்மையானவர் யார், ஒற்றர் யார் என்று யாருக்குத் தெரியும்? நாட்டில் எத்தனையோ விபரீதங்கள் நிகழ்ந்து வருகின்றன. எப்போது யாரால் என்ன துரோகம் நடக்கும் என்று சொல்வதற்கில்லை!'' என்றான் திருமலையப்பன்.

பெரிய பிராட்டி பெருமூச்சு எறிந்தார். ''ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவர்கள், இரத்த பாசம் உள்ளவர்கள், —ஒருவரையொருவர் சந்தேகிக்கும்படி ஆகிவிட்டது. ஆதித்த கரிகாலன் ஒரு காலத்தில் என்னிடம் எவ்வளவு விசுவாசம் வைத்திருந்தான்? சொந்தத் தாயைக் காட்டிலும் நூறு மடங்கு அன்பும் மரியாதையும் கொண்டிருந்தானே? அவன் கூடவல்லவா என் பேரில் ஐயுறும்படி ஆகிவிட்டது! திருமலை! என் நாயகருடன் நானும் இந்த மண்ணுலகை விட்டுப் போயிருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்! என்னை வரக்கூடாதென்று தடுத்து விட்டாரே? இங்கே செய்ய வேண்டிய பணிகளையும் கொடுத்து விட்டல்லவா போய் விட்டார்? என்ன துர்ப்பாக்கியசாலி நான்?'' என்றார்.

''அம்மா! தங்கள் பதி முக்காலமும் உணர்ந்த மகான். கலியுகத்தில் ஜனக மகாராஜாவைப் போல் இந்தச் சோழ சிம்மாசனத்தில் வீற்றிருந்தார். தங்களை இருக்கும்படி அவர் சொல்லிப் போனது இந்த நாடு செய்த பாக்கியம். நூறு ஆண்டாகப் பல்கிப் பெருகி வரும் இந்தச் சோழப் பேரரசு சகோதரச் சண்டையினால் நசித்து நாசமாகாமல் காப்பாற்றும் பொறுப்பு தங்களைச் சார்ந்தது. தங்களாலேதான் அது முடியக் கூடியது!''

''எனக்குத் தோன்றவில்லை. என் சொந்த மகன் நான் சொல்வதைக் கேட்கவில்லை என்று ஏற்பட்ட பிறகு மற்றவர்களை நான் எப்படிக் கட்டுப்படுத்த முடியும்? இருக்கட்டும்; ஒற்றர்களைப் பற்றிச் சொன்னாயே? இங்கே யார் ஒற்றர்களை அனுப்பியிருக்க முடியும்? இளவரசன் ஆதித்த கரிகாலன் அனுப்பியிருப்பான் என்று நினைக்கிறாயா? என் பேரில் அவனுக்கு அவ்வளவு அவநம்பிக்கை வந்து விட்டதா?'' என்றார் சிவ பக்த சிரோமணியான மாதரசி.

''என்னுடைய இரு காதினாலும் கேட்டேன், தாயே! இல்லாவிட்டால் இளவரசர் கரிகாலர் தங்கள் பேரில் ஐயப்படுவார் என்பதை நான் ஒரு நாளும் நம்பியிருக்க மாட்டேன்......''

''என்ன கேட்டாய், திருமலை! உன் காதினால் என்ன கேட்டாய்?''

''மாமல்லபுரத்துக் கற்கோயில் ஒன்றின் அருகில் உட்கார்ந்து அவர்கள் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டேன்.....''

''அவர்கள் என்றால் யார்?''

''இளவரசர் ஆதித்த கரிகாலர் ஒன்று, திருக்கோவலூர் மலையமான் இரண்டு, பல்லவப் பார்த்திபேந்திரன் மூன்று. — இவர்கள் மூவரும் பேசிக் கொண்டிருந்தார்கள். இருளடைந்த கற்கோயிலுக்குள் நான் மறைந்திருந்து கேட்டேன். மலையமானும் பார்த்திபேந்திரனும் வெகு ஆத்திரமாகப் பேசினார்கள். இரண்டு பழுவேட்டரையர்களும் தங்கள் குமாரர் மதுராந்தகத் தேவரும் சேர்ந்து சதி செய்து சக்கரவர்த்தியைச் சிறைப் படுத்தி வைத்திருக்கிறார்களாம். அதில் தங்களுக்கும் சம்பந்தம் இருக்கத்தான் வேண்டும் என்று மலையமான் கூறினான். அதை மற்றவர்கள் ஆமோதித்தார்கள். தஞ்சாவூர் மீது படையெடுத்துச் சென்று சக்கரவர்த்தியை விடுவித்துக் கொண்டு வர வேண்டும் என்று பார்த்திபேந்திரன் சொன்னான். அதையும் மற்ற இருவரும் ஆமோதித்



தார்கள். ஆனால் சக்கரவர்த்தியைச் சண்டையின்றிக் காஞ்சிபுரத்துக்குக் கொண்டு வர இன்னும் ஒரு முயற்சி செய்து பார்க்க வேண்டும் என்று இளவரசர் கூறினார். அதன்பேரில் சக்கரவர்த்திக்கு ஓலை எழுதி ஒரு தூதனிடம் கொடுத்து அனுப்பத் தீர்மானித்தார்கள். அந்தத் தூதன் யார் என்பதையும் நான் கண்டு கொண்டேன். அவன் சாதாரணத் தூதன் அல்ல. மகா சாமர்த்தியசாலி; வீர பராக்கிரமசாலி. தூதன் வேலையோடு ஒற்றன் வேலையையும் செய்யக் கூடியவன். அவனுடன் நான் பேச்சுக் கொடுத்துப் பார்த்தேன். நான் தட்டியில் நுழைந்தால் அவன் கோலத்துக்குள் நுழையப் பார்த்தான். அவன் ஒன்றுமே தெரியப்படுத்தாமல் என்னிடமிருந்து பல விஷயங்களைக் கிரஹிக்கப் பார்த்தான். குடந்தை ஜோதிடர் அவனிடம் தமது கைவரிசையைக் காட்டினார். அதுவும் பலிக்கவில்லை. பிறகு அவன் தஞ்சாவூருக்குச் சென்று சக்கரவர்த்தியிடம் ஓலையைக் கொடுத்துவிட்டான் என்று கேள்விப்படுகிறேன்....."

"அப்புறம் என்ன நடந்தது? அதற்குச் சக்கரவர்த்தி என்ன மறுமொழி சொன்னாராம்?"

"மறுநாளைக்கு விடை எழுதித் தருவதாகச் சொன்னாராம். அதற்குள் அவன் பேரில் பழுவேட்டரையர்களுக்கு ஏதோ சந்தேகம் வந்து விட்டது. அவர்களுடைய கட்டுக் காவல்களையெல்லாம் மீறிக் கொண்டு அவன் எப்படியோ தப்பித்துச் சென்று விட்டானாம்!"

"அப்படியானால் அவன் மிக சாமர்த்தியசாலிதான்; சந்தேகமில்லை. அப்புறம் நீ என்ன செய்தாய்? காஞ்சிபுரத்திலிருந்து கிளம்பிய பின்?"

"நேரே இங்கு வருவதற்காகவே புறப்பட்டேன். வழியில் வீரநாராயணபுரத்தில் பெருமாளைத் தரிசிக்கத் தங்கினேன். தங்கிய இடத்தில்

பெருமாள் அருளினால் ஒரு பெரிய இரகசியத்தை அறியும்படி நேர்ந்தது..''

'' அது என்ன ? இன்னும் ஒரு இரகசியமா ?''

''ஆம், தாயே ! கடம்பூர் சம்புவரையர் மாளிகையில் அன்று இரவு ஒரு பெரிய விருந்து என்று தெரிந்தது. அந்த விருந்துக்குப் பெரிய பழுவேட்டரையர் வந்தார். அவருடன் இளையராணியின் பல்லக்கும் வந்தது!''

''திருமலை ! எல்லாம் அவளுடைய செயல்தான்! இந்தச் சோழ நாட்டுக்கு இப்போது நேர்ந்திருக்கும் ஆபத்து அந்தப் பெண்ணால் ஏற்பட்டதுதான் ! அவளை நீ சந்தித்துப் பேச முடிந்ததா?''

''முடியவில்லை, அம்மா ! முடியவில்லை ! தங்கள் கட்டளையின் பேரில் அந்தப் பெண் பாம்பை என் சகோதரியாகப் பாவித்து எத்தனை வருஷம்



வளர்த்தேன் ! எங்கெல்லாம் தேடி அலைந்து பிரபந்த பாசுரங்களைக் கற்றுக் கொண்டு வந்து அவளுக்குக் கற்பித்தேன்! அதையெல்லாம் நினைத்துப் பார்த்தால் என் நெஞ்சம் கொதிக்கிறது! பெரிய பழுவேட்டரையரின் ராணியான பிறகு அவள் என்னைப் பார்க்கக்கூட மறுக்கிறாள்!....''

''அதற்காக வருத்தப்பட்டு என்ன பயன்? இந்த உலகத்து மனிதர்களின் காரியங்கள் இப்படித்தான். நினைப்பது ஒன்றும், நடப்பது ஒன்றுமாக முடிகிறது.... அப்புறம் கடம்பூரில் நடந்தது என்ன?''

''பல்லக்கிலே வந்தவள் நந்தினிதான் என்று எண்ணிக் கொண்டு எப்படியாவது அவளைச் சந்திப்பது அல்லது ஓலை எழுதி அனுப்பியாவது எச்சரிக்கை செய்வது என்ற உத்தேசத்துடன் கடம்பூருக்குச் சென்றேன். பெரும் அபாயத்துக்குத் துணிந்து கடம்பூர் மாளிகையின் வெளிச் சுவர் ஏறிக் குதித்தேன். அப்போதுதான் அந்த அதிசயமான மர்ம இரகசியம் தெரிய வந்தது....''

''திருமலை! உன் வழக்கமே இப்படித்தான். மேலும் மேலும் ஆவலைக் கிளப்புவாயே தவிர, செய்தியைச் சொல்ல மாட்டாய். அது என்ன அப்படிப்பட்ட அதிசயமான மர்ம இரகசியம்....?''

''மன்னிக்க வேண்டும், தாயே ! அதைச் சொல்லுவதற்கே தயக்கமாயிருக்கிறது. மூடு பல்லக்கில் இருந்தது பழுவூர் இளையராணி அல்ல. பழுவேட்டரையர் தாம் போகுமிடமெல்லாம் இளையராணியை அழைத்துக் கொண்டு போகிறார் என்று நாம் எல்லாரும் எண்ணிக் கொண்டிருந்தோமே, அது பெரிய தவறு!....''

''பழுவேட்டரையர் பின் யாரை மூடு பல்லக்கில் வைத்து அழைத்துப் போகிறார்? அந்தக் கிழவரின் பெண் சபலத்துக்கு அளவேயில்லையா ?''

''மூடு பல்லக்கில் இருந்தது ஸ்திரீ அல்ல, தாயே !''

'' ஸ்திரீ இல்லை என்றால் ? எந்த ஆண் மகன் அப்படி மூடு பல்லக்கில் மறைந்து கொண்டு வருவான் ?''

'' மன்னிக்க வேண்டும், அம்மா ! மூடு பல்லக்கில் மறைந்து வந்தது தங்களுடைய திருக்குமாரர் மதுராந்தகத் தேவர்தான் !''

செம்பியன் மாதேவி சிறிது நேரம் திகைத்து நின்று விட்டார்.

''கடவுளே ! நான் செய்த குற்றத்துக்கு இவ்வளவு பெரிய தண்டனையா?'' என்று தமது வாய்க்குள்ளே சொல்லிக் கொண்டார்.

பிறகு, ஆழ்வார்க்கடியான் சம்புவரையர் மாளிகையில் அர்த்த ராத்திரியில் நடந்த சதிக் கூட்டத்தைப் பற்றிச் சொன்னான்.

அதைக் கேட்டு அம்மாதரசி அடைந்த மனத் துயரைச் சொல்லி முடியாது. ''ஐயோ! என் மகனே! உன்னைச் சிவஞானச் செல்வனாக வளர்க்க முயன்றேனே? அதன் பயனா இது? சோழர் பெருங் குலத்துக்கு உன்னால் இத்தகைய அபகீர்த்தியா நேர வேண்டும்? சோழப் பேரரசுக்கு இத்தகைய பெருந் தீங்கு உன்னாலேயா ஏற்பட வேண்டும் ?'' என்று புலம்பினார்.

பின்னர், ''திருமலை ! மறுபடியும் என்னைப் பார்த்து விட்டுப் போ ! அதற்குள் குந்தவையிடம் பேசி இந்தப்

பெரும் விபத்தை எப்படித் தடுக்கலாம் என்று யோசித்துச் சொல்லுகிறேன்!'' என்றார்.

'' தாயே! இளவரசியிடம் கூடத் தாங்கள் இதைப் பற்றிப் பேசாமல் இருப்பது நல்லது.''

'' ஏன்? அவளைப் பற்றிக்கூட ஐயப்படுகிறாயா, என்ன?''

'' அது இயற்கைதானே, அம்மா? ஆதித்த கரிகாலரின் அருமைச் சகோதரிதானே அவர்?''

''அதனால் என்ன?.... திருமலை! சூரியன் மேற்கில் உதயமாகிக் கிழக்கே அஸ்தமித்தது என்று நீ சொன்னாலும் நம்புவேன். சிவபெருமானைக் காட்டிலும் திருமால் பெரிய தெய்வம் என்று நீ சாதிப்பதை நம்பினாலும் நம்புவேன். ஆனால் குந்தவையின் பேரில் குற்றம் சொன்னால் நம்ப மாட்டேன். அவள் பிறந்த அன்றைக்கு அரண்மனை மருத்துவச்சி எடுத்து வந்து குழந்தையை என் இரு கரங்களிலும் கொடுத்தாள். அன்று முதல் நானே அவளை வளர்த்து வந்தேன். என் வயிற்றில் பிறந்த மகனைக் காட்டிலும் அருமையாக வளர்த்து வந்தேன். அவளும் என்னையே பெற்ற தாயாகவும் தகப்பனாகவும் எண்ணி இன்று வரை அன்பும் மரியாதையும் செலுத்தி வருகிறாள்....''

'' அம்மா! ஒன்று கேட்கிறேன். குந்தவை தேவி குடந்தை சோதிடரிடம் சென்று வந்ததைப் பற்றித் தங்களிடம் சொன்னாரா?''

'' இல்லை; அதனால் என்ன?''

'' ஜோசியர் வீட்டில் வாணர் குலத்து வாலிபன் ஒருவனைப் பார்த்தது பற்றியும் மறுபடியும் அவனை அரிசிலாற்றங்கரையில் சந்தித்தது பற்றியும் சொன்னாரா?''

''இல்லை; இதெல்லாம் என்ன கேள்வி? இப்படிக் கேட்பதில் உன் கருத்து என்ன?''

'' தங்களிடம் சொல்லக் கூடாத இரகசியம் ஒன்று இளவரசி வைத்திருக்கிறார் என்பதுதான். நான் குறிப்பிட்ட அந்த வாலிபன்தான் ஆதித்த கரிகாலரின் தூதன்; ஒற்றன் என்று சொன்னாலும் தவறாகாது.''

'' திருமலை! அதெல்லாம் எப்படியாவது இருக்கட்டும். என்னிடம் குந்தவை ஏதேனும் ஒன்றைச் சொல்லவில்லையென்றால், அதற்குத் தக்க காரணம் இருக்கும். அவளிடம் சந்தேகப்படுவதைக் காட்டிலும் என் பிராணனையே விட்டு விடுவேன்!'' என்றார் சிவஞான கண்டராதித்தரின் பட்டமகிஷி.

''ஐயையோ! அப்படி ஒன்றும் நேர வேண்டாம். தங்களுடைய நம்பிக்கையே மெய்யாகட்டும். இளவரசி என்னிடம் ஏதோ கேட்பதற்காக வரச் சொல்லியிருக்கிறார். தாங்கள் பார்க்க விரும்புவதாக நானே தெரிவித்துவிடுகிறேன்'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

### நாற்பத்தைந்தாம் அத்தியாயம்

## குற்றம் செய்த ஒற்றன்

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கரிகால் பெருவளத்தான் என்னும் சோழ மன்னன் காவேரி நதிக்கு இருபுறமும் கரை எடுத்தான். வெகு காலம் அந்தக் கரைகள் நல்ல நிலைமையில் இருந்து காவேரி ஆற்றைக் கட்டுக்குள் வைத்திருந்தன. பின்னர், சோழ குலத்தின் வலி குறைந்தது. பாண்டியர்களும் பல்லவர்களும் களப்பாளரும் வாணரும் தலையெடுத்தார்கள். இந்தக் காலத்தில் காவலன் இல்லாத காவேரி நதி அடிக்கடி கட்டு மீறிக் கரையை உடைத்துக் கொண்டது. இவ்விதம் பெரிய அளவில் கரை உடைந்த சில சந்தர்ப்பங்களில் நதியின் போக்கே மேலும் கீழுமாக மாறுவதுண்டு. பழங் காவேரி புதுக் காவேரியாகும்; புதுக் காவேரி பழங் காவேரியாகும். அடியோடு நதியின் கதி மாறிப் போய் விட்டால், பழைய நதிப் படுகை சில சமயம் நன்செய் நிலமாக மாறும்; வேறு சில சமயங்களில் தண்ணீர் தேங்கி நிற்கும் ஓடைகளாகிக் கடல் போல் அலைமோதிக் கொண்டிருக்கும்.

பழையாறு நகரின் சோழ மாளிகைகளை யொட்டித் தென்புறத்தில் அத்தகைய ஓடை ஒன்று இருந்தது.

காவேரியின் கதி மாறியதால் ஏற்பட்ட இந்த ஓடையைச் சோழ மன்னர்கள் வேண்டுமென்றே ஆழமாக்கி, விசாலப்படுத்தி, எப்போதும் தண்ணீர் ததும்பி நிற்கும்படி செய்திருந்தார்கள். அரண்மனைகளுக்கும், முக்கியமாக அந்தப்புரங்களுக்கும், இந்த விசாலமான நீர் ஓடை ஒரு நல்ல பாதுகாப்பாக இருந்தது. அந்த வழியில் யாரும் எளிதில் வந்துவிட முடியாது. அரண்மனையோடு நெருங்கிய

தொடர்புள்ளவர்கள்தான் படகில் ஏறி வரலாம்.

அரண்மனை அந்தப்புரங்களின் அழகிய உத்தியான வனங்கள் இந்த நீரோடையை ஒட்டி அமைந்திருந்தன. அரண்மனை மாதர்கள் நிர்ப்பயமாக அந்த உத்தியான வனங்களில் எந்த நேரமும் உலாவுவார்கள், கூடிக் குலாவுவார்கள். மயில்களாகி ஆடுவார்கள்; குயில்களாகிப் பாடுவார்கள். சில சமயம் ஓடையில் இறங்கி நீராடுவார்கள்; ஓடையில் ஓடம் ஓட்டியும் விளையாடுவார்கள்.

சோழர் குலத்தில் ஓர் அரசர் காலமாகி இன்னொருவர் பட்டத்துக்கு வரும்போது புதிய அரண்மனை கட்டிக் கொள்வதுண்டு. பழைய அரண்மனையில் காலமான மன்னரின் ராணிகளும் மற்றப் பிள்ளைகளும் வசிப்பார்கள்.

பழையாறை அரண்மனைகளில் செம்பியன் மாதேவியின் அரண்மனைக்கு அடுத்தபடியாகக் குந்தவைப் பிராட்டியின் மாளிகை அழகிலும் கம்பீரத்திலும் சிறந்து விளங்கியது. அது சுந்தர சோழர் வசித்த அரண்மனை அல்லவா? அவர் தஞ்சை சென்ற பிறகு, குந்தவை அந்த அரண்மனையின் எஜமானியாக விளங்கினாள்.

அம்மாளிகையின் பின்புறத்து உத்தியானவனம் மிகச் சோபிதமாக விளங்கியது. அதில் வானளாவிய ஆலமரங்களும் இருந்தன; சின்னஞ் சிறு பூஞ்செடிகளும் இருந்தன. வளைந்து நெளிந்து மரங்களைத் தழுவிக் கொண்டிருந்த பூங்கொடிகளும், பூங்கொடிகளாலான கொடி வீடுகளும் இருந்தன.

குந்தவையும் அவளுடைய தோழிமார்களும் மாலை நேரங்களைப் பெரும்பாலும் அந்த உத்தியான வனத்திலேயே கழிப்பது வழக்கம்.

சில சமயம் எல்லாரும் சேர்ந்து ஓரிடத்தில் உட்கார்ந்து கொண்டு கதைகள் பேசிக் கொட்டமடிப்பார்கள்.

இன்னும் சில சமயம் இரண்டு பேராகவும், மூன்று பேராகவும் பிரிந்து சென்று அந்தரங்கம் பேசுவார்கள்.

சில நாளாகக் குந்தவையும் வானதியும் தனியே பிரிந்து சென்று பேசுவது வழக்கமாய்ப் போயிருந்தது.

அன்றைக்கு ஒரு பெரிய ஆலமரக் கிளையில் கட்டித் தொங்க விட்டிருந்த கொடி ஊஞ்சலில் குந்தவையும் வானதியும் அமர்ந்து ஆடிக் கொண்டும் பேசிக் கொண்டுமிருந்தார்கள்.

பறவைகளின் கலகலத் தொனியுடன் போட்டியிட்டுக் கொண்டு பெண்மணிகளின் குதூகலச் சிரிப்பொலியும் அவ்வப்போது அந்த உத்தியான வனத்தில் கேட்டுக் கொண்டிருந்தது.

ஆனால் குந்தவையும் வானதியும் மட்டும் சிரிக்கவில்லை. மற்றவர்களின் சிரிப்பு அவர்களுக்கு அவ்வளவாய்ப் பிடிக்கவுமில்லை. பேச்சுத்தான் அவர்கள் அதிகமாகப் பேசினார்களோ என்றால், அதுவும் அவ்வளவாக இல்லை.

கொடி வீடு ஒன்றிலிருந்து ஒரு பெண் கீதம் ஒன்று பாடினாள். அது கண்ணன் பிறந்த நாள் அல்லவா? அவள் பாடியதும் கண்ணனைப் பற்றிய பாடல்தான்.

வெண்ணிலாவில் வேணுகானம் கேட்கிறது. அது கண்ணனிடம் காதல் கொண்ட ஒரு பெண்ணை வேதனை செய்கிறது. அவள் தன் வேதனையை வாய் திறந்து வெளியிடுகிறாள். மரக் கிளையிலிருந்து ஒரு கிளி அவளுக்கு ஆறுதல் சொல்லுகிறது.

**பெண்:**

**வேதனை செய்திடும் வெண்ணிலவில்—இங்கு**
**வீணன் எவன் குழல் ஊதுகின்றான்?**
**நாதன் இலா இந்தப் பேதை தன்னை**
**நலிந்திடுதல் என்ன புண்ணியமோ?**

**கிளி:**

**வானமும் வையமும் இன்புறவே—ஐயன்**
**வாய்மடுத்தூதும் குழலிசைதான்**
**மானே உந்தனை வருத்திடுமோ—இந்த**
**மானிலம் காணாப் புதுமை அம்மா!**

**பெண்:**

**பூவையே! உந்தனைப் போற்றிடுவேன்—நல்ல**
**புன்னைமலர் கொய்து சூட்டிடுவேன்—எந்தன்**
**ஆவி குலைந்திடும் வேளையிலே - ஒரு**
**ஆறுதல் கூற நீ வந்தனையோ?**

**கிளி:**

**கட்டழகி! உந்தன் காதலினும் - எங்கள்**
**கண்ணன் படுந்துயர் சொல்லவந்தேன்-உன்னை**
**விட்டுப் பிரிந்த நாள் முதலாய் - நல்ல**
**வெண்ணெயும் வேம்பாய்க் கசந்த தென்பான்!**

பாடலின் பின்பகுதியைக் கவனமாகக் கேட்டு வந்த குந்தவை, பாடல் முடிந்ததும், "நல்ல கண்ணன் இந்தச் செந்தமிழ் நாட்டுக்குத் தெய்வமாக வந்து வாய்த்தான்! வெண்ணெய் உண்டு வேய்ங்குழல் ஊதிப் பெண்களுடன் காலங் கழித்துக் கொண்

டிருந்தால் மற்றக் காரியங்களெல்லாம் என்ன ஆவது ?'' என்றாள்.

மறுமொழி சொல்லாதிருந்த வானதியைப் பார்த்து. ''என்னடி மௌனம் சாதிக்கிறாய் ? நீயும் கண்ணன் குழலில் மயங்கி விட்டாயா, என்ன?'' என்று கேட்டாள்.

'' அக்கா ! என்ன கேட்டீர்கள் ?'' என்றாள் வானதி.

''என்ன கேட்டேனா? உன் கவனம் எங்கே சென்றிருந்தது ?''

''எங்கும் போகவில்லையே? உங்களிடந்தான் இருந்தது.''

''அடி கள்ளி! ஏனடி பொய் சொல்லுகிறாய்! உண்மையில் உன் மனம் இவ்விடத்தில் இல்லவே இல்லை! எங்கே இருக்கிறது என்று நான் சொல்லட்டுமா ?''

''தெரிந்தால் சொல்லுங்களேன் !''

''நன்றாகத் தெரியும். ஈழ நாட்டுப் போர்க்களத்துக்குப் போயிருக்கிறது. அங்கே என் தம்பி ஒரு கபடற்ற பிள்ளை இருக்கிறானே, அவனை இன்னும் என்ன பொடி போட்டு மயக்கலாம் என்று உன் மனம் யோசித்துக் கொண்டிருக்கிறது!''

''நீங்கள் கூறியதில் ஒரு பாதி உண்மைதான், அக்கா! என் மனம் ஈழ நாட்டுக்குத்தான் அடிக்கடி போய் விடுகிறது. ஆனால் அவரைப் பொடி போட்டு மயக்குவதைப் பற்றி யோசிக்கவில்லை. அவர் போர்க்களத்தில் எப்படியெல்லாம் கஷ்டப்படுகிறாரோ, அவருடைய திருமேனியில் எத்தனை காயம் பட்டிருக்கிறதோ, அவர் எங்கே படுத்துக் கொள்கிறாரோ, என்ன உணவு சாப்பிடுகிறாரோ, — என்றெல்லாம் எண்ணமிடுகிறது. அவர் அப்படியெல்லாம் அங்கே கஷ்டப்பட்டுக் கொண்டிருக்க, இங்கே நான் சுகமாக உண்டு உடுத்துப் பஞ்சணை மெத்தையில் படுத்துத் தூங்குவதை நினைக்கும் போது வேதனையாயிருக்கிறது. எனக்கு மட்டும் இறகுகள் இருந்தால் இந்த நிமிஷமே இலங்கைக்குப் பறந்து போய் விடுவேன் !......''

''பறந்து போய் என்ன செய்வாய்? அவனுக்கு மேலும் உபத்திரவந்தானே செய்வாய் ?''

'' ஒரு நாளும் இல்லை. அர்ச்சுனனுக்குச் சுபத்திரையும் கிருஷ்ணனுக்குச் சத்தியபாமாவும் ரதம் ஓட்டியது போல் நானும் ஓட்டுவேன். அவர் பேரில் எய்யும் அம்புகளை என் மார்பில் நான் தாங்கிக் கொள்வேன்....''

''நீ தாங்கிக் கொண்டால் அதை அவன் பார்த்துக் கொண்டிருப்பானா ?''

'' அது அவருக்கு இஷ்டமில்லாவிட்டால் பாசறையில் காத்திருப்பேன். போர்க்களத்திலிருந்து அவர் திரும்பி வந்ததும் காயங்களுக்கு மருந்து போட்டுக் கட்டுவேன். மலர்ப் படுக்கை விரித்து வைத்திருப்பேன். அறுசுவை உண்டி சமைத்து வைத்திருந்து அளிப்பேன். உடல் வலியை மறப்பதற்கு வீணை மீட்டிப் பாட்டுப் பாடித் தூங்கப் பண்ணுவேன்....''

''இதெல்லாம் நடவாத காரியங்கள், வானதி ! சோழ குலத்து வீரர்கள் போர்க் களங்களுக்குப் பெண்களை அழைத்துப் போவதில்லை....!''

''ஏன், அக்கா, அப்படி ?''

''அவர்களுக்குப் புண்களைப் பற்றிப் பயமில்லை; அதைக் காட்டிலும் பெண்களைப் பற்றித்தான் அதிக பயம்!''

''அது ஏன்? பெண்கள் அவர்களை என்ன செய்து விடுவார்கள்?''

''அவர்களை ஒன்றும் செய்யமாட்டார்கள். ஆனால் உன்னைப் போன்ற பெண்கள் போர்க்களத்துக்குப் போனால் எதிரிப் படை வீரர்கள் உங்களுடைய அழகைக் கண்டு மயங்கி வந்து சரணாகதி அடைந்து விட்டால் என்ன செய்கிறது? அப்போது நம் சோழ நாட்டு வீரர்கள் தங்களுடைய வீரத்தைக் காட்ட முடியாதல்லவா? பெண்களைக் கொண்டு வெற்றியடைந்தார்கள் என்ற புகழைச் சோழ குலத்தார் விரும்புவதில்லை.''

'' அப்படிக்கூட உண்டா ? எதிரி வீரர்கள் அவ்வளவு மூடர்களாயிருந்து விடுவார்களா, பெண்களின் அழகைக் கண்டு மயங்கி விடுவதற்கு?''

'' ஏன் மாட்டார்கள் ? அடியே, வானதி ! குடந்தை ஜோதிடர் வீட்டிலும் அரிசிலாற்றங் கரையிலும் நாம் ஒரு வாலிப வீரனைப் பார்த்தோமே, ஞாபகம் இருக்கிறதா?''

''இருக்கிறது : அதற்கு என்ன?''

'' நம்மையெல்லாம் கண்டதும் அவன் எப்படிப் போதை கொண்டவன்போல் மயங்கி நின்றான் என்பது ஞாபகம் இருக்கிறதா?''

''அதுவும் ஞாபகம் இருக்கிறது. ஆனால் 'நம்மையெல்லாம் பார்த்து விட்டு' என்று தாங்கள் சொல்லுவது தான் தவறு. அவன் தங்களைப் பார்த்து விட்டுத்தான் அப்படி மயங்கி நின்றான். பக்கத்தில் நின்றவர்களை அவன் கண்ணெடுத்தும் பார்க்கவில்லை, அக்கா !''

# நவீன வாழ்க்கைக்கு ஏற்றது நெஸ்காஃபே



**நெஸ்காஃபே மட்டும்தான் அலாதி சுவையின்பத்தை அளிக்கவல்லது**







தேர்ந்தெடுக்கப்பட்ட தென்னிந்திய ப்ளான்டேஷன் பீபெரி காபிக்கொட்டையைப் பதமாக வறுத்து அதன் இயல்பான மணம் கெடாமல் தயாரிக்கப் பட்டதுதான் நெஸ்காஃபே — உடனே கரையக்கூடிய நூற்றுக்கு நூறு அசல் காபி! ஒரே சமயத்தில் தனித்தனியாக 'ஸ்ட்ராங்'காகவோ 'லைட்'டாகவோ காபியைத் தயாரிக்கமுடிவதால் நெஸ்காஃபே மிகவும் சிக்கனமானதும்கூட!




ஒரு நெஸ்லே தயாரிப்பு

**5 வினாடிகளில் தயார்!** ஒரு முழு டீஸ்பூன் நெஸ்காஃபேயை கோப்பையில் போட்டு வெந்நீரை ஊற்றி ருசிக்கேற்றபடி சர்க்கரையும் பாலும் சேர்க்க வேண்டியதுதான். காபி தயார்!

**NESCAFÉ***




நெஸ்காஃபே — தனிச்சிறப்புள்ள தரமான காபி

*நெஸ்காஃபே என்பது நெஸ்லேயின் இன்ஸ்டன்ட காபியைக் குறிக்கும் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க் ஆகும்

JWT-NCE-5144(R)

''வானதி! நல்ல பொய் சொல்கிறாய்! பரிகாசம் செய்கிறாயா, என்ன?''

''இல்லவே இல்லை! நான் ஒன்று கேட்கிறேன்; அதற்கு உண்மையாக விடை சொல்கிறீர்களா?''

''கேட்டுப் பாரேன்!''

''அந்த வாலிப வீரனுடைய ஞாபகம் உங்களுக்கு இப்போது ஏன் வந்தது?''

''நல்ல வாயாடியாகப் போய் விட்டாய் நீ! அவனுடைய ஞாபகம் வந்ததில் என்ன தவறு?''

''தவறு என்று யார் சொன்னது? நான் சொல்லவில்லையே? அது மிகவும் இயற்கைதான்! எனக்குக்கூட, அந்த வாலிபனுடைய கதி அப்புறம் என்ன வாயிற்றோ என்று கவலைதான்.''

''உனக்கு ஏன் அதைப் பற்றிக் கவலை உண்டாக வேண்டும்?''

''ஏன் கவலைப்படக் கூடாது? ஒருவரை நாம் பார்த்திருந்தால், அவரைப் பற்றிய ஞாபகம் நமக்கு அடிக்கடி வந்தால், அவர் என்ன ஆனார் என்று தெரிந்து கொள்ள விரும்புவது இயற்கை அல்லவா!''

''நல்ல இயற்கை! அப்படியெல்லாம் மனம் சிதறுவதற்கு நாம் இடம் கொடுத்துவிடக் கூடாது. மனத்தைக் கட்டுப்படுத்தி வைக்க வேண்டும்..... அதோ கேளடி, வானதி! அது என்ன பறைச் சத்தம்? அந்தக் குரல் என்ன சொல்லுகிறது? சற்றுக் கவனமாகக் கேள். பார்க்கலாம்!''

ஆம்; தூரத்தில் எங்கேயோ வீதியில் பறை கொட்டும் சத்தமும், நடுநடுவே மனிதக் குரல் கூச்சலிடும் சத்தமும் கேட்டது. காது கொடுத்துக் கவனமாகக் கேட்டபோது, மனிதக் குரல் கூறியது இது என்று தெரிந்தது.

''சத்துரு நாட்டிலிருந்து வந்த ஒற்றன் ஒருவன் தஞ்சாவூர்க் கோட்டையில் பொய் முத்திரையைக் காட்டிப் புகுந்து உளவு அறிந்து கொண்டு ஓடி விட்டான். இரண்டு பேரை மரண காயப்படுத்தி விட்டுத் தப்பிப் போய் விட்டான். வாலிபப் பிராயத்தினன். வாட்ட சாட்டமான தேகம் உடையவன். இந்திரஜித்தைப் போன்ற மாய தந்திரக்காரன். பெயர் வல்லவரையன் வந்தியத்தேவன். அவனுக்கு அடைக்கலம் கொடுப்போருக்கு மரண தண்டனை விதிக்கப்படும். அவனைப் பிடித்துக் கொடுப்போருக்கு ஆயிரம் பொன் பரிசு அளிக்கப்படும். தஞ்சைக் கோட்டைத் தளபதி பழுவேட்டரையர் காலாந்தக கண்டரின் கண்டிப்பான கட்டளை!''

இவ்விதம் மனிதக் குரல் கூறி முடித்ததும் பறை 'தம், தம், தடதடதம்' என்று முழங்கியது. குந்தவை தேவியின் திருமேனி ஏனோ நடுங்கியது.

அச்சமயம் தாதி ஒருத்தி வந்து, ''தேவி! ஆழ்வார்க்கடியார் என்னும் வீர வைஷ்ணவர் தங்களைப் பார்க்க வந்திருக்கிறார். ஏதோ அவசர காரியமாம்!'' என்றாள்.

''இதோ வந்து விட்டேன்!'' என்று சொல்லிவிட்டுக் குந்தவை, கொடி ஊஞ்சலிலிருந்து இறங்கிச் சென்றாள்.

(தொடரும்)

---



## இது என்ன?

கீழே தரப்பட்டுள்ள ஐந்தில் ஒன்று தான் இது:

1. புதிதாக அமைக்கப்பட விருக்கும் ஒரு தொழிற்சாலைக்குப் பூர்வாங்க வேலைகள் நடந்திருக்கின்றன.

2. ஒரு பாலம் கட்டுவதற்கென இரும்புக் கிராதிகளைக் கோத்து இணைத்திருக்கிறார்கள்.

3. விமானங்கள் வந்து இறங்குவதற்குத் துணை புரியும் ஒரு சாதனம்.

4. ஸ்டேடியம் ஒன்று உருவாகப் போகிறது: இங்கே அதற்கான அழகிய அமைப்பு இது.

5. விண்வெளிக் கப்பல்களைக் கண்காணிக்கும் ஒரு வகை ரேடார்.

(சரியான விடை 53-ம் பக்கம்)

# பாராட்டுக்கு நன்றி

ஒருவரைப் பாராட்டவேண்டுமானால் அவரைப் பின் பற்றினால் போதும். சாலைப்போக்குவரத்துத் துறையில் ஈடுபட்டுள்ள சகாக்களில் பலர் எமது செயல் முறைகளையும் தரங்களையும் ஏற்றிருப்பதோடு பலவற்றைக் கடைப்பிடிப்பதையும் காண எமக்கு பெருமையாகத்தான் இருக்கிறது. என்றாலும் எமது ஐம்பது வருட அனுபவமும் இயக்க முறைகளும் தனிப்பட்டவை.

எமது நிறுவனத்தை ஸ்தாபித்த ஸ்ரீ டி. வி. சுந்தரம் ஐயங்கார் 1912ம் ஆண்டிலேயே தம் முதல் பஸ் ஸர்விஸைத் துவக்கி விட்டார். குறித்த நேரம், மரியாதை, நேர்மை இவையே அவருடைய தொழில் லக்ஷியங்கள். இவையே எமக்கு வழிகாட்டிகளாக இன்றும் இருக்கின்றன.

கடந்த பல்லாண்டுகளில் பல்கிப் பெருகியுள்ள ஸதர்ன் ரோட்வேஸ் இன்று பத்து கோடி முப்பது லக்ஷம் மக்களுக்கும் மேலாக பணி புரிகிறது. 4,599 பேர் சேவை செய்யும் இக்கம்பெனியிடம் 366 பஸ்கள், 225 லாரிகள், 48 டிரெய்லர்கள் இருக்கின்றன. 135 லாரி மார்க்கங்களிலும், 147 பஸ் மார்க்கங்களிலும் அன்றடம் ஒரு லக்ஷத்து ஐம்பதாயிரம் கிலோமீட்டர் தூரம் ஓடுகின்றன. வசதியுடன் கூடிய காரியாலயங்களோ 443. பிரயாணிகள், பார்ஸல்கள் போக்குவரத்துத் துறையில் உயர்தரத்தைத் தளர விடாமல் சேவை செய்ய முயற்சி செய்து வருகிறது.

**உங்கள் நம்பிக்கைக்கு உரியது டிவிஎஸ்**




TVS

**ஸதர்ன் ரோட்வேஸ்**
**பிரைவேட் லிமிடெட்**
டிவிஎஸ் தொகுப்பைச் சேர்ந்த
நிறுவனங்களில் ஒன்று
**மதுரை**

FOSSAIDSTMA




## 76. துரோணர் தலைமை

துரியோதனனும் கர்ணனும் யாரைச் சேனாபதியாக நியமிப்பது என்று ஆலோசித்தார்கள்.

''இவ்விடம் கூடியிருக்கும் க்ஷத்திரியர்கள் எல்லோருமே சேனாபதியாக இருக்கத் தகுதி படைத்தவர்கள். தேக பலம், பராக்கிரமம், முயற்சி, தைரியம், சௌரியம், குலம், அறிவு எல்லா விஷயத்திலும் இந்த அரசர்கள் அனைவரும் சமமாகவே இருக்கிறார்கள். ஆயினும், ஒரே சமயத்தில் எல்லோரும் தலைவர்களாக இருக்க முடியாது. அவர்களில் ஒருவரைத் தலைவராக அமைத்தால் மற்றவர்களுக்கு மனக்குறை ஏற்பட்டு நாம் நஷ்டம் அடைவோம். இந்தச் சந்தர்ப்பத்தில் எல்லா யுத்த வீரர்களும் ஆச்சாரியரான துரோணரைச் சேனாபதியாக்குவது நலம். ஆயுதம் தரித்தவர்களில் சிறந்தவர் அவரே. க்ஷத்திரியன் எவனுமே அவருக்குச் சமானமானவன் இல்லை. அவரையே தலைவராக அபிஷேகம் செய்வோம்'' என்று கர்ணன் சொல்லியதைத் துரியோதனனும் ஒப்புக்கொண்டான்.

''குருவே! ஜாதியினாலும் குலத்தினாலும் சாஸ்திர ஞானத்தினாலும் வயது, புத்தி, வீரியம், சாமர்த்தியம் இவைகளாலும் சிறந்தவராக இருக்கிறீர். சேனைத் தலைமை நீரே வகிக்க வேண்டும். நீர் சேனாபதியாக இருந்தால் யுதிஷ்டிரனை நிச்சயமாக ஜெயிப்பேன்'' என்று துரியோதனன் எல்லா க்ஷத்திரிய வீரர்கள் முன்னிலையிலும் துரோணரை வணங்கினான்.

இதைக் கேட்ட அரசர்கள் உரத்த சிம்ம நாதங்கள் செய்து துரியோதனனைச் சந்தோஷப்படுத்தினார்கள். முறைப்படி துரோணருக்கு அபிஷேகம் நடந்தது. ஜயகோஷம் ஆகாயத்தைப் பிளந்தது; வந்திகளுடைய ஸ்துதிகளையும் வெற்றி முழக்கங்களையும் கேட்டுக் கௌரவர்கள் உற்சாக மயக்கத்தினால் பாண்டவர்களை ஜெயித்தாகி விட்டது என்றே எண்ணினார்கள்.

ஃ ஃ ஃ

துரோணர், சேனையைச் 'சகட' வியூகமாக வகுத்தார். அது வரை விலகி நின்ற கர்ணனுடைய தேர் யுத்த களத்தில் முதல் தடவையாக இங்குமங்கும் செல்வதைக் கண்டு கௌரவப் படைவீரர்கள் மகிழ்ச்சியும் தைரியமும் அடைந்தார்கள்.

''பிதாமகர் பார்த்தர்களைக் கொல்ல மனமில்லாமல் யுத்தத்தை நடத்தினார். கர்ணன் அவ்வாறு செய்ய மாட்டான். பாண்டவர்களுடைய நாசம் இனிமேல் நிச்சயம்'' என்று கௌரவ சேனையில் பேசிக் கொண்டார்கள்.

துரோணர் கௌரவ சேனையில் தலைமை வகித்து ஐந்து நாள் யுத்தம் நடத்தினார். முதியவராயிருந்தும் யுவனைப்போல் யுத்தகளத்தில் எங்கும் பிரவேசித்து உன்மத்தனைப்போல் போர் புரிந்தார். காற்றானது மேகங்களைச் சிதற அடிப்பதுபோல் பாண்டவ சேனையைத் துன்புறுத்திச் சிதற அடித்தார். சாத்யகியையும் பீமனையும் அருச்சுனனையும் திருஷ்டத்யும்னனையும் அபிமன்யுவையும் துருபதனையும் காசி ராஜனையும் இன்னும் அநேக வீரர்களையும் தாமே எதிர்த்துத் தோல்வியுறச் செய்தார். பாண்டவ சேனையை ஐந்து நாட்கள் மிகவும் துன்புறுத்தினார்.

## 77. உயிருடன் பிடிக்க

துரோணர் தலைமை வகித்ததும் துரியோதனனும் கர்ணனும் துச்சாதனனும் மந்திராலோசனை செய்து ஒரு முடிவுக்கு வந்தார்கள். அதன் மேல் துரியோதனன் துரோணரிடம் சென்று, ''ஆசார்யரே! யுதிஷ்டிரனை நீர் எப்படியாவது பிடித்து நம்மிடத்தில் ஒப்புவிக்க விரும்புகிறோம். இதற்கு மேல்

நாங்கள் எதையும் விரும்பவில்லை. இதை நீர் செய்வீராகில் நானும் என்னைச் சேர்ந்தவர்கள் எல்லோருமே மிகவும் திருப்தி அடைவோம்'' என்றான்.

இதைக் கேட்டதும் துரோணர் அளவு கடந்த சந்தோஷமடைந்தார். பாண்டவர்களைக் கொல்லத் துரோணருக்கு மனமில்லை. கடமையைச் செலுத்த யுத்தத்தில் சேர்ந்தவராயினும் பாண்டு புத்திரர்களை அதிலும் யுதிஷ்டிரனைக் கொல்வது தருமமன்று என்று சந்தேகித்துக் கொண்டிருந்த துரோணருக்குத் துரியோதனன் சொன்னது மிகுந்த மகிழ்ச்சி தந்தது.

''துரியோதனனே! நீயுமா யுதிஷ்டிரனுடைய உயிரைக் காப்பாற்ற விரும்புகிறாய்? உனக்கு மங்களம் ஆகுக! தருமபுத்திரனுக்கு உயிர்ச் சேதம் ஆக வேண்டாம் என்று நீயும் சொன்ன பின் அவன் அஜாதசத்துரு என்பதில் என்ன சந்தேகம்? பகையற்றவன் என்று குந்திநந்தனுக்குத் தந்திருக்கும் பெயரை நீ உண்மையாக்கினாய். உயிரோடு பிடிக்க வேண்டும்; கொல்லலாகாது என்று நீயும் வேண்டுகிறாயான படியால் யுதிஷ்டிரனுடைய புகழ் பதின்மடங்காயிற்று. அவனே பாக்கியசாலி!'' என்றார் துரோணர்.

மறுபடியும், ''அப்பனே! நீ சொல்லியதிலிருந்து யுத்தத்தில் ஜெயித்துவிட்டு அவர்களுக்குச் சேர வேண்டிய ராஜ்ய பாகத்தை முடிவில் அவர்களுக்குக் கொடுத்துச் சமாதானம் செய்து கொள்ளவே உத்தேசித்திருக்கிறாய் என்று தெரிகிறது. இதனால் அல்லவோ நீ யுதிஷ்டிரனைக் கொல்லாமல் உயிரோடு பிடித்துத் தரச் சொல்கிறாய்'' என்று சந்தோஷப்பட்டார்.

''புத்திமானான தருமபுத்திரனுடைய பிறப்பே நல்ல பிறப்பு. குந்தி புத்திரனல்லவோ பாக்கியசாலி? அவனுடைய குணமல்லவோ பகைவனுடைய உள்ளத்தையும் வென்றது?'' என்று திரும்பத் திரும்பத் தரும வாழ்க்கையின் வெற்றியை எண்ணித் திருப்தி அடைந்தார்.

சகோதர நேசத்தைத் துரியோதனன் விடவில்லை என்று ஆசாரியர் துரியோதனனைப் பற்றி மகிழ்ச்சியடைந்தார்.

துரியோதனனுடைய யோசனையோ வேறு. அவனுடைய உள்ளத்தில் பகையும் பாப எண்ணமும் முன்போலவே இருந்தன. ''அப்படியே ஆகட்டும்.



உயிரோடு யுதிஷ்டிரனைப் பிடித்துத் தருவேன்'' என்று துரோணர் சொன்னதும் தன் உண்மையான எண்ணத்தை அவருக்கு வெளியிட்டான்.

யுதிஷ்டிரனைக் கொன்றால் பாண்டவர்களுடைய கோபம் தணியாது. முன்னைவிட அதிகரித்து அனைவரும் நாசமாகும் வரையில் யுத்தம் நடக்கும். தன்னுடைய சேனை தோற்கடிக்கப்படும்; பாண்டவர்கள் ஜெயம் பெறுவார்கள். அல்லது இரண்டு பக்கத்து வீரர்களில் யாவரும் மிச்சம் இல்லாமல் இருந்தாலும் கிருஷ்ணன் உயிருடன் இருப்பான். அவன் திரௌபதியோ குந்தியோ ராஜ்யத்தை அடையச் செய்துவிடுவான். ஆகையால் யுதிஷ்டிரனைக் கொல்லுவதில் லாபம் ஒன்றுமில்லை. யுதிஷ்டிரனை உயிரோடு பிடித்து விட்டால் யுத்தம் சீக்கிரமாகவும் வெற்றிகரமாகவும் முடிந்துவிடும். க்ஷத்திரிய தருமத்துக்கும் சத்தியத்துக்கும் பயந்த தருமபுத்திரனை எப்படியாவது மறுபடியும் சூதாட்டத்தில் இழுத்து ஏமாற்றலாம். மறுபடியும் காட்டுக்கு அனுப்பி விடலாம். பத்து நாட்கள் யுத்தம் நடந்த அனுபவத்திலிருந்து யுத்தத்தினால் குலநாசம் உண்டாகுமேயொழிய காரியசித்தி பெற முடியாது என்பதைத் துரியோதனன் கண்டான். இதனாலேதான் அவன் யுதிஷ்டிரனை உயிரோடு பிடித்துத் தர வேண்டும் என்று துரோணரை வேண்டியது. துரோணர் இதை அறிந்ததும் தாம் முதலில் மகிழ்ந்தது பொய்யாயிற்று என்று வருத்தப்பட்டுத் துரியோதனனை மனத்தில் மிகவும் இகழ்ந்தார். ஆயினும் யுதிஷ்டிரனைக் கொல்லாமலிருக்க எப்படியோ ஒரு வழி ஏற்பட்டதே என்று சந்தோஷப்பட்டார்.

துரோணர், யுதிஷ்டிரனை உயிரோடு பிடிக்கப் பிரதிக்ஞை செய்திருக்கிறார் என்கிற செய்தி சாரணர்கள் மூலம் பாண்டவ சேனைக்கும் தெரிந்துவிட்டது. ஆசாரியர் ஒரு காரியத்தைச் செய்து முடிக்க வேண்டும் என்று நிச்சயம் செய்து பிரதிக்ஞையும் பண்ணினார் என்றால் அவருடைய ஒப்புயர்வற்ற ஆயுதப் பயிற்சியையும் சூரத்தனத்தையும் அறிந்த பாண்டவர்கள் பயப்பட வேண்டியதாயிற்று. யுதிஷ்டிரன் அருகில் போதிய காப்பு எப்போதும் இருக்க வேண்டும் என்று அனைவரும் கவலை கொண்டார்கள்.

அதற்கேற்றபடியே போரின் கிரமத்தை ஒழுங்குபடுத்திக் கொண்டார்கள். எந்தச் சமயத்திலும் யுதிஷ்டிரனுக்குக் காப்புக் குறையாமலிருக்குமாறு படைகளை வியூகப்படுத்தினார்கள்.

துரோணர் தலைமையில் நடந்த முதல் நாள் யுத்தத்தில் அவர் தம்முடைய பராக்கிரமத்தை நன்றாகக் காட்டினார். நெருப்பானது உலர்ந்த காட்டைக் கொளுத்துவது போல் பாண்டவ சேனையைக் கொளுத்திக் கொண்டு சஞ்சரித்தார். ஒரு துரோணர் அநேக துரோணர்களானதாகப் பாண்டவ சேனை எண்ணுமாறு இங்குமங்கும் தம் தேரைச் செலுத்தி அம்பு மழை பெய்து யுத்த களம் முழுவதும் தாண்டவமாடச் செய்தார்.

திருஷ்டத்யும்னன் இருந்த இடத்தில் பாண்டவ சேனையைப் பிளந்தார். மகாரதர்களுக்குள் துவந்த யுத்தங்கள் பல நடந்தன. மாயச் சண்டை செய்வதில் வல்லவனான சகுனிக்கும் சகதேவனுக்கும் யுத்தம் நடந்தது. தேர்கள் ஒடிந்தன. கீழே இறங்கிக் கதாயுதங்களைக் கொண்டு இரண்டு மலைகள் உயிர் பெற்றுப் போர் செய்வதுபோல் கைகலந்தார்கள்.

பீமனுக்கும் விவிம்சதிக்கும் பெரும் போர் நடந்தது. இருவருடைய தேர்களும் உடைந்தன. சல்லியன் தன் மருமகனான நகுலனை எதிர்த்துச் சிரித்துக் கொண்டே மிகவும் துன்புறுத்தினான். நகுலன் கோபங் கொண்டு மாமனுடைய தேரின் கொடியையும் குடையையும் உடைத்துக் கீழே தள்ளி வெற்றிச் சங்கு ஊதினான். கிருபாசாரியர் திருஷ்டகேதுவை எதிர்த்து அவனை நன்றாக அடித்துத் துரத்தினார். சாத்யகிக்கும் கிருதவர்மாவுக்கும் பெரும் யுத்தம் நடந்தது.

விராடன் கர்ணனை எதிர்த்தான். அபிமன்யுவின் பராக்கிரமம் வழக்கம் போல் அற்புதமாக ஜொலித்தது. கௌரவன், கிருதவர்மன், ஜயத்ரதன், சல்லியன் ஆகிய நான்கு பெரிய வீரர்களையும் ஒருவனாகவே நின்று முறியடித்தான்.

அதன் பிறகு பீமனுக்கும் சல்லியனுக்கும் உக்கிரமான கதாயுதச் சண்டை நடந்தது. முடிவில் சல்லியன் பீமனால் தோற்கடிக்கப்பட்டு யுத்தத்தினின்று விலகினான். கௌரவ சேனை தைரியம் இழந்தது. அதைத் தொடர்ந்து பாண்டவ சேனை கௌரவ சேனையை மிகவும் துன்புறுத்தி ஒழுங்கிழந்து கலையச் செய்தது.

ஃ ஃ ஃ

இதைக் கண்டு தம் சேனையை உற்சாகப்படுத்துவதற்காகத் துரோணர் சாரதியைப் பார்த்து யுதிஷ்டிரன் இருக்குமிடத்துக்குத் தேரை வேகமாக ஓட்டச் சொன்னார். அழகும் பலமும்

கொண்ட நான்கு சிந்து தேசத்து ஜாதிக் குதிரைகள் பூட்டியதும், பொன் மயமானதுமான தேர் மாய வேகமாக யுதிஷ்டிரனுடைய தேரை நோக்கிச் சென்றது. உடனே யுதிஷ்டிரன் கழுகு இறகுகள் பூண்ட கூர்மையான அம்புகளைத் துரோணர் மேல் விட்டான். ஆசாரியர் தயங்கவில்லை. தன் பாணங்களால் தரும புத்திரனைத் தாக்கி அவனுடைய வில் அறுபட்டுக் கீழே விழச் செய்து, வெகு விரைவாக அவன் அருகில் சென்றார். திருஷ்டத்யும்னன் துரோணரை எதிர்த்துத் தடுத்தும் துரோணரை நிறுத்த முடியவில்லை. அவருடைய வேகத்தை யாருமே தடுக்க இயலாதவர்களாக நின்றார்கள்.

''யுதிஷ்டிரர் பிடிபட்டார்! யுதிஷ்டிரர் பிடிபட்டார்!'' என்கிற ஆரவாரம் யுத்த களம் முழுதும் பரவிற்று.

அப்போது அருச்சுனன் திடீர் என்று அவ்விடம் வந்து சேர்ந்தான். பூமி அதிர அவனுடைய தேரானது ரத்த நதியையும் எலும்புக் குவியல்களையும் கடந்து அவ்விடம் வந்ததும் துரோணர் தயங்கினார்.

அம்புகளைத் தொடுப்பதும் விடுவதுமான மத்திய காலம் யாருக்கும் காணாமல் காண்டீபம் இடைவிடாது சரமாரி பெய்தது. யுத்தகளத்தில் பாணாந்தகாரம். அதாவது, அம்புகள் வானத்தை மூடி இருட்டு உண்டாயிற்று.

துரோணர் பின் வாங்கிச் சென்றார். யுதிஷ்டிரன் பிடிபடவில்லை. யுத்தமும் அன்று நிறுத்தப்பட்டது. கௌரவ சேனை பயத்துடன் திரும்பிற்று. பாண்டவ சேனையும் கம்பீரமாக யுத்தகளத்தை விட்டு இரவில் தங்குமிடம் சென்றது. படைகள் அனைத்துக்கும் பின்பாகக் கேசவனும் அருச்சுனனும் பாசறைக்குச் சென்றார்கள். இவ்வாறு பதினோராவது நாள் யுத்தம் முடிந்தது.

## 78. பன்னிரண்டாவது நாள்

யுதிஷ்டிரனை உயிருடன் பிடிக்கும் பிரயத்தனம் முதல் நாளில் செய்தது தோல்வியாக முடிந்தது. துரியோதனனைப் பார்த்துத் துரோணர் சொன்னார்: ''தனஞ்சயன் அருகில் இருக்கும் வரையில் யுதிஷ்டிரனைப் பிடிக்க முடியாது. என்னால் வஞ்சனையில்லை. ஏதாவது உபாயம் செய்து தனஞ்சயனை வேறு இடத்துக்கு இழுத்துக் கொண்டு போய் யுதிஷ்டிரனைத் தனியாகப் பிரித்து விட்டால் நான் சேனையை உடைத்து யுதிஷ்டிரனைப் பிடிப்பேன். யுத்தத்துக்குப் பயந்து அவன் ஓடிப்போகாமல் நின்று போர் செய்தானானால் அவனை நிச்சயமாகப் பிடித்துத் தருவேன். அப்படி அவன் நிற்காமல் யுத்த பூமியிலிருந்து ஓடினால் அதுவே வெற்றியாகுமல்லவா?'' என்றார்.

அவ்வாறு துரோணர் சொன்னதைக் கௌரவ சேனையிலிருந்த திரிகர்த்த தேசாதிபதியான சுசர்மன் கேட்டுக் கொண்டிருந்தான். அவன் தன்னுடைய சகோதரர்களுடன் யோசனை செய்தான். அவர்கள் சம்சப்தக விரதம் பூண்டு அருச்சுனனைப் போருக்கு இழுத்து யுதிஷ்டிரனை விட்டுப் பிரிந்து போகச் செய்ய நிச்சயித்தார்கள்.

ஒரு பெருஞ் சேனையைத் திரட்டி எல்லோரும் சேர்ந்து அக்கினியை அர்ச்சனை செய்து, புல்லால் செய்யப்பட்ட ஆடைகளை அனைவரும் தரித்து, சரீரத்தை விட்டுவிட உறுதி செய்து கொண்டு ''நாங்கள் யுத்தத்தில் தனஞ்சயனைக் கொல்லாமல் திரும்ப மாட்டோம். பயந்து புறங்காட்டி ஓடினோமானால் மகா பாபங்களையெல்லாம் செய்த தோஷத்தை அடைவோமாக'' என்று மரண காலத்தில் செய்ய வேண்டிய தானங்களையெல்லாம் செய்து விட்டு யுத்த களத்தில் யமனுடைய திக்கை நோக்கிப் பிரவேசித்தார்கள்.

''அருச்சுனா!'' என்று தனஞ்சயனை அறைகூவி யுத்தத்துக்கு அழைத்தனர். ஒரு முக்கியமான நோக்கத்துக்காக ஒரு படையோ தனிப் படையாட்களோ தங்கள் உயிரை மாய்த்துக் கொண்டு காரிய சாதகம் செய்விப்பது என்கிற தற்கொலை முறையை இந்தக் காலத்து யுத்தங்களிலும் காணலாம். அருச்சுனனைத் தூர இழுத்துக் கொண்டு போக வேண்டிய நோக்கத்துடன் ஏற்பட்ட தற்கொலைப் படையாகத் திரிகர்த்தர்கள் 'சம்சப்தக'' பிரதிக்ஞை எடுத்துக் கொண்டு அருச்சுனனை அழைத்தார்கள்.

அருச்சுனன் தர்மராஜரைப் பார்த்து, ''அரசனே! சம்சப்தக விரதம் பூண்டவர்கள் என்னைப் பெயரிட்டுக் கூவுகிறார்கள். யுத்தத்துக்கு யாரேனும் அழைத்தால் பின்வாங்குவதில்லை என்கிற பிரதிக்ஞையால் நான் கட்டுப்பட்டிருக்கிறேன் அல்லவா? சுசர்மனும் அவனைச் சேர்ந்தவர்களும் என்னை யுத்தத்துக்கு அழைக்கிறார்கள். இவர்களையும், இவர்களுடைய பரிவாரங்களையும் கொன்று திரும்புவேன். எனக்கு அனுமதி தர வேண்டும்'' என்றான்.

**(தொடரும்)**




# கண்டங்கள் கடக்கும் கார்கள்

“தம்பி ! இப்படிக் கோபித்துக் கொண்டு மலையேறி வந்து உட்கார்ந்து விட்டாயே ! என் மீது கோபமா ?” கையில் கனியுடன் மூச்சு வாங்க வந்து நின்றான் கஜானனன்.

மயூரவாகனன் முகம் கொடுத்துப் பேசவில்லை. பந்தயத்தில் வெற்றி வாகை சூடிச் சாதுரியப் பேச்சினால் இன்னொருவன் பரிசைத் தட்டிக் கொண்டு போய் விட்டால் பந்தயத்தில் பங்கு கொண்டு தோற்பவனுக்குப் பேசத் தோன்றுமா ?

“தம்பி! உண்மையைக் கேட்டால் பந்தயத்தில் வெற்றி கொண்டவன் நீதான்! நான் அப்பா — அம்மாவைச் சுற்றி வந்து உலகத்தை வலம் வந்ததாகக் கூறிப் பரிசைப் பெற்றது என்னவோ உண்மைதான்! ஆனால் நீ உலகத்தை வலம் வந்து பெற்ற அநுபவத்துக்கெதிரே என் வெற்றி எம்மாத்திரம்? நான் திர யோசித்துப் பார்த்தேன். நான் பெற்றிருக்கும் கனியைக் காட்டிலும் நீ பெற்றிருக்கும் அநுபவம்தான் பெரிய பரிசு ! உனது சாதனைக்காக நான் பரிசாகப் பெற்ற இந்தக் கனியை உனக்குப் பரிசாகத் தருகிறேன்!”

கஜானனது உள்ளத்திலிருந்து வெளிவந்த இந்தச் சொற்களே தம்பி மயூர வாகனனுக்குப் பெரும் பரிசாகத் தோன்றியது. அவன் பட்ட ஆயாசங்களெல்லாம் நீங்கி மனக் களிப்பு ஏற்பட்டது: பந்தயத்தில் வெற்றி கண்ட பெருமிதமும் தோன்றியது.

இந்தக் கற்பனையிலே ஓர் உண்மை பொதிந்திருக்கிறது. பந்தயம் என்பது உலகத்துக்குப் புதிதன்று. அதுவும் குறிப்பாகப் பாரத நாட்டுக்குப் புதிதே அன்று. வரலாறு காணாத காலத்திலிருந்தே பந்தயங்கள் பல வகையில் நடைபெற்றிருக்கின்றன. அவை மனத்துக்கு ஒரு புத்துணர்வையும், அறிவு வளர்ச்சியையும் அநுபவ முதிர்ச்சியையும் நல்கியிருக்கின்றன.

இந்த இயந்திர யுகத்திலோ காரோட்டிப் பந்தயம் நடத்திக் களிப்பெய்துகிறார்கள். அதிலும் இப்பொழுது ஒரு புதுமையைப் புகுத்தி லண்டன் — சிட்னி பந்தயம் நடைபெறுகிறது. அந்தக் கார் ஓட்டப் பந்தயத்தின் கட்டம் ஒன்றைத்தான் பம்பாய் நகரம் இந்த டிஸம்பர் மாதம் முதல் வாரத்தில் புத்தம் புதுக் காட்சியாகக் கண்டது !

ஆம், பம்பாயில் மக்கள் நடமாட்டம் நெருக்கமாயுள்ள சாலைகளைக் கன வாகவமாகக் கடந்து கொண்டு, மக்களின் களிப்புக் குரலையும் செவிமடுத்துக் கொண்டு ஒரு கார் விர்ரென்று பறந்து வந்தது! தென் பம்பாய்ப் பகுதியில் உள்ள பல்லார்டு கடல் முனையில் 'டன்லப்' நிறுவனத்துக்கெதிரே வந்து கன கம்பீரமாக நின்றது!

அதன் மேனியில்தான் எத்தனை காயங்கள்! கீறல்கள்! போர் முனையிலே பல விழுப் புண்களை ஏற்ற பெரு வீரன் போல. அது மட்டுமா ? அதன் நீல நிற மேனியே புலப்படாமல் கலப் புழுதி மண்டிக் கிடந்தது ! ஓர் கண்டப் புழுதியா ? இரண்டு கண்டப் புழுதியா ? உண்மையைக் கேட்டால் ஐரோப்பா, ஆசியா இரண்டு கண்டங்களுக்கும் சொந்தமான புழுதி அது. கிட்ட நெருங்கிப் பார்த்த பின்னரே 'மெர்ஸிடஸ்

820 எஸ். இ.' என்னும் எழுத்தும் இலக்கங்களும் கண்ணுக்குப் புலனாகும் அளவுக்கு அந்தப் புழுதி மண்டிக் கிடந்தது !

அடுத்த பதினாறு நிமிடங்களுக்கெல்லாம் இன்னொரு கார் வந்தது ! அன்று கண்ட மேனி என்பார்களே, அப்படி அல்ல : முன் கண்ட காருக்குக் கடுகளவும் மேனி குறையாமல் ! அதனை ஓட்டி வந்தவர்கள் மூன்று பிரிட்டிஷ்காரர்கள் !

இவற்றைப்போல் தொண்ணூற்று எட்டுக் கார்கள் லண்டனிலிருந்து புறப்பட்டுள்ளன. பதினாயிரம் மைல் ஓட்டப் பந்தயத்தில் முதல் பரிசைத் தட்டிக் கொண்டுவிட வேண்டும் என்ற ஆசையில். முதற் பரிசு 10,000 பவுன்கள். அதாவது, 1,50,000 ரூபாய்கள்! 'இந்தத் தொகைக்காகவா இத்தனை சிரமங்களை ஏற்றுக் கொள்ள வேண்டும்?' என்று இன்றைய பாரதம் நினைக்கலாம், அவலை நினைத்துக் கொண்டு உரலை இடிக்கும் கதையாக. ஆனால் உழைப்பும் உள்ளத் துடிப்பும், எந்த ஆபத்தையும் அலட்சியமாகக் கடக்கும் தீர உணர்வும் தரும் பரிசுக்கெதிரே அவை எம் மாத்திரம் என்பதைச் சொல்லவா வேண்டும்?

இந்தப் பரிசைக் காட்டிலும், இந்தப் பந்தயத்தினால் தொழிற் துறைக்குக் கிட்டும் பலன், விளம்பர அநுகூலம், உலகப் புகழ் ஆகியவை சொல்லத் தரமன்று.

இந்தப் பந்தயத்துக்கு ஏற்பாடு செய்த பெருமை லண்டனில் உள்ள புகழ் வாய்ந்த ஒரு செய்தித் தாளைச் சேர்ந்ததாகும். லண்டன் — சிட்னிக்கிடையே இந்தக் கார்கள் நிலத்தில் பத்தாயிரம் மைலை ஒன்றன் பின் ஒன்றாக இடைவெளி, கால வெளி கொடுத்து ஓட்டிக் கடந்தாக வேண்டும். ஒரு நாளைக்கு ஆயிரம் மைல் என்ற கணக்கில் பத்தே நாட்களில் இத்தனை தூரத்தையும் அவை கடக்கும். இடையே குறுக்கிடும் கடல்களைக் கடக்கக் கப்பல்கள் இவற்றுக்கு உதவி புரியும்.

இந்தப் பந்தயத்தில் முதலில் வரும் கார் தான் பரிசைத் தட்டிக் கொண்டு போகும் என்று கூற முடியாது. ஏனெனில், வேறு பல சோதனைகளையும் வைத்திருக்கிறார்கள். இதற்கென்று பல சட்ட திட்டங்கள் வகுத்திருக்கிறார்கள். டிரைவரின் ஓட்டும் திறனுக்கு ஒரு சோதனை என்றால், ஓட்டப்படும் கார்களின் உறுதிப்பாட்டுக்கும் அது சோதனையாக முடியும்.

இந்தப் பந்தயக் கார்கள் வரும் வழியிலே பல தணிக்கை நிலையங்கள் நிறுவப்பட்டுள்ளன. ஒவ்வொரு காரும் குறிப்பிட்ட நேரத்துக்குள் அங்கு வந்து தன் வருகையைப் பதிவு செய்து கொள்ள வேண்டும். ஒரு டிரைவர் ஒரு நிமிஷம் தாமதப்படுத்தினாலும் ஓர் எண் குறைக்கப்படும். எனவே, குறைவான கழித்தல் குறிகள் பெற்றிருப்பவர்களே பரிசுக்கு உகந்தவர்களாகத் தீர்மானிக்கப்படுவார்கள் !

லண்டனிலிருந்து சிட்னி வரை மூன்று கண்டங்கள், — ஐரோப்பா, ஆசியா, ஆஸ்திரேலியா. சீதோஷ்ண நிலை நாட்டுக்கு நாடு வேறுபடக்கூடும். ஓரிடத்தில் மலையில் ஏற வேண்டும் என்றால், இன்னோரிடத்தில் கிடுகிடு பள்ளத்தாக்கில் இறங்க வேண்டியிருக்கும் ! சோலையின் இன்பத்தை நுகர்ந்து கொண்டே வருபவர்கள் இடையிலே பெரும் பாலையின் துன்பத்தை அநுபவிக்க நேரிடலாம். செப்பனிட்ட சாலைகள் ஒரு சமயம் வரும். இன்னொரு சமயம் கரடு முரடான பாதைகளில் செல்ல வேண்டியிருக்கும்! சுற்றி வளைத்து, 'வி'யும், 'எஸ்'ஸும் போட்டுச் செல்லும் சாலைகளையும் சமாளிக்க நேரிடும்.

துருக்கியிலே பனி மூட்டம் போட்டிருக்கும் பாதையைக் கடக்க வேண்டி நேரிட்டிருக்கிறது. ஆஸ்திரேலியாவிலோ 50 டிகிரி 'ஃபாரன் ஹீட்' உஷ்ணத்தில் செல்ல வேண்டியிருக்கும். சில இடங்களில் மழை; சில இடங்களில் குளிர். இத்தனைக்கும் ஈடு கொடுத்துக் கொண்டு மனிதர்களும், மெஷின்களும் பந்தயத்தில் பங்கு கொண்டாக வேண்டும். மோட்டார் வரலாற்றிலேயே இத்தனை நீளமான, கடுமையான பந்தயம் இதுவரை நடந்தது கிடையாது.

ஐரோப்பா, ஆசியா, ஆஸ்திரேலியா—இம் மூன்று கண்டங்களையும் கடக்கும் இவர்கள் இடையிலே பாதையில் எத்தனையோ கண்டங்களைக் கடந்தாக வேண்டியிருக்கும். இம்மூன்று கண்டங்களையும் சேர்ந்த பல நாடுகளையும் இவர்கள் காணப் போகிறார்கள். இங்கிலாந்தில் தொடங்கி, பிரான்சு, இத்தாலி, யூகோஸ்லேவியா, பல்கேரியா, ஈரான் துருக்கி, ஆப்கானிஸ்தான், மேற்குப் பாகிஸ்தான், இந்தியா வழியாக ஆஸ்திரேலியாவை அடைந்து, ஸிட்னியைச் சேரப் போகிறார்கள்.

ஆஸ்திரேலியாவின் ஒரு முனையிலிருந்து மறு முனையில் உள்ள ஸிட்னிக்கு மூவாயிரம் மைல் இடைவெளி உள்ளது. டிஸம்பர் 14ந் தேதி தொடங்கி, 17ந் தேதி ஆஸ்திரேலியாவில் ஸிட்னி நகரில் இந்தப் பந்தயம் முற்றுப் பெற்றாக வேண்டும்.

இப்பொழுது ஆஸ்திரேலியாவில் கோடை காலம். கடக்க வேண்டிய மூவாயிரம் மைல்களில் பெரும் பகுதி தூரம் ஒரே பாலைவனம். பாதை புரிந்து கொள்ள முடியாத பல நாட்டுப்புறங்கள் இடையே குறுக்கிடும். இவற்றைக் கடந்து வெற்றி காண முயல வேண்டுமென்றால், பந்தயத்தில் கலந்து கொண்டுள்ளவர்களுக்கு எத்தனை நெஞ்சுரம் வேண்டும் ?

பதினைந்து நாடுகள் இப்பந்தயத்தில் கலந்து கொண்டுள்ளன. அவற்றில் ருஷ்யாவும் ஒன்று. ஏறக்குறைய இருபத்தைந்து கார் தயாரிக்கும் ஸ்தாபனங்கள் இப் போட்டியில் பங்கெடுத்துக் கொண்டுள்ளன. 1930ஆம் வருஷத்து பென்ட்லி ஸ்போர்ட்ஸ் மாடல் கார் ஒன்றும் இந்தப் பந்தயத்தில் கலந்து கொண்டுள்ளதென்றால், இத்துறையில் உள்ள ஆர்வத்தை என்ன என்பது?

இந்தப் பந்தயக் கார்களின் அணிவகுப்பு டெஹ்ரானை அடையும்பொழுது ஏறக்குறைய பதினேந்து கார்கள் பந்தயத்திலிருந்து விலக்கப்பட்டுள்ளன. சாலை விபத்துக்களுக்கும், கொடூர வானிலைக்கும் அவை இலக்காகியதே காரணம். இந்தியாவிலிருந்து ஒரு டாக்டரும், ஒரு ரெஸ்டாரண்ட் முதலாளியும் இப்பந்தயத்தில் கலந்து கொண்டார்கள். இருவரும் பம்பாயைச் சேர்ந்தவர்கள். இரு-

வரும் சாலைப் பள்ளத்தில் விழுந்து விபத்துக்குள்ளானார்கள். இன்னும் நிலை தெரி அவர்கள் வரவில்லை. பெண்ட்லி 1930 கூட விபத்தில் சிக்கிப் பந்தயத்திலிருந்து விலக்கப் பட்டு விட்டது.

ஆண்களுக்குப் பெண்கள் சளைப்பில்லை என் பதை நிரூபிப்பதே போல், ஆபத்துச் சூழ்ந்த இந்தப் பந்தயத்தில் இரண்டு கார்கள் முழுக்க முழுக்கப் பெண்களை டிரைவராகக் கொண்டே தொடர்ந்து வருகின்றன.

டிஸம்பர் நாலாந் தேதிக்குள் 71 கார்கள் பம்பாயை அடைந்துவிட்டன. அவற்றில் ஒன்று நீங்கலாக மற்றவை பந்தயத்துக்கு உகந்தவை என்று தீர்மானிக்கப்பட்டு ஃபிரீமாண்டலுக்கு (ஆஸ்திரேலியத் துறைமுகம்) கப்பல் ஏறிவிட்டன. 14ந் தேதி தொடங்கி 17ந் தேதி பந்தயம் முடியப் போகிறது! வெற்றி யாருக்குக் கிடைத்தாலும் மூன்று கண்டங்களின் பூகோளத்தைக் கண்டு வரலாறு சமைத்த பெருமையை இப்பந்தயத்தில் கலந்து கொண்டவர்கள் எல்லாருமே அடையப் போகிறார்கள்.

மேற்குப் பாகிஸ்தான் வழியாகத் தில்லி அடைந்து, அங்கிருந்து பம்பாய்க்கு வந்து சேர்ந்த குழு நம் நாட்டுச் சாலைகளைப் பற்றிப் பாராட்டுத் தெரிவித்து நந்தனார் சரித்திரக் கீர்த்தனையைத் தங்களுக்குச் சாதகமாகச் சிறிது மாற்றியமைத்துப் பாடியுள்ளது, 'வழி மறைத்திருக்கின்றனவே மாடுகள்?' என்று. அவற்றை ஆபத்திலிருந்து தப்புவித்து, தாங்களும் அவற்றின் ஆபத்திலிருந்து தப்பிவர அவர்கள் அரும் பாடுபட வேண்டியிருந்ததாம். மூன்று கண்டங்களைத் தாண்டி வரும் போது, இது போன்ற எத்தனையோ கண்டங்களுக்குத் தப்பிப் பிழைத்து வந்துள்ள நாங்கள் இதை ஒரு பெரிய கண்டமாகக் கருதவில்லை என்று கூறுபவர்கள் ஆசியா கண்டத்தைப் பெரிதில்லை என்று மறுக்கவில்லை; அதன் பகுதியான பாரதத்தின் பெருமையை ஏற்கவும் தவறவில்லை. —ரா.வீ.

---

# ருஷ்ய ரகசியம்!

□ "பத்தாயிரம் இருக்குமா? இருபதினாயிரம் இருக்குமா?"

"லாட்டரிச் சீட்டில் விழுந்த தொகையைக் கேட்கிறீரா? முப்பதினாயிரத்துக்குக் குறைச்சலில்லே!"

"உம்ம அதிர்ஷ்டமும் நீரும்! இங்கே முப்பதாயிரம் பேர்களுக்கிடையில் சீட்டுக்கு லாட்டரி அடிக்க வேண்டியதுதான் நீங்க!"

□ "ஏ, அப்பா! எத்தனை ரஷ்யர்கள் தங்கள் குடும்பத்தோடு வந்திருக்கிறார்கள், பார்த்தீர்களா?"

"அத்தனை பேரும் பணம் கொடுத்து டிக்கெட் வாங்கிண்டு வந்திருக்கிறார்களாம்? நெய்வேலியிலிருந்துகூட ஆட்டத்தைப் பார்க்க வந்திருக்காங்க!"

"பத்திரிகைப் பிரதிநிதிகள் ஸீட்டைக் காணுமே?"

"மியூஸிக்கல் சேர் ஆட்டம் தெரியுமா! அந்த மாதிரி நடந்து போச்சு! அவரவருக்குக் கிடைச்ச ஸீட்டில் உட்கார்ந்துவிட்டார்கள்."

□ கால் பந்தாட்ட ரஸிகர்கள் குதூகலிக்க, மாஸ்கோவிலிருந்து எண்ணூறு கிலோ மீட்டர் தூரத்திலுள்ள மின்ஸ்கிலிருந்து வந்த டைனமோ கால் பந்தாட்டக்காரர்கள் மைதானத்தில் நுழைந்தார்கள்! பின்னல் இந்திய ஆட்டக்காரர்கள் பவனி வந்தார்கள். காலில் 'டைனமோ' கட்டிக் கொண்டிருக்கிறார்களோ என்னவோ, அத்தனை ஓட்டம் ரஷ்யக் கால்பந்தாட்டக்காரர்களுக்கு. அவர்கள் காலில்தான் பந்தும் பவனி வந்தது! இந்திய கோல் காவலர் ஆந்திர போலீஸ்காரர் ஸலீம் அத்தனை ரஷ்ய ஊடுருவலையும் தடுத்தார்! ஆனால் ஆதமோவ் அடித்த பந்தும், ஸெமினேவ் அடித்த பந்தும் கோல் கோட்டையைத் தாண்டி விட்டன! இந்திய கோஷ்டியைச் சேர்ந்த ஜானகிராமனும், ராஜுவும் ரஷ்ய அணிக்குள் புகுந்து நன்றாகத்தான் ஆடினார்கள். ராஜு அடித்த பந்து கோல் பாருக்கு மேல் போய் விட்டது. ரஷ்ய அணி சென்னையில் இரண்டு கோல் போட்டு வெற்றியைச் சம்பாதித்துக் கொண்டது. ரஷ்யாவில் ஆறுவது ஸ்தானத்தை வகிக்கும் டைனமோ மின்ஸ்க் நம் இந்திய முதல்தர ஆட்டக்காரர்களை வென்று விட்டார்கள்.

இரும்புத் திரையின் பின்னாலிருந்து வந்துள்ள அவர்கள் வெற்றியின் இரகசியம் இதுதான்: "அவர்கள் இரட்டை சென்டர் பார்வார்டு வைத்து 'டான்டம்' (Tandem) முறையில் ஆடுவதால் அகில உலகக் கால் பந்தாட்டத்தில் முன்னேற முடிகிறது."

இரும்புத் திரைக்குப் பின்னால் உள்ள எத்தனையோ ரகசியங்கள் நமக்குத் தெரியாமலே போகலாம். ஆனால் இந்த விளையாட்டு ரகசியத்தைத் தயக்கமின்றிக் கூறிவிட்டார், ருஷ்ய 'கோச்'. —குண்டுமணி






# 007 பாலு

கதை: குமரன் படம்: விஜயா





















கவுண்டரில் இருந்த அதிகாரி உடையைத்தான் பார்த்தார், பாலுவின் முகத்தைக் கவனிக்கவில்லை. சந்திராவின் ஸூட் கேஸை எடுத்துக் கொண்டு விரைந்தான் பாலு.
ஒன் மினிட்டுல வேலை முடிஞ்சுடும் சார்! கவலைப் படாதீங்க!
FRA


சந்திராவின் அருகே அவன் சில விநாடிகள் தாமதித்தான்.
பாலு இது என்ன வேஷம்!
AIR-INDIA
சந்திரா! நான் பம்பாய் போகிறேன். நீ மின்சார ரயிலில் திரும்பிவிடு. இந்தா சில்லறை.


அப்பாவுக்கும் அம்மாவுக்-கும் சொல்லு. மோட்டார் சைக்கிள் இங்கே கார் பார்க்கில் இருக்கு என்று தெரியப்படுத்து.....டாட்டா!
சந்திரா திகைப்பிலிருந்து விடுபடுமுன் பாலு விமானத்தை நோக்கிப் பாதிதூரம் சென்று விட்டான்!


என்ன அப்பா, இது? இன்னுமா லோடிங் முடியல்லை?
லேட் பாஸஞ்சர் டைப்பிடி ஸார்!


'லிஃப்ட் டிரக்' பாலுவையும் அவன் சுமந்து வந்த பெட்டியையும் விமானத்துக்குள் உயர்த்தியது.
யாரு இவன், புது ஆளா?
நேத்திக்குத் தான் டியூட்டியிலே சேர்ந்தானாம்!


விமானத்துக்குள் ஏறிப் பெட்டியை வாங்கி வைத்த பாலு, அங்கேயே சாமான்களுக்கிடையில் பதுங்கிக் கொண்டான்.
விமானத்தில் செல்கிறேன் என்றும் கூட என் பம்பாய் பயணம் தெரியமாட்டாது, நிச்சயம்!
அடுத்த இரண்டு விநாடிகளில்....
இப்படி மலைக்க மலைக்க முழிச்சுக் கிட்டே இருந்தா என்ன அர்த்தம்? கதவைச் சாத்துங்க, சீக்கிரம். நேரமாகிறது!

தொடரும்....

# தலைவலியா?

## போக்க ஒரே ஒரு
## ஸாரிடான் போதும்
'ரோஷ்'



## அது உங்களை புத்துணர்ச்சியுடன் திகழச் செய்யும்!

அதுவே **ஸாரிடானின்** தனிச் சிறப்பு

வலிக்கு நீங்கள் சாப்பிட வேண்டியது ஸாரிடான் தான். வலியை விரைவில் போக்க ஸாரிடானுக்கு ஈடான இதர வழிகள் இருக்கலாம். ஆனால் வலியுடன் ஏற்படும் சோர்வையும் போக்கி தெம்பும் உற்சாகமும் ஊட்டுவதற்காக பிரத்தியேக முறைப்படி தயார் செய்யப்படுவது ஸாரிடான் ஒன்று மட்டுமே. ஆகவேதான் ஒரே ஒரு ஸாரிடான் சாப்பிட்டதும் வலி நீங்கி உங்கள் மூளை சுறுசுறுப்பாக வேலை செய்ய ஆரம்பிக்கிறது. வேலையில் உற்சாகம் ஏற்படுகிறது. சிடு மூஞ்சி போய் சிரித்த முகத்துடன் திகழ முடிகிறது. ஸாரிடான் அளிக்கும் நிவாரணம் நிலையானது. எப்பொழுதும் ஸாரிடான் உங்கள் கைவசம் தயாராய் வைத்திருங்கள்!

## ஸாரிடான் சாப்பிடுங்கள்
'ரோஷ்'



பல்வலி, உடல்வலி, அசௌகரியமான நாட்களில் வலி, இவற்றிற்கும் ஸாரிடான் கைமேல் பலன் தருகிறது. குழந்தைகளுக்கு ¼ லிருந்து ½ வில்லை வரை மட்டுமே போதும்.

VT 7048 a.

'ரோஷ்' தயாரிப்பு    ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள்: வால்டாஸ் லிமிடெட்

# கிளிஞ்சல் கோபுரம்



ஜெகசிற்பியன்

### அத்தியாயம் பத்து

## காதல் சீறுகிறது!

**மா**லை நான்கு மணிக்கே ஆபீஸை விட்டுக் கிளம்பிய பதினைந்து நிமிடங்களில் வீடு வந்து சேர்ந்த முத்து சிவன் அவசரம் அவசரமாய்க் குளித்து வேறு ஆடை புனையப் போன சமயம் சற்றுத் தயங்கி நிதானித்தான். என்ன மாதிரி ஆடை உடுத்துக் கொள்வது என்ற ஒரு விசித்திரமான கேள்வி அவனுள் எழுந்ததே அதற்குக் காரணம்.

இவ்வளவு காலமாக ஆடை அணியும் விஷயத்தில் அவன் ஓர் ஒழுங்கு நியதியைக் கடைப்பிடித்து வந்திருக்கிறான். அதாவது, ஆபீசுக்குப் போகும் போது மட்டும் பேண்டும் கோட்டும் டையும் அணிவான். சில சமயம் கோட்டு இல்லாமல் ஷர்ட்டோ அல்லது ஸ்லாக்கோ அணிந்து செல்வதும் உண்டு. வீட்டுக்கு வந்தபின் சாதாரண எட்டு முழ வேட்டி, முழுக்கைச் சட்டை, தோளில் துண்டு என்ற கோலத்தில்தான் அவனைக் காண முடியும். வீட்டு வேலை சம்பந்தமாகவோ, குடும்ப விஷயமாகவோ வெளியில் செல்வதானால் — அது எவ்வளவு பெரிய காரியமா யிருந்தாலும்— இந்த எளிய உடைகளுடன்தான் செல்வான். நேற்று கனகசபையின் வீட்டுக்குப் போனதும் அவன் இதே ஆடையில்தான்.

உடை உடுத்துவதில்கூட இப்படி ஒரு 'சார்ட்' வகுத்துக் கொள்ள வேண்டியது அவசியம்தானா என்று சிந்திக்காமல், இந்த வழக்கத்தை அவன் வெகு காலமாகவே கைக் கொண்டிருந்தான். அதை எந்தக் காரணத்தை முன்னிட்டும் மாற்றிக் கொண்டதில்லை; மாற்ற நினைத்தது மில்லை.

ஆனால் இன்று அதிலும் ஒரு திருப்பம்: 'வேட்டி, ஷர்ட் அணியலாமா? அல்லது பேண்ட்டும் ஸ்லாக்கும் தரித்துக் கொள்ளலாமா?'

இம்மாதிரி கேள்வியொன்று மனத்தில் எழுந்ததிலிருந்தே இதுவரையில் தான் கடைப்பிடித்து வந்த வழக்கத்தை மாற்றிக் கொள்ள வேண்டும் என்று தன் உள் மனம் இப்போது விரும்புகிறது என்பதை அவன் புரிந்து கொண்டான். அத்துடன் இவ்வளவு காலமாய் இப்படிப்பட்டதொரு பைத்தியக்காரத்தனமான வழக்கத்தை ஏன் கைக்கொண்டு வந்தோம் என்ற வெட்கம் கலந்த வினவும் அவனுள் முளைத்தது.

இவ்வாறு எண்ணமிட்டுக் கொண்டிருக்கும் போதே அவனுடைய கை தானாகவே ஒரு நல்ல டுவீட் பேண்ட்டையும், ஷார்க்ஸ்கின் ஸ்லாக்கையும் எடுத்து உடம்பில் அணிவித்து விட்டது!

அவன் கண்ணாடி எதிரில் தலை வாரிக் கொள்ளப் போய் நின்றான். தன் முகத் தோற்றத்தையும் உடல் அமைப்பையும் ஒரு புகைப்பட நிபுணனின் கண்ணோட்டத்தோடு சற்று நேரம் கூர்ந்து நோக்கினான். வெகு

காலத்துக்குப் பிறகு தன்னைத் தானே தனது முழுப் பிரக்ஞை யுடன் பார்த்துக் கொள்வது இதுவே முதல் தடவை. கல்லூரியில் படித்த காலத்தில் தான் அவன் இத்தகைய பிரக்ஞையோடு தன்னைப் பார்த்துக் கொண்டதாக ஞாபகம். அதனால்தானோ என்னவோ நேற்று வரையில் அவனுடைய உருவத் தோற்றம் அவனுக்கு அந்தப் பழைய சாயலிலேயே மனத்தில் பதிவாகியிருந்தது. அவ்வாறாயின் இந்த இடைக் காலத்தில் தன்னை அவன் கண்ணாடியில் பார்த்துக் கொண்டதே இல்லையா? தினமும் தான் தலை வாரும் போதெல்லாம் பார்க்கிறான். ஆனால் அப்படிப் பார்க்கும் போது தன் முகத்தைத்தான் பார்த்தானே தவிர அதன் சாயலைப் பார்த்ததில்லை. அதாவது, அவனுடைய 'பார்வை'யில் அது படவில்லை. கண்ணையும் மூக்கையும் வாயையும் செவியையும் கேசத்தையும் அதன் வகிட்டையும்



மட்டுமே தனித்தனியாகப் பார்த்து வந்திருக்கிறான். எனவே, அவனுக்கு அந்தப் பழைய முகம்தான் மனத்தில் பதிவாகியிருந்ததே தவிர இப்போதைய முகம் பரிச்சயமில்லாது போய்விட்டிருந்தது.

இந்த நிலையில் இன்று அந்தப் பழைய பிரக்ஞையுடன் கண்ணாடியில் தன்னைப் பார்த்ததுமே அவனுக்கு வியப்பு மட்டுமல்ல, விந்தையானதொரு திகிலும் தோன்றியது.

'யார் இது? இந்த மனிதன் யார்?' என்று தன்னையே கேட்டுக் கொள்வதுபோல் தன் முக பிம்பத்தை அப்படியும் இப்படியுமாகச் சாய்ந்து பார்த்தான். இதற்குமுன் தனக்கு அறிமுகமில்லாத ஓர் அன்னியனை முதன் முறையாகச் சந்திப்

பது மாதிரி ஒருவித விநயக் குழைவுடன் தலை குனிந்து கொண்டு கீழ்நோக்காகப் பார்த்தான்.

'நானா இது? என்னுடையதுதானா இந்த உருவம்?'

அவனுக்கு ஒரே மகிழ்ச்சி, பூரிப்பு! இளம் பிராயத்தில் தான் பார்த்த தனது முகத்தையே இவ்வளவு காலம் 'பார்த்து' வந்த அவன் இப்போது திடீரென்று இந்தப் 'புதிய முகத்தை'ப் பார்த்துப் பூரிப்படையக் காரணம் என்ன? அந்தப் பழைய முகத்திலிருந்த அசட்டுக் களை, அறியாமைச் சாயல், மிரட்சித் தன்மை ஆகிய எதுவுமே இதில் இல்லை. இந்தப் புதிய முகத்தில்தான் என்ன கம்பீரம்! எவ்வளவு மிடுக்கு! எத்தனை பெருந்தன்மை! எத்தகைய குறுகுறுப்பு! என்ன அலட்சியம்! வயது முப்பத்தாறு முடிந்து முப்பத்தேழு ஆரம்பமாகிவிட்டதல்லவா?

ஒரு விசித்திரமான கேள்வி அவன் மனத்தில் எழுந்தது.

'என்னுடைய தம்பி தங்கைகளும், உள்ளூர் உறவினர்களும், நண்பர்களும் மட்டுமின்றி என் அம்மாவும் கூட என்னிடம் பயபக்தியோடு பணிந்தும் குழைந்தும் நடந்து கொள்கிறார்களே, ஏன்? இவர்கள் மட்டுமா? எனது ஆபீஸில் எனக்குக் கீழே வேலை பார்ப்பவர்களும், எனக்கு மேலே உள்ள மானேஜரும், அவருக்கும் மேல் கம்பெனி டைரக்டர்களும்கூட என்னிடம் மிக மிகப் பணிவுடன் நடந்து கொள்வதோடு என் படிப்புக்கும், பதவிக்கும், அந்தஸ்துக்கும் அளிக்க வேண்டிய மதிப்பின் அளவைக் காட்டிலும் அதிகப்படியான மதிப்பு அளித்துக் கௌரவமாக நடந்து கொள்கிறார்களே, ஏன்?'

இந்தக் கேள்விக்கு உடனே ஒரு பதிலையும் கற்பித்துக் கொண்டான். 'அதற்கெல்லாம் பல காரணங்கள் இருக்குமாயினும் அவற்றில் எனது இந்தக் கம்பீரத் தோற்றமே முதல் காரணம் என்பதில் எனக்கு எள்ளத்தனை சந்தேகமும் இல்லை!'

கண்ணாடியில் பிரதிபலித்த தன் 'கனவான் உருவத்'தைப் பார்த்துக் கண் சிமிட்டி நகைத்தான் முத்துசிவன். இப்படி ஒரு தற்கவர்ச்சியில் மயங்கி நின்ற அவனுடைய மனத்திலே இந்நாள்வரை ஏற்பட்டிராத பெருமை உணர்வு ஜிவ்வென்று ஏறிக் கனத்தது. அதனால் அவன் மீண்டும் வாய் விட்டு நகைத்துக் கொண்டே ஓர் அழகு நடைபோட்டுஸ்கூட்டர் சாவியை எடுக்கப் போனவன் சட்டென்று நின்றான்.




'அது சரி; நான் இப்போது எங்கே போகக் கிளம்புகிறேன்? சகுணாவைப் பார்க்க அவளுடைய பள்ளிக்குப் போகிறேனா?'

அவன் முகத்தைச் சுளித்தபடி சுற்றுமுற்றும் பார்த்தான். யாரோ கேலி செய்து சிரிப்பது போன்ற ஒரு பிரமை தட்டியதால்தான் அப்படிச் சுற்றிலும் பார்க்

துக் கொண்டான். தன்னைப் பற்றிய பெருமை உணர்வு ததும்பிக் கொண்டிருந்த அவனுடைய மனத்தில் இப்போது விநோதமான எண்ணம் ஒன்று தலைதூக்கியது.

'அவள் என்ன அவ்வளவு பெரிய கொம்பி! இரண்டுமுறை என்னை நேருக்கு நேர் பார்த்தும் பாராதது போல் போய் விட்டவளை மூன்றாவது முறையும் நானே ஓடி ஏன் பார்க்க வேண்டும்? அப்படி எதற்காக நான் அவளிடம் தாழ்ந்து போக வேண்டும்?'

வேகமாய்த் தலையசைத்துக்கொண்டே திரும்பி வந்து நாற்காலியில் விறைப்பாக உட்கார்ந்து கொண்டான் முத்துசிவன்.

'மற்றவர்களெல்லாம் என்னை ஒரு கனவானாக மதித்துப் பணிவுடனும் பக்தியுடனும் நடந்து கொள்ளும் போது இவள் மட்டும் ஏன் இப்படி மதிக்காமல் நடந்து கொள்கிறாள்? இதை என்னால் அனுமதிக்க முடியாது; அனுமதிக்கவும் கூடாது.'

அலட்சியமாகச் சிரித்தபடி எதிரேயிருந்த மேசைமேல் இரண்டு கால்களையும் தூக்கிப் போட்டு நாற்காலியில் நன்றாகச் சாய்ந்துகொண்டான் அவன்.

'கார் இருக்கிறது, பங்களா இருக்கிறது, பணம் காசு இருக்கிறது என்ற தலைக்கனம் அவளுக்கு! அதனால்தான் அப்படி உதாசீனமாக நடந்து கொள்கிறாள் போலும்! இப்போதே இப்படி என்றால் இன்னும் நான் அவளைக் கல்யாணம் பண்ணிக் கொண்டபின் என்னை எப்படி நடத்துவாள்?'

சட்டென்று அவன் மனம் பழைய சம்பவங்கள் சிலவற்றை எண்ணிப் பார்க்கத் தொடங்கியது.

அவனும் அவளும் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த போது — ஒருவரையொருவர் காதலிக்கத் தொடங்கிய அந்த நாளிலும்கூட — அவள் இப்படித்தான் காரண காரியமில்லாமல், அல்லது ஏதேனும் அற்ப காரணங்களை முன்னிட்டு — அடிக்கடி கோபித்துக் கொண்டு இரண்டு மூன்று தினங்களுக்குப் பேசாமல் இருந்துவிடுவாள். அப்போதெல்லாம் இவன் அவளை விடாமல் துரத்திப் பிடித்துக் கெஞ்சியும் கொஞ்சியும் மன்றாடி மன்னிப்புக் கேட்டு அவளுடைய கோபத்தைப் போக்க முயல்வான். சில சமயம் கண் கலங்கி அழுதும் விடுவான். ஆனால் அதற்காக அவளை இவன் ஒரு முறைகூட அழ வைத்ததில்லை; அவளிடம் கோபித்துக் கொண்டு பேசாமல் இருந்ததில்லை. எட்டிக்குப் போட்டியாக நடந்து கொண்டதுமில்லை. அவள் அப்படித் திண்டாட வைக்கிறாளே என்று வருத்தப்பட்டதும் கிடையாது. ஏனென்றால் அதெல்லாம் அவனுக்கு அப்போது ஒரு புதுமையான இன்பமாகவும், மகிழ்ச்சி தரும் அநுபவமாகவும் இருந்தன. ஆனால் இன்றோ?

'சே, என்ன பைத்தியக்காரத்தனம்! இதற்குப் பெயர் காதலாம்; அந்தக் காதலுக்கு விட்டமின் ஊடலாம்! ஊடல் இல்லாமல் காதல் பயிர் வேர் பிடித்து வளராதாம்! பேத்தல்!'

தன்னுடைய பழைய நடவடிக்கைகளை எண்ணித் தானே வெட்கப்பட்டுக் கொள்கிறவன் போல் முகத்தைச் சுளித்துச் 'சூ' கொட்டிக் கொண்டான் முத்துசிவன்.

'ஓர் ஆண் ஒரு பெண்ணுக்குத் தன்னைக் காட்டிலும் மேலான அந்தஸ்தை அளிப்பதற்காகவே அவளைக் காதலிக்கிறான்; ஒரு பெண் ஓர் ஆணைக் காதலிப்பதோ அவனைத் தனக்குக் கீழே அடக்கி ஒடுக்கி அடிமைப்படுத்த வேண்டும் என்பதற்காக! ஆமாம்; காதல் என்பது ஆணுக்கு இரட்டைச் சிம்மாசனம், பெண்ணுக்கோ அது ஒற்றைச் செங்கோல்! இந்த மோசடிக்கும் இளிச்சவாய்த் தனத்துக்கும் என்னை ஏன் நான் ஆளாக்கிக் கொள்ள வேண்டும்?'

இவ்வாறெல்லாம் வக்கிரமான கேள்விகளையே கிளறி விட்டுக் கொண்டிருந்தது அவன் மனம்.

அது அவனுடைய தவறு அல்ல என்றுதான் சொல்ல வேண்டும். ஏனென்றால், அறிவு குருத்தோலையாகவும், அநுபவம் அரை வேக்காடாகவும், கற்பனை ஊற்றுக் கேணியாகவும், உணர்ச்சிகள் அலைகடலாகவும் இருக்கும் வரையில்தான் காதல் ஒருவனுக்கு ஆராதனைக்குரியதாக இருக்க முடியும்.

முத்துசிவனுக்கோ இப்போது வயசு முப்பத்தேழைத் தொட்டுக் கொண்டிருக்கிறது. இந்த வயசில் ஒரு சராசரி மனிதன் வாழ்க்கை எனும் கொதிகலனில் எந்த அளவுக்கு மூழ்கி எழுந்திருக்க முடியுமோ, அதைவிடப் பன்மடங்கு அதிகமாக முக்குளித்து எழுந்து விட்டிருப்பவன். உலகமறியா இளம் பருவத்திலேயே ஒரு பெரிய குடும்பத்தின் முழுச் சுமையையும் ஏற்க வேண்டிய கட்டாயத்துக்கு உள்ளானவன். அதற்கு முன்னுங்கூடத்

# 'இப்பொழுது என்னுடைய தெம்பையும் சுறுசுறுப்பையும் பார்த்து எல்லாரும் ஆச்சரியப்படுகிறார்கள்!'

ஆனால், சில மாதங்களுக்கு முன் எனக்கு எப்பொழுதும் தள்ளாமை. வேலையே ஓடாது. கடைசியில் நான் ஒரு டாக்டரைப் பார்த்தேன்.



டாக்டர் சொன்னார்: 'உங்களுக்குப் போதிய அளவு போஷாக்கு கிடைக்காத குறைதான். ஹார்லிக்ஸ் சாப்பிடுங்கள்.'



ஹார்லிக்ஸ் சாப்பிடத் தொடங்கிய பின் நான் சுறுசுறுப்பாக வேலை செய்வதைப்பார்த்துஎல்லாரும் ஆச்சரியப்படுகிறார்கள்.

**ஹார்லிக்ஸ்**
அருந்திய பின் நான்
தெம்புடன் திகழ்கிறேன்!

போஷணக் குறைவினால் சோர்வும் மந்தமும் ஏற்படுகின்றன. சரியாக வேலை செய்ய முடியாமல் போகிறது. சில சமயங்களில் வேலையை இழக்கவும் நேரிடுகிறது. இதற்குப் பரிகாரமாக டாக்டர்கள் ஹார்லிக்ஸ் சிபார்சு செய்கிறார்கள். ஹார்லிக்ஸ் இழந்த சக்தியை மீட்டளித்து வலுவையும் ஆரோக்கியத்தையும் அளிக்கிறது.




# ஹார்லிக்ஸ் அதிக சக்தியை அளிக்கிறது!

HL 7488




தென்றலை அதிகம் தீண்ட முடியாமல் தீயையே பெருமளவு மிதித்துச் சூடு கண்டவன். கல்யாணமாகாத பிரம்மச்சாரியாக மட்டும்தான் அவன் இருந்து வந்திருக்கிறானே தவிர, கல்யாணம் பண்ணிக் கொண்டு பெண்டாட்டி பிள்ளைகுட்டிகளோடு அலைந்து மல்லுக் கொடுக்கும் ஒரு பெருங் குடும்பியை விட அதிக அளவு அல்லற்பட்டு அலை மோதி விட்டிருப்பவன். அவனுடைய தம்பி, தங்கைகள் நால்வரும் அவனைப் பொறுத்தவரையில் அவனது பிள்ளைகள் போன்றவர்களே. அப்படிப் பாவித்துத் தான் அவர்களை அவன் அரவணைத்து, வளர்த்து, படிக்க வைத்து, ஆளாக்கி ஒவ்வொருவரையும் அவனே குடியும் குடித்தனமுமாக்கி வைத்திருக்கிறான். இவ்வளவையும் ஓர் உத்தம சகோதரன் என்ற நிலையிலிருந்தே ஆற்றி முடித்தான் என்றாலும் இவையெல்லாம் சேர்ந்து ஓர் உன்னதத் தந்தைக்குரிய மனோ பாவத்தை அவனுள் உறையச் செய்து விட்டிருக்கின்றன.

இது வீட்டுக்குள் காணும் அவனுடைய குணப் பரிணாம சித்திரம்; வெளியுலகில் அவன் வகிக்கும் ஸ்தானம் என்ன?

அந்தப் பிரபலமான கால்நடைத் தீவன உற்பத்திக் கம்பெனியின் விநியோகக் காரியாலயத்தில் பதினைந்து ஆண்டுகளுக்குமுன் ஒரு சாதாரண குமாஸ்தாவாகச் சேர்ந்தவன் ஐந்தாறு வருடங்களுக்குள் தலைமைக் குமாஸ்தாவாகி இப்போது உதவி மானேஜராகவும் உயர்ந்திருக்கிறான். இன்னும் ஒரு வருஷ காலத்துக்குள் மானேஜர் பதவியை எட்டிப் பிடித்துவிடுவான் என்று அங்குள்ள அனைவருமே எதிர் பார்க்கிறார்கள். ஒரே ஸ்தாபனத்தில் இருந்து கொண்டு ஒருவன் இவ்வளவு சீக்கிரம் இத்தனை உயரம் ஏறிப் போயிருக்கிறான் என்றால் அதற்கு அவன் எவ்வளவு உழைத்திருக்க வேண்டும், எப்படியெல்லாம் அயராது பாடுபட்டிருக்க வேண்டும்!

கடுமையாக உழைத்தான் என்பதில் கடுகளவும் சந்தேகமில்லை. ஆனால் கடும் உழைப்பு ஒன்றினால் மட்டுமே இவ்வளவுக்கு உயர்ந்து விட்டானா ?

எறும்பும்தான் கடுமையாக உழைக்கிறது; தேனீயும்தான் ஓடியாடிப் பாடு படுகிறது. ஆனால் எறும்புக்கு இறக்கை முளைத்தாலும் அது மண்ணில் புற்றெடுத்து அதையே சுற்றிச் சுற்றி வருகிறது; தேனீயோ உச்சங் கிளையில் தேன் கூடு கட்டி உல்லாச இன்ப வாழ்வு வாழ்கிறதே, இது எப்படி ? எறும்புக்குத் தெரியாத சாகஸம் தேனீக்கு நன்றாகத் தெரிந்திருக்கிறது; அதனால்தான் !

இவ்வாறே முத்துசிவனுக்கு உழைக்கும் திறனோடு சாகஸத் திறனும் சேர்ந்திருந்தது. தன் உழைப்பின் சம அளவு சாகஸத்தையும் சேர்த்துக் காட்டினான்; முன்னேறினான். முன்னேறிக் கொண்டும் இருக்கிறான். அது என்ன சாகஸம் ?

குனிந்து செல்ல வேண்டிய இடத்தில் குனிந்து சென்றான்; நிமிர்ந்து நிற்க வேண்டிய இடத்தில் நிமிர்ந்து நின்றான். கெஞ்ச வேண்டியவர்களிடம் கெஞ்சினான், மிஞ்ச வேண்டியவர்களிடம் மிஞ்சினான். நரி வேஷம் போட்டான், புலி வேடமும் தாங்கினான். கொக்காகவும் இருந்தான், பருந்தாகவும் பாய்ந்தான்.

சொல்வதற்குச் சுலபம்; கேட்பதற்கு எளிது. சொல்லாமலும் கேட்காமலும்கூட ஒவ்வொருவருக்கும் இது தெரிந்ததுதான். ஆனால் எல்லாருக்கும் இந்தச் சாகஸம் கைவருமா? முத்துசிவனுக்கு எப்படியோ வந்து விட்டது !

''இன்னா சார், பத்து நிமிஷம் லேட்டு? பஸ் கிடைக்கலியா? மானேஜர் உள்ளேகிறார் ! கபால்னு போய் ரீஸ்தர்லே கையெழுத்துப் போட்டுட்டுக் கமாலா போய்ச் சீட்லே கம்முன்னு உக்காந்துக்க !'' என்று கோணல் சிரிப்புடன் கண் சிமிட்டிக் கேலி செய்த அதே ஆபீஸ் பையன், இப்போது அரை மணி நேரம் தாமத




மாக ஸ்கூட்டரில் வந்து இறங்கும் முத்துசிவனைக் கண்டதுமே, "குட் மார்னிங் சார்!" என்று சல்யூட் அடித்துவிட்டு ஸ்கூட்டரைப் பிடித்துத் தள்ளிக் கொண்டு போய் ஆபீஸ் வராந்தாவில் நிறுத்தித் துடைக்க ஆரம்பித்து விடுகிறான்.

"மிஸ்டர் சிவன்! ஏன் சும்மா உட்கார்ந்திருக்கீங்க? இந்த லெட்ஜர்லே போஸ்டாகியிருக்கிறதை நீங்க ஒரு முறை செக் பண்ணிப் பாருங்க. எனக்கு வேலே ஒண்ணும் ஓடலே. இஞ்சினுக்குப் புகை போட்டால்தான் ஓடும் போலே இருக்கு. போய்ப் போட்டுட்டு வரேன்" என்று அலட்சிய மாகச் சொல்லிவிட்டுக் கான்டீனுக்குப் போன அதே கிளார்க் கண்ணப்பன் இப் போது, "ஏ. எம். ரூம்லே ஃபேன் ஓடறது! இப்ப கான்டீனுக்குப் போக வேணும். தெரிஞ்சா சத்தம் போடு வார்" என்று தம் பக்கத்து மேசை பாலுவின் காதில் கிசுகிசுக்கிறார்.

இப்படி உள்ளேயும் வெளியேயும் வளர்ந்து உயர்ந்துவிட்ட முத்துசிவ னிடம் அவனுடைய காதலி சுகுணா மட்டும் — அவள் என்னதான் காதலி யாக இருந்தாலும் — பழைய மாதிரியே நடந்து கொள்வதை அவனால் இனி எப்படிப் பொறுக்க முடியும்?

காதலனுக்கும் காதலிக்கும் வயசாகும் போது அவர்களின் காதலுக்கும் சேர்த்து வயசாக வேண்டாமா? காதல் மட்டும் சங்க காலத்திலேயே நின்று விட்டால் எப்படி?

நீலக் கடலின் கரையோரத்தே வீசிச் சுழன்றடிக்கும் வெண்ணலேகளைப் பார்த்துக் களித்துக் கூத்தாடுகிறான் இளைஞன்; அதே இளைஞன் ஒரு பத்துப் பதினைந்து வருடங்களுக்குப் பின், அதே கடலின் நெடுந் தொலே வில் நீல வானம் தலேகுனிந்து நீள் கடல் விளிம்பை முத்தமிடுவதையும், அதன் சாரலிலே கட்டு மரம் ஒன்று பாய் விரித்து அமைதியாக மிதந்து செல்வதையும் பார்க்கவே ஆசைப்படு கிறான். அந்தக் காட்சியே அவ னுக்கு இப்போது ஆனந்தம் அளிப்ப தாக இருக்கிறது.

மனத்துக்கும் குணத்துக்கும் அவ்வப் போது வர்ணம் பூசுவதில் வயதின் பங்கு அதிகம் அல்லவா? —

'நான் ஏன் அவளேப் போய்ப் பார்க்க வேண்டும்? விருப்பம் இருந் தால் அவள் வந்து என்னைப் பார்க் கட்டுமே!'

இப்படி ஒரு வீம்பான முடிவுடன் எழுந்து ஆடைகளேக் களைவதற்காக அலமாரியை நோக்கிச் சென்ற முத்து சிவன், அங்கே 'ஹாங்கரில்' தொங்கிய தனது கோட்டின் மேல் பாக்கெட்டில் மஞ்சள் நிறமான ஒரு துண்டுக் காகிதம் நீட்டிக்கொண்டிருந்ததைக் கண்டு அதை வெடுக்கென எடுத்துப் பார்த்தான். அது ரட்சகனின் 'பகல் கொள்ளே' நாடகத்துக்கான பத்து ரூபாய் டிக்கட்!

அந்த டிக்கட்டைப் பார்த்ததும் அவனுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. மெல்லச் சிரித்துக் கொண்டே அதை அப்படியும் இப்படியுமாகத் திருப்பிப் பார்த்தான். இன்று மாலே ஆறு மணிக்கு அந்த நாடகம் நடைபெற விருப்பதாக அதில் அச்சிடப்பட் டிருந்தது.

'வெளியே செல்வதற்கெனப் புறப் பட்டாகி விட்டது; இந்த நாடகத் துக்குத் தான் போனால் என்ன?'

தகாத காரியமொன்றைச் செய்யத் துணிகிறவன் போல் பின்னல் திரும் பிப் பார்த்துக் கொண்டான் முத்து சிவன். பிறகு தன் மனக் குறளியை எண்ணித் தானே வெறுப்படைகிற வன் போல் அலட்சியமாகச் சிரித்த படி, "போக வேண்டியதுதான். போகா விட்டால் பத்து ரூபாய் வீணுகி விடுமே! ஆனால் இன்னும் நேரமிருக் கிறது. இப்போது மணி நாலரை தானே?" என்று தனக்குள் மெல்ல முணுமுணுத்துக் கொண்டே வந்து நாற்காலியில் உட்கார்ந்து விட்டான்.

கையிலிருந்த டிக்கட்டை மீண்டும் பார்த்த போது அவனுக்கு மறுபடி யும் சிரிப்பு வெடித்துக் கொண்டு வந்தது. ரட்சகனை நினைத்தே அவ் வாறு சிரித்தான். **(தொடரும்)**

# நல்ல ஒளியிருந்தால் பெறலாம் சிறந்த பார்வை









**பஜாஜ் விளக்குகள்-சிறந்த நிலைமையில் இந்தியாவில் தயாரிக்கப்படுகின்றன. உலகின் மிகச்சிறந்தவற்றிற்கு ஈடானவை**

காயில்ட் காயில் ஃபிலமெண்ட் கொண்ட பஜாஜ் விளக்குகள்:-

- ☐ குறைந்த பவருக்கு அதிக ஒளியைத் தருகின்றன.
- ☐ நீடித்து உழைக்கின்றன.

பஜாஜ் ஸாஃப்ட லாம்புகள்:

- ☐ கூசாத ஒளியைத் தருகின்றன
- ☐ சிறந்த ஒளி பரவலைத் தருகின்றன
- ☐ உங்கள் கண்பார்வையைக் காக்கின்றன.

பஜாஜ் ஃப்ளுரோசெண்ட் விளக்குகளும் உபகரணங்களும் ஒளி சம்பந்தமான தேவைகளையும், பிரச்னைகளையும் தீர்க்கின்றன.

**பஜாஜ் எலெக்ட்ரிகல்ஸ் லிமிடெட்**

45-47, வீர்நரிமன் ரோடு, பம்பாய்-1

இந்தியா முழுவதிலும் கிளைகளுண்டு

heros' BE 34 B-TAM

# புகையிலை புராணம்

கு. அழகிரிசாமி



- முருகன் பெருமானுக்குச் சுருட்டை நிவேதனமாகப் படைக்கும் கோவில் தமிழ் நாட்டில் இருக்கிறது.
- 'பொடியினைப் போடா மூக்கு புண்ணியம் செய்யா மூக்கே!' என்று பாடியவர் யார்?
- மூக்குப்பொடி போட்டவர்களின் மூக்கையே அறுத்தாராம் ரஷ்ய சக்கரவர்த்தி.

## ரசமான சம்பவங்கள்

புகை பிடிப்பது சம்பந்தப்பட்ட சில ரசமான சம்பவங்களும் உண்டு.

ஜெர்மன் நாஜி அதிகாரி ரிப்பென்டிராப் என்பவரின் பெயர் இன்னும் பலருக்கு நினைவிருக்கும். ஹிட்லரின் சகாவான அவர் கடைசிக் காலத்தில் கைது செய்யப்பட்டார். அவரைக் காட்டிக் கொடுத்தது ஒரு சிகரெட்டுதான். இரண்டாவது உலக மகா யுத்தத்தில் ஜெர்மனி பணிந்தபின் அவர் தலை மறைவாக வசித்து வந்தார். ஒரு நாள் தெரு வழியாகப் போய்க் கொண்டிருந்த ஒரு ஜெர்மனியனிடம் அவர் சிகரெட்டு கேட்டார். அப்போது அகப்பட்டுக் கொண்டு விட்டார்.

அந்தச் சமயத்தில் பெர்லின் நகரில் சிகரெட்டுகள் நாணயமாகவும் பயன்படுத்தப்பட்டு வந்தன. நாள் ஒன்றுக்கு 500 பவுன் மதிப்புள்ள சிகரெட்டுகளைக் கொடுத்து லட்சம் பவுன் மதிப்புள்ள சரக்குகளைக் கள்ள மார்க்கெட்டில் வாங்கினார்களாம்!



ஸர் வால்டர் ராலே இங்கிலாந்துக்குப் புகையிலையைக் கொண்டு வந்து ஒரு நாள் புகை பிடித்துக் கொண்டிருந்தார். தூரத்திலே நின்ற ஒரு வேலைக்காரன், ராலேயைப் புகை சூழ்ந்திருப்பதைப் பார்த்தான். புகை பிடிக்கும் வழக்கம் அப்போது இங்கிலாந்தில் கிடையாது. அதனால் ராலேயின் உடையில் தீப்பற்றிக் கொண்டு விட்டதாகவும், அதனால்தான் புகை சூழ்ந்திருப்பதாகவும் வேலைக்காரன் நினைத்து விட்டான். உடனே ஒரு வாளி தண்ணீரை எடுத்துக் கொண்டு ஓடி வந்து அவர் தலையில் கொட்டினானும்!

இதே ஸர் வால்டர் ராலேக்குப் பின்பு ஒரு சமயம் தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டது. தூக்குமேடைக்குப் போகுமுன் அவர் புகையிலைக் குழாயை எடுத்து ஒரு முறை புகை பிடித்துக் கொண்டார்!

## இந்தியாவில் புகைக் குடி

இந்தியாவுக்குப் புகையிலையைக்கொண்டு வந்தவர்கள் போர்ச்சுகீசியர்கள் என்று ஏற்கெனவே பார்த்தோம். அவர்கள் தென்னிந்தியாவில்தான் முதன் முதலில் வந்து இறங்கினார்கள். ஆகவே தென்னிந்தியாவிலிருந்துதான் புகையிலை வட இந்தியாவுக்குப் போயிருக்கிறது. இந்தியாவில் முதன் முதலில் புகை பிடித்த முக்கியஸ்தர் ஜஹாங்கீர் சக்கரவர்த்திதான் என்று கூறப்படுகிறது. தட்சிண கல்தான்கள்தான் அவருக்கு முதலில் புகையிலையைக் கொண்டு போய்க் கொடுத்தார்களாம்.

## காந்திஜியின் கருத்து

"புகை பிடித்தல் மனித அறிவை மழுங்கச் செய்கிறது; அந்தப் பழக்கம் மிகவும் கொடியது. புகைக் குடியர்களுடைய சுவாசமே அருவருப்பைத் தருகிறது. இத்தகைய வழக்கத்துக்கு நாம் அடிமையாகிவிடக் கூடாது. சுருட்டு, சிகரெட் முதலியன நம் நாட்டுச் சரக்கா யிருந்தாலும் சரி, பிற நாட்டுச் சரக்கா யிருந்தாலும் சரி, அவை நிராகரிக்கப்பட வேண்டியவையே" என்று மகாத்மா காந்தி கூறியிருக்கிறார்.

காந்திஜி இவ்வாறு கூறியிருந்தும் அந்தக் காலத்தில் சில பீடிக் கம்பெனிகள், "மனிதருள் சிறந்தவர் மகாத்மா; ஆடைகளில் சிறந்தது கதர் ஆடை; பீடிகளில் சிறந்தது எங்கள் கம்பெனி பீடி" என்று விளம்பரம் செய்ததும், வேறு சில கம்பெனிகள், "தேசிய மணம் கமழும் பீடி" என்று விளம்பரம் செய்ததும் பெரிய விநோதங்களே ஆகும்.

நம் நாட்டில் புகை பிடிக்கும் பழக்கம் எல்லா இடங்களிலும் பரவியிருப்பதுடன், அதை ஒட்டிய சில பழக்க வழக்கங்களும் சம்பிரதாயங்களும்கூட இருந்து வருகின்றன.

"ஆதரவாளன் ஒருவன் இல்லாமல் செய்கிற ஊழியமும், கேடயம் இல்லாத இளைஞ

னும், புகையிலை இல்லாத வெற்றிலையும் பாழ்'' என்பது பாகிஸ்தானில் வடமேற்கு எல்லைப்புறவாசிகளிடையே வழங்கும் ஒரு பழமொழி. 'வகை தொகை இல்லாத பேச்சும், புகையிலை இல்லாத பாக்கும் வழ வழா கொழ கொழா' என்பது தமிழ் நாட்டுப் பழமொழி.

## முருகனுக்குச் சுருட்டு நிவேதனம்

தமிழ் நாட்டில் புகையிலைச் சுருட்டை விராலி மலைக் கோயிலில் முருகனுக்கு நிவேதனமாகப் படைப்பதுண்டு. பழனி முருகனுக்கும் சுருட்டு நிவேதனம் உண்டு என்று சொல்லப்படுகிறது. தென்பாண்டி நாட்டில் கருப்பசாமி கோயில் திருவிழாவில்



கோயிலில் உள்ள தவசுத் தம்பிரானுக்கும், சுடலை மாடனுக்கும் சுருட்டையும் சாராயத்தையும் வைத்துக் கும்பிடும் வழக்கம் இருந்தது.

சுமார் இருநூறு ஆண்டுகளுக்குமுன் இராமநாதன் கவிராயர் இயற்றிய ''சிவசயிலப் பள்ளு'' என்ற நூலில் வரும் பண்ணைக்காரனார் தமது ''கைக்குள்ளே புகைச்சுருட்டும், சக்கிமுக்கியும், பஞ்சும், கல்லும்'' கொண்டு வந்தாராம். அந்தக் காலத்தில் சக்கி முக்கிக் கற்களில் பஞ்சை வைத்துத் தட்டி நெருப்பை உண்டாக்கியே சுருட்டுப் பற்ற வைத்தார்கள் என்று இதன் மூலம் தெரிகிறது. தீப்பெட்டி 1805ம் ஆண்டில்தான் கண்டுபிடிக்கப்பட்டது.

**சிரேட்டுக் கைபுடிச்சி**
**தெருவழியே போறவரே!**
**சிரேட்டை விட்டெறிஞ்சி - ஒரு**
**சேதிசொன்னால் ஆகாதோ?**

இது ஒரு நாட்டுப் பாடல். காதலனை நோக்கிக் காதலி இவ்வாறு முறையிடுகிறாளாம். சிகரெட் பிடிப்பதை நவநாகரிகத்தின் ஓர் அடையாளம் என்று சில இளைஞர்கள் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதற்கு இந்தப் பாடலில் குறிப்பிடப்படும் இளைஞனும் ஒரு சான்று. இல்லையென்றால் தன் காதலி வந்து நிற்கும் தெருவில், வேண்டுமென்றே சிகரெட்டும் கையுமாக அவன் நடந்து போவானேன்? புகை பிடிக்கும் நாகரிக இளைஞனைத்தான் இந்தக் காலத்துப் பெண் காதலிப்பாள் என்பது அவனுடைய நம்பிக்கை!

## புரந்தரதாஸர் கீர்த்தனத்தில்

பிரபல சங்கீத சாஹித்தியகர்த்தாவான புரந்தரதாஸர் (கி. பி. 1564-ல் காலமானவர்) தெய்வ பக்தியையும் புகை பிடிப்பதையும் சம்பந்தப்படுத்தி உருவகமாக ஒரு கீர்த்தனம் இயற்றியிருக்கிறார். புன்னாகவராளி ராகத்தில் ஆதி தாளத்தில் அமைந்த ''குடி குடியனு'' என்ற அந்தக் கன்னட கீர்த்தனத்தில்,

''இந்தப் புகையைக் குடித்துப் பார். உன்னிடத்தில் உள்ள பாவங்களைப் போக்கு. மனம் என்ற பையை அவிழ்த்து, தினந்தோறும் செய்த பாவம் என்ற லாகிரி இலைகளைக் கத்திரித்து, உடல் என்ற மண் தட்டில் போட்டு, அச்சுதத் தியானம் என்ற தீயை மூட்டி, இந்தச் சரீரம் என்ற அடிப் பாத்திரத்திலிருந்து நெருப்புத் தட்டுக்குச் செல்லும் குருபக்தி என்னும் குழாய் வழியாக ஸ்ரீ நாராயணன் என்ற தண்ணீரை நன்றாக நிரப்பு.....'' என்கிறார்.

இவ்வாறெல்லாம் செய்து தெய்வபக்தி என்ற புகையைக் குடித்துப் பாவங்களைப் போக்கச் சொல்கிறார் புரந்தரதாஸர். தமது காலத்தில் இந்தியாவுக்கு வந்த ஒரு புதுப் பழக்கத்தைப் பார்த்து, அதைத் தமது கீர்த்தனையிலும் இடம் பெறச் செய்து விட்டார் அவர். அந்தந்தக் காலத்தில் தோன்றும் புதுமைகளை — அவை நல்லவையானாலும் கெட்டவையானாலும் — இலக்கியத்தில் கையாள வேண்டியதன் அவசியத்தை இதன் மூலமாக அறிந்து கொள்ளலாம்.

## மூக்குப் பொடியின் வரலாறு

இன்று எல்லோரும் கைக்குட்டையை உபயோகிக்கிறோம். காதலர்கள் ஒருவருக்கொருவர் கைக்குட்டைகளைப் பரிசளித்துக் கொண்டதாகச் சில கதைகளில் படித்திருக்கிறோம். இவற்றைப் படித்து விட்டு அதன் பலனாகவே கைக்குட்டைகளைச் சில காதலர்கள் பரிமாறிக் கொண்டிருக்கவும் கூடும்! இப்படிப்பட்ட கைக்குட்டை முதன் முதலில் தோன்றியது மூக்குப்பொடி போடுபவர்களுக்குத் தானே ஒழியக் காதலர்களுக்கு அல்ல! மூக்கில் பொடி போடும் வழக்கம் தோன்றியிராவிடில் கைக்குட்டைகளே தோன்றாமல் போயிருக்கக் கூடும்!



அமெரிக்காவின் தெற்கு எல்லையில் இருக்கும் மெக்ஸிகோ நாட்டில்தான் முதன்முதலில் பொடி போடும் வழக்கம் ஆரம்பமாயிற்று. புகையிலைப் பொடியில் ஏதோ

மருந்துச் சத்து இருப்பதாக அவர்கள் நம்பினார்கள். புகையிலையை மட்டுமின்றி வேறு சில செடிகளின் இலைகளையும் மூக்குத் தூள் செய்ய அவர்கள் பயன்படுத்தினார்கள்.

ஐரோப்பிய உலகில் மூக்குப் பொடி நுழைந்த புதிதில் அது பலத்த கண்டனங்களையும் எதிர்ப்புக்களையும் சமாளிக்க வேண்டியிருந்தது. பொடி போடுகிறவர்கள் மதத்திலிருந்து வெளியேற்றப்படுவார்கள் என்று எச்சரித்து 1624ல் போப்பாண்டவர் ஓர் உத்தரவு பிறப்பித்தார்.

## மூக்கையே அறுத்தார்கள்

ரஷ்யச் சக்கரவர்த்தியோ கடுமையான தண்டனைகள் விதித்தார். எப்படி? பொடி போடுகிறவர்களின் மூக்கை அறுத்து, அப்புறம் அவர்களைச் சவுக்கால் அடித்து, அதுவும் போதாதென்று அவர்களைச் சைபீரியாவுக்கு நாடு கடத்தி விடவும் உத்தரவு போட்டார். இப்படி யெல்லாம் செய்தும்கூட வெகுசீக்கிரத்திலேயே ஐரோப்பாவில் பெரிய பெரிய அந்தஸ்தில் இருந்தவர்களெல்லாம் பொடி போடத் தொடங்கி விட்டார்கள். பதினேழாம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் சர்வசகஜமாக நிலவியிருந்த இந்தப் பழக்கம் பதினெட்டாம் நூற்றாண்டில் உலகெங்குமே பரவிவிட்டது. ஜெர்மனியின் அரசன் மகா பிரடரிக், பிரெஞ்சு ராணி மேரி அன்தாயினத், நெப்போலியன், கவிஞர்களும், இலக்கிய ஞானிகளுமான அலெக்ஸாண்டர் போப், அடிஸன், பர்ன்ஸ், ஜான்ஸன் ஆகியோரும் பொடி போடும் பழக்கத்தைக் கைக்கொண்டனர். பொடி டப்பிகள் எத்தனையோவிதமான சித்திர வேலைப்பாடுகளுடன் செய்யப்பட்டன. தந்தம், சிப்பி, தங்கம், வெள்ளி முதலியவற்றாலும் பொடி டப்பிகள் செய்தார்கள். அந்தப் பழைய டப்பிகள் இப்போது பொருட்காட்சிச் சாலைகளில் வைக்கப்பட்டிருக்கின்றன. பொடியை எந்தவிதமாக எடுத்து எந்தவிதமாகப் போட வேண்டும் என்பதற்குச் சாஸ்திரோக்தமான விதிகள்கூட அந்தக் காலத்தில் நடைமுறையில் இருந்து வந்திருக்கின்றன. அப்போது பொடி போடுகிறவர்கள் தங்களோடு பொடி டப்பியை மட்டுமின்றி ஒரு சிறு கரண்டியையும் அதனோடு எடுத்துச் செல்வது வழக்கமாம்! டப்பியிலிருந்து பொடியை எடுப்பதற்குத்தான் அந்தக் கரண்டி!

பதினெட்டாம் நூற்றாண்டில் நவநாகரிகமானதாக இருந்த இந்தப் பழக்கம், பத்தொன்பதாம் நூற்றாண்டில் தன் அந்தஸ்தை இழந்துவிட்டது. இருபதாம் நூற்றாண்டிலோ "இல்லை" என்று சொல்லும் அளவுக்கு ஐரோப்பாவில் பொடிப் பழக்கம் மறைந்து விட்டது.

பொடி டப்பியைப் பற்றி யாரோ ஓர் ஆங்கிலப் புலவர் எழுதிய வேடிக்கையான பாட்டு ஒன்று உண்டு:

"ஒரு கிராமப் பள்ளிக்கூடம். ஆசிரியர் ஒரு நாள் மாணவர்களைப் பார்த்துக் கூறினார்: 'பள்ளிக்கூடத்துக்கு இன்ஸ்பெக்டர் வரப்போகிறார். பூகோளப் பாடத்தில் கேள்வி கேட்டால் அநேகமாக உலகத்தின் வடிவம் என்ன என்று தான் கேள்வி கேட்பார். அதற்குப் பதில் சொல்ல உங்களுக்கு மூளை இல்லை என்றால் என்னைப் பாருங்கள். நான் என் பொடி டப்பியைக் காட்டுகிறேன். அதைக் கொண்டு உலகம் உருண்டை என்பதை எளிதில் தெரிந்து கொள்ளலாம்.'




"புத்திசாலியான அந்த ஆசிரியரிடம் இரண்டுவிதமான பொடி டப்பிகள் இருந்தன. ஒன்று உருண்டை டப்பி; மற்றொன்று சதுரமானது. உருண்டை டப்பியை ஞாயிற்றுக்கிழமைகளிலும், சதுர டப்பியை மற்ற நாட்களிலும் அவர் எடுத்துச் செல்வது வழக்கம்.

"இன்ஸ்பெக்டர் வந்தார். ஒரு பையனைப் பார்த்து, 'உலகத்தின் வடிவம் என்ன?' என்று கேட்டார். பையன் கொஞ்சமும் தயங்காமல், 'உலகம் ஞாயிற்றுக்கிழமைகளில் சதுரமாகவும், மற்ற நாட்களில் உருண்டையாகவும் இருக்கிறது' என்று சொன்னான்!"

### "சைபர் நிலைமை"

விமானங்கள் வந்து இறங்கத் துணை புரியும் ஒரு சாதனம் என்பதே சரியான விடை. இந்த வகை சாதனங்களை டில்லி, பம்பாய், கல்கத்தா விமான நிலையங்களில் நிறுவ ஒரு பிரிட்டிஷ் ஸ்தாபனம் முன் வந்திருக்கிறது. கடுமையான மூடுபனி அல்லது மழையின்போது விமானிக்கு எங்கே விமானத்தை இறக்குவது என்று ஒன்றுமே தெரியாது. இதை 'சைபர் நிலைமை' என்கிறார்கள். இத்தகைய சைபர் நிலைமையில் விமானிக்கு எந்தவிதமான சிரமமுமின்றி விமானத்தை இந்த உபகரணங்கள் பத்திரமாகத் தாமாகவே தானியங்கு முறையில் இறக்கிவிடும் திறன் படைத்தவை. ஆனால் இன்று இம்முறை அதிகமாக அமுலில் இல்லை. ஒரு குறிப்பிட்ட அளவுக்குத்தான் இச்சாதனங்கள் இன்று உலகின் பிரதான விமான நிலையங்களில் பயன்படுத்தப்படுகின்றன. மூடுபனி அல்லது மழை சமயத்தில் விமானி 'ரன் வே'யைப் பார்க்க இயலுகிறவரை விமானத்தை இறக்கும் பொறுப்பை இந்த உபகரணம் ஏற்றுக் கொள்கிறது. ரன்வே சாலையைப் பார்க்கக் கூடிய அளவுக்கு விமானம் தாழ்ந்து பறக்க ஆரம்பித்ததும் விமானி விமானத்தைத் தரை தட்ட வைக்கும் பொறுப்பைத் தாமே ஏற்றுக் கொள்கிறார்.



"'மைக்' சங்கீதத்துக்கு எமனா வர் இருக்குங்கிறதை ராமசாமிசிவன் பாட்டி லேயே சொல்லி யிருக்கார் பார்த் தேளா?"

## ஐந்து பொடிகள்

**ப**ழனி மாம்பழக் கவிச்சிங்க நாவலர் 1836ல் பிறந்தவர். மூன்றும் வயதிலேயே வைசூரியால் கண் பார்வையை இழந்தவர். அந்தப் பெரும் புலவர் ஒரு சமயம் ராமநாதபுரம் ஜமீனுக்குப் போய்ச் சொற்பொழி வாற்றினார். அவர் ஓரமாக வைத்திருந்த பொடி டப்பியை ஜமீந்தார் எடுத்து வைத்துக் கொண்டார். பிரசங்கத்தின் நடுவே பொடி போடுவதற்காக டப்பியைத் தேடினார் புலவர்.

"புலவரேறே! பிரசங்கத்தின் நடுவே தேட முயன்ற காரியம் என்ன?" என்று கேட்டார் ஜமீந்தார்.

"அப்படி ஒன்றும் பெரிய காரியமில்லை" என்றார் புலவர்.

"அப்படியானால் பொடிக் காரியமோ?" என்று ஜமீந்தார் கேட்கவே, "ஆம்" என்றார் புலவர். உடனே ஜமீந்தார், முருகன் துதியாகவும், ஐந்து இடங்களில் பொடி என்ற சொல் வரும்படியாகவும் அப்பொழுதே ஒரு வெண்பாப் பாடினால் புலவரின் காரியத்தை நிறைவேற்றி வைக்கலாம் என்றார்.

புலவர் உடனே பாடிவிட்டார் :

**கரும்பொடிமா அஞ்சஎறி**
**கைப்பொடிசில் வெற்பர்**
**தருங்கொம்பொ டிசைதெய்வத்**

**தையல் — விரும்புபுய!**
**வான்பொடியா நின்றகதிர்**
**மானுமயி லோய்!என்னைஆள்**
**தேன்பொடியார் பூம்பதம்தந்**
**தே!**

[பாட்டின் பொருள்: கரும்பை ஒடிக்கும் ஆண் யானைகள் அஞ்சும்படியாக மயக்கம் தரும் பொடியை எறியும் மறக் குறவரின் கொடியாகிய வள்ளியும், தெய்வ யானையும் விரும்பும் புயங்களை உடையவனே! விண்ணைப் பிரகாசிப்பிக்கும் சூரியனைப் போல் ஒளி பொருந்திய மயில்வாகனனே! மகரந்தப் பொடி நிறைந்த உன் மலர்ப் பாதங்களை எனக்குத் தந்தருளி என்னை ஆள்வாயாக!]

புலவர் இந்த வெண்பாவைப் பாடி முடித்ததும், விலை உயர்ந்த பொடி டப்பி ஒன்றை அவருக்குப் பரிசாகக் கொடுத்தார் ஜமீந்தார்.

## புண்ணியம் செய்யா மூக்கு!

**ம**கா வித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளையின் காலத்தினரும் கும்பகோணம் கல்லூரியில் தமிழாசிரியராக இருந்தவருமான வித்துவான் தி. தியாகராச செட்டியார் பொடியைப் பற்றி ஒரு பாட்டு பாடியிருக்கிறார். பொடி விற்பனை செய்து வந்த திருவானைக்கா சோமசுந்தரம் பிள்ளை என்பவரைப் பாட்டில் சிறப்பித்திருக்கிறார் :

**கொடியணி மாடம் ஓங்கிக்**
**குலவுசீர் ஆனைக் காவில்**
**படியினில் உள்ளார் செய்த**
**பாக்கியம் அனையான் செங்கைத்**
**தொடியினர் மதனன், சோம**
**சுந்தரன் கடையில் செய்த**
**பொடியினைப் போடா மூக்கு**
**புண்ணியம் செய்யா மூக்கே!**

கருத்து: திருவானைக்காவாசியும், உலகத்தார் செய்த பாக்கியம் போன்றவனும், வளைகள் அணிந்த மாதருக்கு மன்மதனாக இருப்பவனுமான சோமசுந்தரன் தனது கடையில் செய்து விற்கும் பொடியைப் போடாத மூக்கு, புண்ணியம் செய்யாத மூக்கே!]

இந்தப் பாடலைப் பாடிய தியாகராச செட்டியாரின் நண்பரும் மாயூரத்தில் முனிசீப்பாகப் பதவி வகித்தவரும் ஆன வேதநாயகம் பிள்ளையோ,

**"மூடரைக் கூடிவிளை —**
**யாடாதே — என்றும்**
**மூக்குத்தூள், புகையிலை**
**போடாதே"**

என்று பாடியிருக்கிறார். பிற்காலப் புலவர்கள் சிலரும் மூக்குத் தூளைத் தூக்கியோ தாக்கியோ பல பாடல்கள் பாடியிருக்கிறார்கள். 'மூக்குத்தூள் கொடுப்பது உத்தமமான தானம்; வெற்றிலை பாக்கு கொடுப்பது மத்திமமான தானம்; கன்னிகா தானமோ கீழானது' என்னும் பொருள்பட மூக்குப் பொடிப் பிரியர்கள் சம்ஸ்கிருதத்தில் வேடிக்கையாக ஒரு சுலோகம் இயற்றியிருக்கிறார்கள் : "உத்தமம் நாஸிகா சூர்ணம்; மத்திமம் தாம்பூல தாரணம்; அதமம் கன்னிகா தானம்" என்பதுதான் அந்தச் சுலோகம்.

'பவழவாய்ப் புன்னகைக்கே...பல்லாயிரம் நவமணிகள் உதிரும், உலகமெலாம் ஒளி சிதறும்; என் குழந்தையின் வளர்ச்சிக்கே கோடி வாழ்த்துக்கள் பொழியும். என் பாக்கியம், நான் தேர்ந்தெடுத்தது லீவர்ஸ் குழந்தை உணவு. பாரத நாட்டிலுள்ள குழந்தைகளை ஊட்டிவளர்ப்பதற்கென்றே உருவாக்கப்பட்டது. இயற்கையாகவே அது அவனுக்குப் பூரணமாகப் பொருந்தும் உணவு.



'வழக்கமான எல்லா வைட்டமின்களையும் தவிர, வைட்டமின் B12 சத்தினையும்' என் குழந்தைக்குக் கிடைக்கச்செய்கிறது லீவர்ஸ் குழந்தை உணவு. அதோடு ஃபாலிக அமிலமும் கூட. இரண்டுமே இரத்த விருத்திக்கு மிகச் சிறந்தது என்கிறார் என் டாக்டர். புரத சத்துக்களும் அதில் வளப்பமாக உள்ளன. என் குழந்தை திடமாக வளருவதில் வியப்பென்ன. எல்லாவற்றிற்கும் மேலாக, உகந்த ஊட்டப் பொருள்கள் யாவினையும் உசிதமான விகித அளவுகளிலே அடங்கப்பெற்றது— எனவே,முழுமையான 'சரிவிகித' சத்துள்ள குழந்தையுணவு.

'ஆம். லீவர்ஸ் குழந்தை உணவு உண்மையிலேயே முழுநிறைவான உணவு. குழந்தைக்கு மேற்கொண்டு நான் எதையுமே தரத் தேவையில்லை ...அன்பைத் தவிர. உங்கள் குழந்தைக்கும் இதுவே பரிபூரணமான பாலுணவாக அமையும் என்பது திண்ணம்'.




**பாரதநாட்டிலுள்ள குழந்தைகளை ஊட்டிவளர்ப்பதற்கென்றே உருவாக்கப்பட்டது**

# லீவர்ஸ்

**குழந்தை உணவு**

பரிபூரணமான பாலுணவு

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

லின்டாஸ்-LF. 6-140 TM

சிறப்புச் சிறுகதை



# ஒற்றைப் பனை

காடவன்

அந்த ஊர் எனக்குப் புதியது அல்ல. என்னுடைய சின்னம்மா ஒருவர் அங்கு வசித்து வந்ததால் இதற்கு முன்னும் சில முறை அவ்வூருக்கு நான் சென்றிருக்கிறேன். ஆனால் அப்போதெல்லாம் அவனை நான் பார்த்ததில்லை!

அவன் எனக்கு அண்மையில் மண் பாட்டையின் மேல் ஏறி நின்றுகொண்டு ஒரு கணம் என்னை உற்றுப் பார்த்தான். ''ஐயாவுக்கு எந்த ஊரு?'' என்று கேட்டுக்கொண்டே என் அருகில் வந்தான்!

''எனக்கு மாயவரம்! உனக்கு இந்த ஊருதானா?''

''ஆமாங்க!''

''நீ என்ன செய்யறே?''

அவன் என்னை ஏற இறங்கப் பார்த்தான். ''நான்... நான்... செய்யறது அப்படி ஒன்னும் பெரிய வேலே இல்லீங்க! இருந்தாலும் என் கதை ஒரு பெரிய கதைங்க.''

இப்படிக் கூறியவன், ஒற்றைப் பனை மரத்தடியில் உட்கார்ந்துகொண்டு தன் கதையைக் கூறத் தொடங்கினான்:

''எனக்குப் பதினாலாவது வயதிலேயே எங்க அப்பா இறந்துவிட்டாரு. அப்போ நான் ஏதோ படிச்சுக்கிட்டிருந்தேன். நாலாவதோ அஞ்சாவதோதான்! பள்ளிக்கூடத்திலே மத்தப் பிள்ளைங்களெல்லாம் என்னை 'மக்குப் பயல், மக்குப் பயல்'னு பரிகாசம் பண்ணுவாங்க! நான்தான் மக்காச்சே, எப்படி அவங்களை எதிர்த்துப் பேச முடியும்? குனிஞ்சுக்கிட்டே போய் எங்கம்மாகிட்ட சொல்லுவேன். எங்கம்மாவுக்கு என் மேலேதான் உசிரு! அவங்க என்னை அணைச்சுக்கிட்டு, 'நீ நல்லாப் படிச்சா, உன்னை எவன் மக்குன்னு சொல்லுவான்?' என்பாங்க. நான் உடனே போய் மண்ணெண்ணெய்ச் சிம்னியைக் கொளுத்தி வைச்சுக்கிட்டுப் புத்தகத்தைப் பிரிப்பேன். ஆ, அந்தப் பொல்லாத தூக்கம் காத்துக்கிட்டிருந்தது மாதிரி வந்துடுங்க! உடம்பெல்லாம் அசதியா யிருக்கும், கண்ணைச் சுழற்றும். நான் அப்படியே தூங்கி விடுவேன்! பின்னாலே சாப்பாட்டுக்குக்கூட அம்மாதான் எழுப்பிச் சாதம் ஊட்டுவாங்க!

''எங்க அக்காளை உள்ளூரிலேயேதான் கல்யாணம் பண்ணிக் கொடுத்திருந்தாங்க. அதுக்கும் என்மேல்தான் ரொம்பப் பிரியம். நான் அடிக்கடி அதுக்கிட்டே போய்ப் பேசிக்கிட்டிருப்பேன். அக்கா எனக்குப் பிரியமா சோறெல்லாம் போடும். எங்க அக்கா மகள் கண்ணம்மாளுக்கும் என்மேல் பிரியம்தான். அவளும் நான் படிச்சிக்கிட்டிருந்த பள்ளிக்கூடத்திலேதான் படிச்சுக்கிட்டிருந்தாள். நான் அக்காள் வீட்டுக்குப் போயிட்டாப் போதும். கண்ணம்மா ஓடி வந்து என் கையைப் புடிச்சுக்குவாள். என்னை 'மக்கு மாமா, மக்கு மாமா'ன்னு கூப்பிட்டுக்கிட்டே சுற்றிச் சுற்றி வந்து ஆடுவாள், பாடுவாள். எனக்கும் அவள் கூட விளையாடுவதிலே ஆசையா யிருக்கும்.

''எனக்குத்தான் படிப்பு வரலியா, எங்க அண்ணன் என்னைப் படிக்கப் போக வேண்டாம்னு சொல்லிவிட்டாரு! எங்களுக்கு ஒரு தென்னந் தோப்பு இருந்தது. இப்பவும் அது இருக்கு. நான் அங்கே போய்ப் படுத்துக்கிட்டுத் தலைக்கு மேலே தெரிகிற தென்னை மரங்களையெல்லாம் பார்த்துக்கிட்டிருப்பேன். சில நேரங்களிலே தூங்கணும் போல இருக்கும்; ஆனால் தூக்கம் வராது.

''அன்னைக்கும் அப்படித்தான். அக்கா ஞாபகம் வரவே, எழுந்திருச்சு நேரே அதன் வீட்டுக்குப் போனேன். வீடு திறந்துதான் இருந்தது. ஆனால் அக்காளைக் காணல்லே. நான் வீட்டுக்குள்ளே போனேன். கொல்லைப் பக்கம் கிணற்றடியிலே கண்ணம்மா ஏதோ செஞ்சுக்கிட்டிருந்தாள். நான் 'கண்ணம்மா, கண்ணம்மா'ன்னு கூப்பிட்டுக்கிட்டே அவள் கிட்டப் போனேன். நிமிர்ந்து என்னைப் பார்த்த கண்ணம்மா, 'வா, மக்கு மாமா'ன்னு இந்தத் தரம் கூப்பிடலே! அதனாலே எனக்கு ரொம்ப சந்தோஷமா யிருந்தது. கண்ணம்மா இப்போ ரொம்பச் சிவப்பா இருக்கிற மாதிரியும் எனக்குப் பட்டது. நான் அவளையே பார்த்துக்கிட்டு அங்கேயே நின்னேன். 'என்ன தம்பி, கண்ணம்மா என்ன சொல்றாள்'ன்னு கேட்டுக்கிட்டே எங்கோ போயிருந்த அக்கா அப்போ வந்துட்டாங்க!

''என்னை உள்ளாற அழைச்சுக்கிட்டுப் போய், என்ன என்னமோ பலகாரம் கொடுத்தாங்க. 'இனி நீ கண்ணம்மா கிட்டே முன்னை மாதிரி பழக முடியாது தம்பி, கண்ணம்மா வயசுக்கு வந்து ஆறு மாசமாவப் போவுது'ன்னுங்க பேச்சுவாக்கிலே.

''நான் என் அக்காகிட்டே ஒன்னும் சொல்லாம மெல்லத் திரும்பிக் கிணற்றடியிலே இருந்த கண்ணம்மாவைப் பார்த்தேன். அந்த நேரத்திலே அவளும் என்னை யதேச்சையாகத் திரும்பிப் பார்த்தாள். இருவர் பார்வையும் கலந்தபோது எப்படி இருந்துதுன்னு இப்போ எனக்குச் சொல்ல வரலீங்க.

''இன்னொரு நாள் சாயங்காலம் மூனு அல்லது நாலு மணி இருக்கும். எனக்குக் கண்ணம்மாளின் நினைப்பு வந்தது. நான்

ரெண்டு மைல் தூரத்திலிருந்த ஒரு தோட்டத்துக்குப் போனேன். அங்கே நிறைய மல்லிகை பூத்திருந்தது. அந்தத் தோட்டக்காரர் எனக்குத் தெரிந்தவர். நிறைய மல்லிகைப் பூப் பறிச்சு ஓர் இலையிலே வச்சுக் கட்டிக்கிட்டு அங்கிருந்து எங்க அக்கா வீட்டுக்கு வந்தேன். கண்ணம்மாவுக்கு மல்லிகைப் பூன்னு ரொம்பப் பிடிக்கும்! அவள் ஆசையா அந்தப் பூக்களை வாங்கிச் சரமாகத் தொடுத்துத் தன் தலையிலே வச்சுக்கிறதைப் பார்க்கணும்னு எனக்கு ஆசை! அந்த ஆசையோடு வீட்டுக்குள்ளே நுழைஞ்சேன். கண்ணம்மா 'வா, மாமா'ன்னு சொல்லிக்கிட்டு என் எதிரில் வந்தாள். நான் அவளைப் பார்த்தேன்! அவள் வெட்கிப் போய்த் தன் முகத்தைத் தாழ்த்திக் கொண்டாள்.

என் கையிலே இருந்த பூப் பொட்டலத்தை அவள்கிட்டே கொடுத்தேன். 'இது மல்லிகைப் பூவா, மாமா? இப்பத்தான் தெருவிலே வந்திச்சு. நிறைய வாங்கி வச்சுக்கிட்டேன்! இது இருக்கட்டும். அப்புறமாத் தொடுத்து வச்சுக்கிறேன்' என்று சொல்லி மாடத்திலே வச்சுட்டாள்.

அவள் கூந்தலிலே என் கை பட்ட மல்லிகைதான் மணக்கும்னு எப்படியெல்லாம் கனவு கண்டுக்கிட்டுப் போனேன்! ...ம்... மாடத்திலே இருந்த மல்லிகைப் பூப் பொட்டலத்தை மறுபடியும் பார்த்தேன். எனக்கு அங்கே இருக்கப் பிடிக்கலே; திரும்பி வந்து விட்டேன்!''

அவன் சற்று நேரம் வரை விரக்தி கலந்த முக பாவனையோடு இருந்தான். பிறகு பேசத் தொடங்கினான்.

''திடீர்னு ஒரு நாள் என் தம்பி பட்டாளத்துக்குப் போயிட்டதாக வீட்டிலே பேசிக்கிட்டாங்க. அவன் எங்க அம்மா, அண்ணன், அண்ணி; அக்கா எல்லார்கிட்டேயும் சொல்லிக்கிட்டு எல்லார் சம்மதத்தோடேயேதான் போனானாம். ஆனால் என்கிட்டே மட்டும் சொல்லிக்கல்லே! காரணம், அவன் என்னை மதிக்கலே. வீட்டிலே எங்க அண்ணி இஷ்டம் தான் எல்லாம். எங்க அம்மாவுக்கும் வயசாயிட்டுது? வீட்டு வேலையைக் கூடச் செய்ய முடியாதுநிலே. அவங்களுக்கும் மதிப்புக் குறைஞ்சுதானே போயிருக்கும்!

அப்புறம் நான் அதிக நேரம் தோப்பிலே தான் உட்கார்ந்துக்கிட்டிருப்பேன். வீட்டிலே விருந்து யாரும் சாப்பாட்டுக்குக் கூப்பிட வரமாட்டாங்க. பசி பொறுக்க முடியலேன்னு வீட்டுப் பக்கம் போவேன். அண்ணி சாப்பாடு போடறப்போ சாப்பிட்டுட்டு வந்துடுவேன். எங்க அம்மா மட்டும் அடிக்கடி தென்னந் தோப்புக்கு வந்து, என்னைப் பார்த்து அழுதுட்டுப் போகும்.

அன்றைக்கு ஒரு நாள் நான் தென்னந் தோப்பிலே உட்கார்ந்திருந்தேன். எங்க அக்காள் வீட்டுக்குப் போகணும் போலவும்





கண்ணம்மாளைப் பார்க்கணும் போலவும் இருந்தது. நான் அங்கே போனேன். அது இருட்டு நேரம்! ஆனால் நிலவு வெளிச்சம் நல்லா இருந்தது. வீட்டு வாசலிலே எங்க அக்கா குந்தி யிருந்தாங்க. என்னைப் பார்த்ததும் 'வா, தம்பி! உனக்கொரு நல்ல சேதி'னுங்க. அப்போ தெருப் பக்கம் வந்த கண்ணம்மா என்னைப் பார்த்துட்டு, 'யாரு, மாமாவா? மாமாவுக்கு இன்னிக்கு இங்கேதான்

சாப்பாடு'ன்னு சொல்லிச் சிரிச்சான். அவன் பேச்சைக் கேட்கவும், அவன் சிரிப்பைப் பார்க்கவும்தானே நான் அங்கே போனேன்!

அக்காளைப் பார்த்து, 'என்னமோ சேதின்னு சொன்னியே, என்ன அக்கா அது'ன்னு கேட்டேன் நான்! 'நான் கண்ணம்மாளுக்கு நல்ல இடமாக் கிடைக்கும்னு நினைச்சிருந்தது வீண் போகலே! இன்றைக்குக் காலையிலே நம்ம கண்ணம்மாளைப் பெண் கேட்டு வந்திருந்தாங்க! பையன் படிச்சிருக்கான்; கண்ணுக்கு நல்லா இருக்கான்! வசதியும் அவங்களுக்கு இருக்கு. கொடுக்கலாம்னு நினைச்சிருக்கோம்!' எங்க அக்கா இதைச் சொல்லிக்கிட்டிருக்கிறப்பவே எனக்கு உடம்பு நடுங்க ஆரம்பிச்சுட்டுது! உடம்பிலே ரத்தமே இல்லாதது மாதிரி ஒரே பயம்! இன்னும் எப்படி யெல்லாமோ இருந்ததுங்க!''

அவன் குரல் தழுதழுக்கப் பேசினான்! பிறகு கொஞ்ச நேரம்




அமைதியாக இருந்தான். அதன்பின், ''உம், நான் அதுக்கு முன்னாலேயே ஒரு நாளை எதிர் பார்த்துக்கிட்டிருந்தேன்! அந்த நாள் இந்த நாள்தான்னு எனக்கு அப்போ பட்டுது! ஆனால் கதைதான் திசை மாறிப் போயிட்டுது! நான் அப்படி நினைச்சிருக்கக் கூடாதுன்னு ரொம்ப நாளைக்கு அப்புறம்தான் எனக்குத் தெரிஞ்சுது!'' என்று சொல்லிவிட்டு அவன் ஓர் ஏக்கப் பெரு மூச்சோடு தனது பேச்சை நிறுத்தினான்!

''நீ எப்படிப்பட்ட ஒரு நாளை எதிர்பார்த் திருந்தாய்?'' என்று கேட்டேன்.

'' 'தம்பி! நீ கண்ணம்மாளைக் கல்யாணம் பண்ணிக்க'ன்னு அக்கா என்கிட்டே சொல்லு வாங்கன்னு எதிர்பார்த்துக்கிட்டிருந்தேன். அது

# ஒரு ரகசிய கதை

தனி அழகையும் நறுமணத்தையும்
கொடுக்கும் கேரளா சந்தன சோப்-
சுந்தத்தின் அடிப்படை நறுமணம்—
அழகினுடைய ரகசியமும் இந்த நறுமணமே ஆகும்
இந்த நறுமணம் எப்படி வந்தது?

அது ஒரு ரகசியம். இருந்தாலும் நாங்கள் சொல்கிறோம் — அது பல வருட ஆராய்ச்சியையும் அனுபவத்தையும் கொண்டு சந்தனாதிதைலம் மற்றும் வெட்டிவேர் தைலத்தினால் தனிப்பட்ட முறையில் தயாரிக்கப்பட்டது.

புத்துணர்ச்சிக்கு—
வசீகர சூழ்நிலைக்கு—




## கேரளா சந்தன சோப்

கேரளா சோப்ஸ் & ஆயில்ஸ்
லிமிடெட்டின் ஒரு தயாரிப்பு

**கேரளா சோப்ஸ் & ஆயில்ஸ் லிட்**
சோப் இன்ஸ்டிட்யூட் டிவிஷன்,
கோழிக்கோடு-11
(கேரள அரசின் ஒரு நிறுவனம்)

SISTA'S KSO 221 TA

எனக்கு அக்காள்தானே ! அது மகள் எனக்கு முறைப் பெண்தானே ! எனக்குக் கண்ணம்மா மேலே எவ்வளவு பிரியம் என்றதும் அக்காளுக்குத் தெரியுமில்லே! ஆனல் அக்காள் நினைப்பு எப்படியோஎல்லே இருந்திருக்கு ! — அப்புறம் அங்கே எனக்குச் சாப்பிடத் தோணுமா?

''கண்ணம்மாளுக்குக் கல்யாணமெல்லாம் நல்லா முடிஞ்சதுன்னு ஊரிலே பேசிக்கிட்டாங்க ! அந்தப் பேச்சைக் கேட்டு என் ரத்தம் கொதிச்சது!

அதற்கப்புறம் யாராவது கண்ணம்மா பேரைச் சொன்னாலும் வெறுக்கலானேன்.

அன்றைக்கு ஒரு நாள் ராத்திரி பன்னிரண்டு மணி இருக்கும் ! எப்பொழுதும் போல் நான் தென்னந் தோப்பிலே உட்கார்ந்திருந்தேன் ! அப்போ ஒரு பெரியவர் அந்த வழியா வந்தாரு !

என்கிட்டே வந்ததும் என்னை உற்றுப் பார்த்துட்டு, 'நீ யாருப்பா, ஏன் இந்த நேரத்திலே இங்கே உட்கார்ந்திருக்கே'ன்னு கேட்டவர், 'தம்பி! உனக்கு என்ன கவலை இருந்தாலும் அதை என்கிட்டே சொல்லலாம் ! என் கூட வாப்பா'ன்னு என்னை அழைச்சுக்கிட்டுப் போனரு!

''அன்றைக்கு ராத்திரி அந்தப் பெரியவர் கூடவே நானும் அவர் வீட்டுத் திண்ணையிலே படுத்துக் கிடந்தேன் ! அப்போ அவரு என் கதையைக் கேட்டாரு ! நானும் அதுவரையிலே நடந்ததையெல்லாம் ஒன்றுவிடாமல் சொன்னேன்! என் முகத்தைப் பார்த்துக்கிட்டே அக்கறையா கேட்டீங்களே, ஒரு கேள்வி, 'நீ ஏன் கண்ணம்மாளைப் பற்றி உன் அக்காளிடமே உரிமையோடு கேட்டிருக்கக் கூடாது?'ன்னு. அதே கேள்வியை அவரும் கேட்டாருங்க !

''எனக்கு ஒண்ணும் பதில் சொல்லத் தெரியல்லே! அப்போ அவரே பதில் சொன்னரு, 'நீ எப்படியப்பா உன் அக்காளை உரிமையோடு கேட்டிருக்க முடியும் ! நீ ஒரு மனுஷனு, ஓர் ஆண் பிள்ளைக்கு இருக்க வேண்டிய தைரியத்தோடேதான் இருந்த இல்லையே ! சரியான நேரத்திலே, சரியான இடத்திலே பேச உனக்கு வார்த்தை எங்கேயிருந்து கிடைக்கும்! இது மட்டுமில்லேப்பா, இதைப் பற்றி இனிமேல்தான் உனக்குத் தெரியணும்! நீயாவே தெரிஞ்சுப்பே ! நீ நாளையிலேயிருந்து புது மனுஷன்! இப்ப நீ படுத்துத் தூங்குன்னரு !

நான் மறு நாள் காலையிலே சீக்கிரமாகவே எழுந்துவிட்டேன்!

'இதோ பாருப்பா, இந்தப் பொட்டலத்திலே ரெண்டு வேளைக்குச் சாப்பாடு இருக்கு ! இந்தப் பணத்தையும் உதவியா வைச்சுக்க ! இனிமேல் நீ எதையுமே நினைக்கக் கூடாது ! இங்கே இருந்து உனக்கு எந்தப் பக்கம் போகணும்னு தோணுதோ, அந்தப் பக்கமா போய்க்கிட்டே இரு! காலை வெளிச்சா ஓரிடத்திலே உட்கார்ந்துக்கிட்டு உன் கண்ணுக்கு முன்னலே நடமாடுகிற ஜனங்களையெல்லாம் நல்லா பாரு ! அவர்களைப் பார்த்து, 'எனக்கு ஏதாவது வேலை கொடுங்க'ன்னு கேளு! ரொம்பப் பேரு வேலையாவது வெட்டியாவதுன்னுதான் சொல்லுவாங்க ! ஆனல், உன் கண்ணுக்குத் தென்படுகிறவர்களிலே ஒருத்தர்தான் உனக்கு வேலை கொடுக்கப் போகிறவர் என்பதை மறந்துடாதே ! இன்னொன்னையும் நீ தெரிஞ்சுக்கணும். உனக்கு வேலை கொடுக்கிற மனுஷன் சம்பளமும் கொடுப்பான் ! நீயாகக் கூலி கேட்காதே, ஆமாம் ! இன்னும் ஒரு வருஷத்துக்கு நீ இந்தப் பக்கமே வரக்கூடாது! இதிலே கண்டிப்பாயிருக்கணும் ! அதுக்கப்புறம் நீ இங்கே வந்தால், இப்போ உனக்குப் பகையாய்த் தெரிகிற ஜனங்களெல்லாம் சொந்தமாய்த் தெரிவாங்க!'

அவரு பேச்சு எனக்கு அதிசயமா யிருந்துது! பெரியவரு சொன்னபடியே குத்தாலத்திலே ஒரு மக்கடைக்காரர் எனக்கு வேலை கொடுத்தாரு !

''அவர் என்கிட்டே பிரியமாகவும் இருந்தாரு! கடைக்குப் பலதரப்பட்டவர்கள் வருவாங்க, போவாங்க ! அவங்ககிட்டேயெல்லாம் பேசறது, பழகறது எனக்கு ஆசையாயிருக்கும் ! சிலர் 'கடுகடு'ன்னு இருப்பாங்க! அவங்ககிட்டேயும் சிநேகிதமாப் பேசற பழக்கம் எனக்கு வந்துட்டுது ! இத்தனைக்கும் மேசை துடைக்கிற வேலை, தண்ணீர் கொண்டு வருகிற வேலைகளைத்தான் நான் செஞ்சுக்கிட்டிருந்தேன்! நான் அந்தக் கடையிலே வேலை செஞ்சிக்கிட்டிருந்தப்போ ராத்திரி நேரங்களிலே கடைக்குப் பக்கத்திலே இருந்த அம்மன் கோயிலிலேதான் படுத்துப்பேன்! ராத்திரியிலே அங்கே படுத்திருக்கிறப்போ மட்டும் கண்ணம்மாவின் நினைப்பு அடிக்கடி எனக்கு வரும்! ஒரு நாள் ராத்திரி கண்ணம்மாவின் நினைப்பு தீவிரமா வந்தது! திடீர்னு கண்ணம்மா வயிற்று வலியாலே துடிச்சாள்! வலி தாங்க முடியாமே துடிச்சுக்கிட்டே 'மாமா, மாமா'ன்னு கதறினள்! நான் முழிச்சுக்கிட்டு உட்கார்ந்தேன். என் உடம்பெல்லாம் வேர்த்துக் கொட்டியிருந்தது. கனவுதான் கண்டிருக்கேன் ! இருந்தாலும் எனக்குப் பயம். சாதாரணமாகவே கண்ணம்மாளுக்கு ஏதாவது உடம்புக்கு வந்துவிட்டால் அவ என்னைத்தான் கூப்பிடுவாள்! நான் தான் பிரியமா எல்லாம் செய்வேன் ! இப்போ கனவு கண்டதிலேலே என் மனசு என்னவோ போல இருந்தது! 'நம்ம கண்ணம்மாளைப் போய்ப் பாவி, துரோகின்னு நினைச்சோமே, என்ன கெட்ட மனசடா நமக்குன்னு தோணித்து. அழுகையும் ஆத்திரமுமா வந்தது! 'அம்மா, என் கண்ணம்மாளைக் காப்பாத்து! அவள் கஷ்டத்தையெல்லாம் இப்பவே நீக்கிடு, தாயே'ன்னு வேண்டிக்கிட்டேன்! அப்புறம் கொஞ்சம் மங்கலா எரிஞ்ச ஒரு சர விளக்கைத் தூண்டிவிட்டுட்டு மறுபடியும் அம்மனைப் பார்த்தேன்! என் கண்களிலேயிருந்து கண்ணீர் கடகடன்னு கொட்டிச்சுங்க !''

இந்தக் கடைசி வாக்கியத்தை அவன் நாத் தழுதழுக்கக் கூறிவிட்டுத் தன் பேச்சைக் கொஞ்ச நேரம் நிறுத்திக் கொண்டான். ''ஆமாம், நான் கண்ணம்மாளைப் பற்றி வஞ்சகமா நினைச்சது நிஜங்களா, அல்லது அம்மன்கிட்டே வேண்டிக்கிட்

டேனே, அது நிஜங்களா?'' என்று என்னைப் பார்த்துக் கேட்டான்.

அவன் கேள்வி உண்மையிலேயே பெரிய கேள்வியாக எனக்குப்பட்டது. நான் பதில் ஒன்றும் சொல்லவில்லை! அவனும் என் பதிலைக் கொஞ்சமும் எதிர்பார்க்காதவனாய் ''நான் அம்மன்கிட்டே வேண்டிக்கிட்டேன் பாருங்க, அதுதான் நிஜம்! இதுக்கு ஆதாரமாகப் பின்னாலேயும் ஒண்ணு நடந்தது'' என்று சொல்லித் தொடர்ந்தான்:

ஒரு நாள் மாயவரம் பஸ் ஸ்டாண்டிலே நின்னுக்கிட்டு வேடிக்கை பார்த்துக்கிட்டிருந்தேன்!

திடீர்னு 'மாமா'ன்னு ஒரு குரல் என் காதிலே பட்டுது! நான் திரும்பிப் பார்த்தேன். கண்ணம்மா — அவதாங்க என் அக்கா மகள் — ஓரிடத்திலே நின்னுக்கிட்டிருந்தாள்! அவதாங்க என்னைக் கூப்பிட்டது! நான் அவகிட்டே போனேன்! அப்பத்தான் அவள் பக்கத்திலே நின்னுக்கிட்டிருந்த ஒரு வாலிபன் கண்ணம்மா கைகளிலே திராட்சைப் பழங்களை வாங்கிக் கொடுத்துக்கிட்டிருந்தான்! கைகளிலே இராட்சைப் பழங்களை ஏந்திக்கிட்டே என்னைப் பார்த்த கண்ணம்மா, 'மாமா! 'நீ என் கல்யாணத்துக்குக் கூட வராமே என்னை ஏமாத்திட்டியே! உன்கிட்டே சொல்லிக்காமலேயே போய்த்தானே நான் கல்யாணம் பண்ணிக்கிட்டேன்! என் மேலே உனக்குக் கோபமா, மாமா?'ன்னு கேட்டாள். அப்போ அவள் தலை நிறைய மல்லிகைப்பூ வைச்சிருந்ததை நான் பார்த்தேன்; நல்லாப் பார்த்தேன்! என் கை அப்போ சட்டுன்னு மடியிலிருந்த பேனாக்கத்தியைப் பற்றி, அதை மடியிலிருந்து எடுக்கிறாப்போலே இருந்தது! உடனே என் தலை கொஞ்சம் சாய்ந்து கண்கள் சற்றுத் தாழ்ந்து பூமியைப் பார்க்கிறதும் பார்க்காததும் போல் இருந்ததை நான் உணர்ந்தேன்! என்னுள்ளேயே என்ன நடக்கிறது என்பதைப் பற்றி நான் கவனிச்சுப் பார்த்தேன்! முன்பு கோயிலில் நடந்ததையும் இப்போ நான் நினைச்சுப் பார்த்தேன். அம்மன் சரவிளக்கை நான் தாண்டி விட்டதும் இப்போ என் ஞாபகத்துக்கு வந்தது! என் கை மடியிலிருந்து தானாகவே விலகியது!

கண்ணம்மாளும் அவள் கணவனும் கொஞ்ச நேரத்துக்கெல்லாம் பஸ் ஏறி ஊருக்குப் போயிட்டாங்க! அப்புறம் எனக்கு மடி கனக்கிற மாதிரி இருந்தது! நான் பஸ் ஸ்டாண்டுக்குப் பின்னாலே போனேன். என் மடியிலே இருந்த கத்தியை எடுத்து அங்கே ஓடிக்கிட்டிருந்த சாக்கடையிலே வீசி எறிஞ்சுட்டு வந்துட்டேன்!''

நான் அவனைப் பெருமையப்போடு பார்த்தேன். அறிவுக்கும் முகிழ்ந்தல் உண்டே!

''கண்ணம்மாளை நான் பஸ் ஸ்டாண்டிலே பார்த்தேன்லே, அதுக்கும் பின்னாலேதான் நாலு காரியத்தை முறையாச் செய்யத் தெரிஞ்ச ஒரு சராசரி மனுஷனா நான் மாறினேன்! ஆமாம்; அதுக்கு அவ்வளவு காலம் எனக்குத் தேவைப்பட்டிருக்கு!''

''கண்ணம்மாளைப் பார்த்தபின் வருஷம் இரண்டுக்கு மேலே ஓடிப் போச்சு! இப்பத்தான் என் சொந்த ஊருக்கு நான் வந்திருக்கேன்! நான் வீட்டுக்குள்ளே நுழைஞ்சப்போ, எங்க அம்மா என்னைப் பார்த்துட்டு ஆசையோடே தள்ளாடிக்கிட்டே ஓடி வந்து என்னைக் கட்டிக்கிட்டு அழுதாங்க! அவங்க அப்படி அழுதது கொஞ்ச நேரம்தான்! அப்புறம் அவங்க முகத்திலே கவலையே இல்லே! நான் அவங்களுக்குன்னு எடுத்துக்கிட்டு வந்திருந்த புடவையைக் கொடுத்தப்போ அவங்க மறுபடியும் அழுதாங்க! ஆனால், இது ஆனந்தக் கண்ணீருங்க! எதுக்கும் லாயக்கில்லாமே எங்கே வீணாப் போயிடுவானோன்னு நினைச்சிருந்த பிள்ளையும் நமக்குப் புடவை வாங்கிக் கொடுக்கிற அளவுக்கு வந்திருக்கானேன்னு நினைச்சுத்தான் அவங்க அழுதிருக்கணும்; இல்லீங்களா?

''அண்ணிகூட அப்போ என்கிட்டே பிரியமாப் பேசினாங்க!

ஊரிலே நான் நடந்து போறப்போ எல்லாருமே வந்து பிரியமாய்ப் பேசினாங்க.

அந்தப் பெரியவர் சொன்னது அப்படியே பலிப்பதைக் கண்டேன். அவரைப் பார்க்கணும்கிற ஆசையாலே அவரைப் பற்றி விசாரிச்சேன். அவரு.... அவரு.... எனக்கு உணவும் வேட்டியும் கொடுத்து வழிகாட்டி அனுப்பிச்சாரு பாருங்க, அதுக்கப்புறம் ஒரு மாதத்துக்கெல்லாம் இறந்து போயிட்டாராம்!''

அவன் கண்கள் கலங்கின.

அவன் நினைவை மாற்றக் கருதி, ''ஆமாம், நீ இப்படியே தனிக்கட்டையா இருந்துவிடலாம் என்றுதான் நினைத்துக் கொண்டிருக்கிறாயா?'' என்று கேட்டேன்.

இப்போது அவன் அந்தப் பனைமரத்துக்கும் அருகில் — மண்பாட்டையின் சரிவில்— முளைத்திருந்த இளம் பனங்கன்று ஒன்றைப் பார்த்து விட்டுச் சிரித்தான்!

''முன்னே இது ஒற்றைப் பனையாய்த்தான் இருந்துது! இப்போதான் இதுக்குப் பக்கத்திலே இன்னொண்ணும் முளைச்சிருக்கே!'' என்றவன், ''முன்னே நான் என்னையும் இதைப்போலத் தனியாளா நினைச்சு வேதனைப்பட்டதுண்டு. இப்போ நானும் இந்தச் சமூகத்திலே ஒருத்தன், எனக்கும் நல்ல துணை கிடைக்க முடியும்னு நினைக்கிறேன்! அதனாலே நானும் மத்தவங்களைப்போல வாழத் தான் போறேன். நான் இன்னும் கண்ணம்மாளுடைய ஊருக்குப் போகல்லே! அவளுக்கு மாமனா இருந்துக்கிட்டு இதுவரை நான் ஒரு பரிசும் கொடுத்ததில்லே! அதனாலே நான் ஒரு நல்ல புடவையா வாங்கிக்கிட்டுக் கண்ணம்மா ஊருக்குப் போகப் போறேன். அதை அவள் கையிலே கொடுத்துட்டு அவள் புருஷனோட சிரிச்சுப் பேசறதை மறுபடியும் என் கண்ணாலே பார்த்துவிட்டு, அப்படியே அவள் கிட்டே ஒரு விஷயத்தையும் சொல்லணும்னு ஆசைப்பட்டுக்கிட்டிருக்கேன்....!''

''என்ன விஷயம் அது?'' என்றேன் நான் துடிப்போடு.

''கண்ணம்மாளிடம் எனக்கொரு பெண் பார்க்கும்படி சொல்லப் போறேன்!'' — இதைச் சொல்லிவிட்டு அவன் என்னைப் பார்த்து வெட்கத்தோடு சிரித்தான்.

அன்புள்ள குண்டு!

மார்ட்டனின் மிட்டாய்களைத் தின்பதே வாழ்க்கையில் சிறந்த ஒன்றாகக் கருதுகிறேன் என்று நீ கூறியதை முட்டாள்தனம் என்று நினைத்தேன்.

ஆனால், இப்பொழுது மார்ட்டனின் லாக்டோ பன்பன்ஸ், க்ரீம் டா∴பீகள், ராஸ்ப்பெரி பிங்கர்ஸ் ஆகியவற்றைத் தின்று பார்த்தபிறகு நீ கூறியது முற்றிலும் சரியென்று நினைக்கிறேன். அவையெல்லாம் விவரிக்க முடியாதபடி அவ்வளவு நன்றாயிருக்கின்றன!

மார்ட்டன் கிளப் ஒன்று நாம் துவக்கி, நமது கைச் செலவுப்பணத்திலிருந்து ஒருவர் மாற்றி ஒருவராக மார்ட்டனின் மிட்டாய்கள் வாங்கித் தின்போம். உன்னுடைய அபிப்பிராயம் என்ன?



உனது
தண்டு.




**MORTON**

ஸி & இ. மார்ட்டன் (இந்தியா) லிட்.

உயர்ந்தரக மிட்டாய்களையும் பால்பொருள்களையும் தயாரிப்பவர்கள்




# அன்பிற்கு அப்பால்

கோமகள்

அநுபவக் கல்வி ஒரு வருடம். அதை யடுத்து உடனே பதவி. பதவியேற்று ஆறு மாதங்கள் வரை விடுமுறை கேட்கக் கூடாது என்பது விதி. எனவே ஆறு மாதங்கள் முடிந்த உடனே ராமு விடுமுறை கோரிப் பெற்று விட்டான்.

அன்று காலையிலிருந்தே ராமு டில்லித் தெருக்களைச் சுற்றிச் சுற்றிப் பொருள்களை வாங்கிச் சேமித்தவாறிருந்தான். 'குடை வெட்டுப் பெட்டி கோட்', கலர் லேஸ்கள், எம்பிராய்டரி சேலைகள், கைப்பை, செயற்கை முத்து மாலை என்று விதம் விதமான பொருள்கள். மனத்துள் பிரமீளாவின் மலர் முகம் நாணி நின்றது. இதுவரை அவன் அவளுக்கு வாங்கித் தந்த பரிசுகள் எல்லாம் உயர்ந்த புத்தகங்கள். புத்தகங் களின் மீதுதான் அவளுக்கு எத்துணை ஈடுபாடு! அதை அவன் சமயம் வரும்போ தெல்லாம் மனத்துட் கொண்டு அருமை யான புத்தகங்களாக வாங்கிப் பரிசளித் திருக்கிறான். இப்போதுதான் முதல் தடவை யாக அவன், பெண்மையின் நளினத்துக்கும், கவர்ச்சிக்கும் ஏற்ற பரிசுகளாக வாங்கி இருக்கிறான்! இதைக் கண்டால் அவள் முகம் எப்படி நாணி மலரும் என்பதே அவன் கற்பனைச் சுகமாக இருந்தது. மகிழ்வில் மல ராக விரியப் போகும் அவளை எண்ணி அவ னுள் விந்தைக் கிளர்ச்சி விளைந்தது.

மெல்லிருள் சூழ்ந்து குளிர் நடுக்க ஆரம் பித்த பின்தான் ராமு கவனித்தான். மணி ஆறு ஆகிவிட்டது. அன்று திங்கட்கிழமை. எந்த உணவு விடுதியும் கிடையாது. அறை யிலோ, பிஸ்கட், ஜாம் கூட இல்லை என்பது நினைவில் வந்தது. மதியம் உண்ணாததால் கடும் பசி வயிற்றைக் கிள்ள நைப்பாசையோடு சில ஹோட்டல்களை நோக்கினான். எல்லாம் அடைபட்டு விட்டன.

சலிப்போடும், சோர்வோடும் நடந்தவன் மனக் கண்ணில் சந்து முனைக் கடை நினைவில் வந்தது. கூடவே அருவருப்பு வயிற்றைக் குமட்டியது. ஆனால் அது ஒரு கணம்தான்.

அடுத்த கணம் வயிற்றின் அசுரத்தனமான பசி வெறியில் அருவருப்பு மறைந்து விட்டது. கால்கள் சந்து முனைக் கடையை நோக்கி நடந் தன. இந்த ஆதாரமா வது கிடைத்ததே, அதைப் பற்றிக் கொள் ளத்தான் வேண்டும் என்று குதி போட்டது அவன் மனம்.

எத்தனையோ முறை போகும்போதும், வரும் போதும் டில்லியின் அந் தச் சந்து முனைக் கடை யைப் பார்த்து ராமு அருவருப்பால் முகம் சுளித்திருக்கிறான். மங் கிய அழுக்கடைந்த கண் ணாடி'பீரோவினுள் கருஞ் சிவப்பிலும், மஞ்சள் நிறத்திலும் பாகு தோய்ந்து கிடக்கும் பலகாரங்கள் எல்லாம் குமட்டலை ஏற்படுத்தும். அதில் வட்டமிடும் ஈக்கள், சாயாக் கிளாஸ்களைக் கழுவும் தண்ணீர் கூடி நிற்கும் சிறு வாய்க்காற் குட்டை யில் நிறைந்திருக்கும் கொசுக்கள் இவைதான் அந்தக் கடையின் எளிமையான ஆனால் ஏராளமான வியாபாரத்துக்குரிய விளம்பர சாதனங்களாக இருந்தன. அந்தக் கடையில் நின்று வயிற்றில் பிரும்மாண்டமாகக் கோரக் கூச்சலிட்டு வந்த பசியரக்கனைச் சமாதானப் படுத்திய பின்தான், இந்தக் கடையில் வந்து சாப்பிட்டோமே என்ற சிறுமை உணர்வு பெருகியது. வயிறு நிறைந்ததும் ஏற்படும் வேதாந்தம் அது!

பரிசுப் பொருள்களோடு அவன் பஸ் ஸுக்குக் காத்திருந்தான். அவன் மனம் அப்போதே பிரமீளாவிடம் போய் அவற் றைக் காட்டி அதனால் அவள் முகத்தில் ஏற்படப் போகும் அன்பின் குதூகலத்தை அநுபவிக்கத் துடித்தது. பிரமீளா அவன் அன்புக்குக் கவர்ச்சி, மனத்துக்குத் துணை. அவளைப் பிரிந்து ஒரு வருடமாகப் போகிறது. இப்போது அவளைச் சட்டென்று பார்த்தால் அவன் மெய்மறந்துவிட மாட்டானா? அவன் அப்பா மட்டும்? மத்தியதரக் குடும்பமான அந்த வீட்டின் தலைப்பெண்ணை எவ்வித மூலதனமும் கொள்ளாமல் ஏற்பதின் மூலம் அவர் தலையாய தலைச் சுமையை இறக்கப் போகிறவனாயிற்றே?

''ஹலோ ராமு...!'' குரலையடுத்து ராமு வின் முதுகில் பலத்த ஷொட்டு விழுந்தது.

''ஓ! வெங்கடேசனா? எங்கே இப்படி? எப்போது மெட்ராஸிலிருந்து வந்தாய்?''

''நான் வந்து இரண்டு மாதம் ஆகப் போறதே. என் மாமா வீட்டிலே தங்கி யிருக்கிறேன். உன் வேலை என்ன ஸ்திரமா யிடுத்தா? அடேடே! என்ன கையிலே? என் னென்னமோ அட்டைப் பெட்டிகள் வச் சிருக்கே! ஓகோ! பரிசுப் பொருள்களா? என்ன ராமு, மெட்ராஸ் போறயா? உன் பிரமீளாவுக்குத் தானே இத்தனையும்...?''

வெட்கத்தோடு உண்மையை ஒப்புக் கொண்டான் ராமு.

''ஓ! இப்பத்தான் ஒரு விஷயம் ஞாபகம் வருகிறது. உன் பிரமீளாவைப் பற்றி ஒன்று கேள்விப்பட்டேன். நிஜமோ பொய்யோ எனக்குத் தெரியாதப்பா...'' என்று கூறிய வாறே கேள்விப்பட்ட விஷயத்தை ஞாபகத் துக்குக் கொண்டு வரப் பாடுபட்டான் அவன். ''எஸ்... பாலுதான் அவன் பெயர். பிரமீளாவோட அம்மாவுக்கு அவன் தூரத்து உறவாம். அவள் அழகிலே மயங்கி அவளையே மணக்க ஒற்றைக் காலில் நின்றானும். வீட்டின் வறுமையை யெல்லாம் ஒரு நொடியில் போக்கி விடுவதாக ஆசை காட்டினானும். எதற்கும் பிரமீளா மசியவில்லையாம்.... அதோ என் பஸ் வர்றது ராமு. சீக்கிரம் முடிச்சுடறேனே...அவ அம்மாவுக்கு ஒரே சபலம். அடி மேலே அடி வச்சா அம்மியும் நகராதான்னு அவனே வீட்டிலேயே இருக்கச் சொல்லிட்டுப் பொண்ணோட மனசைத் திருப்பப் பார்க்கிறாளாம்...வரட்டுமா ராமு'' என்றவன் தனக்குரிய பஸ்ஸில் தொத்திக் கொண்டான்.

''பிரமீளா பிரமீளாதான்!'' என்று பெருமிதப்பட்டுக் கொண்டான் ராமு.

சென்னையை மறுமுறை பார்த்தபோது ராமுவின் நெஞ்சில் புதுப்பிக்கப்பட்ட இனிய நிகழ்ச்சிகள் எத்தனை! அவனும், பிரமீளாவும் சுற்றிய இடங்கள், பார்த்த காட்சிகள், பழகிய மன நிலைகள் எல்லாமே மறுமுறை மனப் பதிவில் வெளிச்சமிட்டுக் காட்டப்பட்டன. அவன் தலைநகரிலிருந்து வந்திருந்தாலும் இனி தலைநகரிலேயே வாழ்ந்தாக வேண்டுமென்றாலும் அவன் அன்புக்கு உரியவளோடு சம்பந்தப்பட்ட சென்னை நகரின் எழிலையும், சுறுசுறுப்பையும் அவனால் மறக்க முடியுமா? அவன் மனத்தில் என்றுமே மானசிக மலர்ச்சியாக இருக்கும் நினைவுகளல்லவா அவை?

மூர் மார்க்கெட்டைப் பார்த்ததும் அங்கு வட்டமிட்டு வாங்கிய புத்தகங்கள் நினைவுக்கு வந்தன. உரையோடு திருக்குறள், சிலம்பு, கம்ப ராமாயணம், திருப்பாவை, கீதை, வோல்காவிலிருந்து கங்கை வரை, திரு. வி. க. வின் பெண்ணின் பெருமை, பாரதி கவிதைகள், பாரதிதாசன் கவிதைகள் என்று இன்னும் தரமான இலக்கிய வரிசையில் கொள்ளத் தக்க நூல்களை வாங்கி, அதில் ''பிரமீளாவுக்கு அன்பளிப்பு'' என்று எழுதிக் கையெழுத்திட்டுத் தந்தபோது அவள் முகத்தில் செம்மையிட்ட நாணக் குறுகுறுப்புக்களையெல்லாம் தேற்றுக் கண்டாற் போலிருக்கிறது. வருடம் ஒன்று ஓடிப் போய் விட்டது. இப்போதும் அதேமாதிரி இன்னும் சில நல்ல புத்தகங்கள் வாங்கிக் கொண்டு போனாலென்ன? அவளுக்குத்தான் புத்தகங்களென்றால் உயிராயிற்றே?

ராமு மூர் மார்க்கெட்டுக்கு நடந்தான். அந்த மூலைக் கடையில்தான் ஒரு வயதான தாத்தா உட்கார்ந்திருப்பார். அவர் ஒவ்வொரு முறையும் இருவரையும் பார்த்துச் சீக்கிரமே தம்பதியாக வரவேண்டும் என்று வாழ்த்துவார். இப்போது அவனைப் பார்த்தால் அவர்கூட மகிழ்ந்து ஆசீர்வதிப்பார். அவன் நடை கடையை நாடி நின்றது.

அங்கு இளைஞன் ஒருவன் இருந்தான்.

''என்ன ஸார் வேண்டும்?''

''முன்பு ஒரு முதியவர் இருப்பாரே!''

''அப்பா போய்ட்டார், ஸார்!'' தெரிந்தவர்களிடமெல்லாம் சொல்லிச் சொல்லி உணர்ச்சியே வறண்டிருந்தது அவன் குரலில்.

மனதக்குள் ஒரு நிமிடம் துக்கமாக நின்ற உணர்வு சமாளித்து மீண்டது. உலகம் வளர்கிறது. வளர்ந்தவர்கள் தேய்ந்து மங்குகிறார்கள்.

''என்ன மாதிரி புத்தகங்கள் ஸார்?'' இளைஞன் வியாபாரக் குரல் கொடுத்தான்.

''ஃபிலாசஃபி வரிசையில் ஏதேனும் எடுங்களேன்...''



# மியூஸிக் அகாடமி, சென்னை-14

**42-வது ஸங்கீத மகாநாடும், கச்சேரிகளும் □ 1968 டிசம்பர் 20ந் தேதி முதல் 1969 ஜனவரி 1ந் தேதி வரை**

20-12-68 மாலை 5 மணிக்கு மேன்மைதங்கிய திருவிதாங்கூர் மஹாராணி சேது பார்வதி பாய் அவர்கள் மகாநாட்டைத் துவக்கி வைக்கிறார்கள்

சங்கீத விதுஷி ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் தலைமை வகிக்கிறார்கள்

கனம் டாக்டர் கரன் ஸிங் அவர்கள் 1-1-1969 ஜனவரி அன்று சதஸுக்குத் தலைமை வகிக்கிறார்கள்

காலை 8 மணி முதல் 11 மணி வரை வித்வான்களின் சொற்பொழிவுகளும், நிருபணங்களும் நடைபெறும்

தினசரி நிகழ்ச்சிகள் (D. V.)

**20-12-68 வெள்ளிக்கிழமை மாலை 5 மணிக்கு துவக்க விழா**

மாலை 6 மணிக்கு நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன் — நாகஸ்வரம்
வலையபட்டி ஏ. ஆர். சுப்பிரமணியம் -ஸ்பெஷல் தவுல் ★

இரவு 8-30 மணிக்கு மாயூரம் எஸ். ராஜம் — பாட்டு
ஆர்.கே. வெங்கட்டராம சாஸ்திரி -வயலின்
நாகூர் டி. எஸ். அம்பி அய்யர் -மிருதங்கம்

**21-12-68 சனிக்கிழமை**

| பிற்பகல் 1-30 மணி | மாலை 3 மணி | மாலை 5-30 மணி | இரவு 8-30 மணி |
|---|---|---|---|
| எம். வி. ரமணமூர்த்தி -பாட்டு | டி. வி. ரத்னம் -பாட்டு | செம்மை வைத்தியநாத பாகவதர் -பாட்டு | டி. கே. ரங்காச்சாரி -பாட்டு |
| திருக்கோடிகாவல் கிருஷ்ணமூர்த்தி -வயலின் | குடந்தை ஆர். பாலசுந்தரம் -வயலின் | வி. வி. சுப்பிரமணியம் -வயலின் | டி. என். கிருஷ்ணன் -வயலின் |
| திண்டுக்கல் ராமமூர்த்தி -மிருதங்கம் | மதுரை டி. ஸ்ரீநிவாஸன்-மிருதங்கம் | கோபாலகிருஷ்ணன் -மிருதங்கம் | கிருஷ்ணமணி -மிருதங்கம் |
| | டி. வி. திரவியம் -கஞ்சிரா | இ. எம். சுப்பிரமணியம் -கடம் | எஸ். வெங்கட்ராமன் -கடம் |

**22-12-68 ஞாயிற்றுக்கிழமை**

| | | | |
|---|---|---|---|
| B. கிருஷ்ணமூர்த்தி -பாட்டு | எஸ். கல்யாணராமன் -பாட்டு | எம். எஸ். சுப்புலக்ஷ்மி -பாட்டு | மைசூர் துரைசுவாமி ஐயங்கார் -வீணை |
| காஞ்சி ஜனார்த்தனம் -வயலின் | டி. ருக்மிணி -வயலின் | வி. வி. சுப்பிரமணியம் -வயலின் | குருவாயூர் துரை -மிருதங்கம் |
| டி. கே. ராமகிருஷ்ணன் -மிருதங்கம் | காரைக்குடி ஆர். மணி-மிருதங்கம் | டி. கே. மூர்த்தி -மிருதங்கம் | |
| | | டி. எச். விநாயகராம் -கடம் | |

**23-12-68 திங்கட்கிழமை**

| | | | |
|---|---|---|---|
| செங்கற்பட்டு ரங்கநாதன் & ஜெ. வெங்கட்ராமன் -பாட்டு | நெல்லை கிருஷ்ணமூர்த்தி -பாட்டு | M. D. ராமநாதன் -பாட்டு | என். ரமணி -புல்லாங்குழல் |
| பூர்ண சந்திர ராவ் -வயலின் | டி. டி. சங்கர அய்யர் -வயலின் | டி. என். கிருஷ்ணன் -வயலின் | எல். சுப்பிரமணியம் -வயலின் |
| கே. வெங்கட்ராமன் -மிருதங்கம் | கே. ஆர். சந்திரமௌளி -மிருதங்கம் | வேலூர் ராமபத்ரன் -மிருதங்கம் | பாலக்காடு ரகு -மிருதங்கம் |
| | | கே. எஸ். மஞ்சுநாத் -கடம் | |

**24-12-68 செவ்வாய்க்கிழமை**

| | | | |
|---|---|---|---|
| திருவனந்தபுரம் ஆர். எஸ். மணி -பாட்டு | மதுரை என். கிருஷ்ணன் -பாட்டு | D. K. பட்டம்மாள் -பாட்டு | சிட்டிபாபு -வீணை |
| எஸ். பி. சேதுராமன் -வயலின் | வி. சேதுராமையா -வயலின் | திருப்பாற்கடல் வீரராகவன் -வயலின் | வேலூர் ராமபத்ரன் -மிருதங்கம் |
| ஏ. ஈஸ்வரன் -மிருதங்கம் | எம். என். கந்தஸ்வாமி -மிருதங்கம் | காரைக்குடி ஆர். மணி -மிருதங்கம் | ஆலங்குடி ராமசந்திரன் -கடம் |

**25-12-68 புதன்கிழமை**

| | | | |
|---|---|---|---|
| வி. கருணா -பாட்டு | டி. வி. நமசிவாயம் -பாட்டு | கமலா, ராதா & வஸந்தி -பரதநாட்டியம் | பிருந்தா & முக்தா -பாட்டு |
| வி. ரங்கநாயகி -வயலின் | எம். சந்திரசேகரன் -வயலின் | | அன்னவரப்புராமஸ்வாமி-வயலின் |
| வி.கோபாலகிருஷ்ணன்-மிருதங்கம் | டி. கே. மூர்த்தி -மிருதங்கம் | | கோவை ராமஸ்வாமி -மிருதங்கம் |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 26 - 12 - 68 | வியாழக்கிழமை | திருப்பாம்புரம்<br>எஸ். ஷண்முகசுந்தரம் -பாட்டு<br>ஸி. ஜி. குமரேசன் -வயலின்<br>கே. ஸ்ரீவத்ஸன் -மிருதங்கம் | டி. கே. கோவிந்த ராவ் -பாட்டு<br>கண்டதேவி அழகிரிசாமி -வயலின்<br>கோவை ராமஸ்வாமி -மிருதங்கம்<br>குருமூர்த்தி -கடம் | மதுரை சோமசுந்தரம் -பாட்டு<br>எம். சந்திரசேகரன் -வயலின்<br>ஸி. எஸ். முருகபூபதி -மிருதங்கம்<br>ஸி. கே. ஷியாமசுந்தர் -கஞ்சிரா | மன்னார்குடி<br>சாம்பசிவ பாகவதர் -ஹரிகதை |
| 27 - 12 - 68 | வெள்ளிக்கிழமை | கே. வசந்தா &<br>கே. விஜயலக்ஷ்மி -பாட்டு<br>ஆலந்தூர் நடராஜன் -வயலின்<br>மாஸ்டர் ஸ்ரீராமன் -மிருதங்கம் | பி. எஸ். நாராயணஸ்வாமி -பாட்டு<br>சாலக்குடி நாராயணஸ்வாமி -வயலின்<br>Prof. வேலுகுட்டிநாயர்-மிருதங்கம் | ராமனாதபுரம் கிருஷ்ணன் -பாட்டு<br>எம்.எஸ். கோபாலகிருஷ்ணன் -வயலின்<br>திருச்சி சங்கரன் -மிருதங்கம் | பிஸ்மில்லாகான் & பார்ட்டி -ஷெனாய் |
| 28 - 12 - 68 | சனிக்கிழமை | டி. ஆர். சுப்பிரமணியம் -பாட்டு<br>சிக்கில் பாஸ்கரன் -வயலின்<br>குத்தாலம் விஸ்வநாத அய்யர் -மிருதங்கம் | B. ராஜம் அய்யர் -பாட்டு<br>திருப்பாற்கடல் வீரராகவன் -வயலின்<br>பாலக்காடு குஞ்சுமணி -மிருதங்கம் | எம். எல். வசந்தகுமாரி -பாட்டு<br>திருவன்னூர் சுப்பிரமணியம் -வயலின்<br>S. கிருஷ்ணமூர்த்தி ராவ் -மிருதங்கம்<br>கே. எம். வைத்தியநாதன் -கடம் | செம்மங்குடி<br>ஆர். ஸ்ரீனிவாஸ அய்யர் -பாட்டு<br>லால்குடி ஜி. ஜெயராமன் -வயலின்<br>கே. சிவராமன் -மிருதங்கம் |
| 29 - 12 - 68 | ஞாயிற்றுக்கிழமை | ஆர். வேதவல்லி -பாட்டு<br>ஆர். கமலா -வயலின்<br>கே. பரமேஸ்வரன் நம்பூத்ரி -மிருதங்கம் | D. K. ஜெயராமன் -பாட்டு<br>திண்டுக்கல் சேதுராமன் -வயலின்<br>திருச்சி சங்கரன் -மிருதங்கம் | டி. பாலசரஸ்வதி -பரதநாட்டியம் | எம்பார் விஜயராகவாச்சாரியார் -ஹரிகதை |
| 30 - 12 - 68 | திங்கட்கிழமை | கே.எஸ். வெங்கட்ராமன் -பாட்டு<br>டி. எஸ். பாபுராவ் -வயலின்<br>என். கணேசன் -மிருதங்கம் | குஞ்சுமணி & லீலா -புல்லாங்குழல்<br>எம்.எஸ். அனந்தராமன் -வயலின்<br>கே.எஸ். செல்லப்பா -மிருதங்கம் | எம். பாலமுரளி கிருஷ்ணா -பாட்டு<br>டி. கேசவலு -வயலின்<br>உபேந்திரன் -மிருதங்கம் | யாமினி கிருஷ்ணமூர்த்தி -பரதநாட்டியம் |
| 31 - 12 - 68 | செவ்வாய்க்கிழமை | ஆர். ஜெயசங்கர் -நாகஸ்வரம்<br>டி. வி. ரமணி -வயலின்<br>புரபஸர்<br>வேலுகுட்டி நாயர் -மிருதங்கம் | கேதாரநாதன் &<br>எம். ஏ. வேணுகோபால் -பாட்டு<br>சிக்கில் பாஸ்கரன் -வயலின்<br>ராமநாதபுரம் ராகவன்-மிருதங்கம் | வைஜயந்திமாலா -பரதநாட்டியம் | சித்தேஸ்வரி -ஹிந்துஸ்தானி பாட்டு |
| 1 - 1 - 69 | புதன்கிழமை | பிற்பகல் 2 மணிக்கு<br>பிச்சுமணி -வீணை<br>பி. விஸ்வநாதன் -மிருதங்கம்<br>கே. எம். வைத்தியநாதன் -கடம் | மாலை 4 மணிக்கு<br>சதஸ் | கே. வி. நாராயணஸ்வாமி -பாட்டு<br>வி. சேதுராமையா -வயலின்<br>பாலக்காடு ரகு -மிருதங்கம்<br>வி. நாகராஜன் -கஞ்சிரா | ஏ.கே.ஸி. நடராஜன் & கே.எஸ்.<br>சின்னகிருஷ்ணன் -கிளாரினட்<br>கே. ஏ. தங்கவேல் &<br>கே. செல்லய்யா -தவுல் |

நிபுணர் குழுவில்: காலை 9-00 லிருந்து 11-00 மணி வரை

| | | | |
|---|---|---|---|
| டிசம்பர் 22-12-68<br>ஆலத்தூர் ஸ்ரீனிவாஸ அய்யர்-பாட்டு<br>கண்டதேவி அழகிரிசாமி -வயலின்<br>டி. எஸ். மணி அய்யர் -மிருதங்கம்<br>டிசம்பர் 24-12-68<br>கே. எஸ். நாராயணஸ்வாமி -வீணை | டிசம்பர் 25-12-68<br>ஸ்ரீரங்கம் அய்யங்கார் -பாட்டு<br>லால்குடி ஜெயராமன் -வயலின்<br>பாலக்காடு<br>டி.எஸ். மணி அய்யர் -மிருதங்கம் | டிசம்பர் 28-12-68<br>சாத்தூர்<br>ஏ. ஜி. சுப்பிரமணியம் -பாட்டு<br>M. S. கோபாலகிருஷ்ணன்-வயலின்<br>கே. சிவராமன் -மிருதங்கம் | டிசம்பர் 29-12-68<br>எஸ். பாலசந்தர் -வீணை<br>(ராகமாலிகை) |

சீஸன் டிக்கெட்டுகள்: ஸ்பெஷல் ஸீட் ரூ. 250. ஸ்பெஷல் ரிசர்வ்டு கிளாஸ் ரூ. 125. முதல் வகுப்பு ரூ. 60. இரண்டாம் வகுப்பு ரூ. 25

சீசன் டிக்கெட்டுகள் கிடைக்குமிடம்: மியூஸிக் அகாடமி காரியாலயம், 115-E, மௌபரேஸ் ரோடு, சென்னை-14 - போன்: 85619

இன்னும் தத்துவப் புத்தகங்கள் சில வற்றை எடுத்து அவனெதிரே வைத்தான். புரட்டியவாறே வந்தவன் இடையே ஒன்றை யைக் கண்டதும் விரித்துப் பார்த்தான். இந்தப் புத்தகம் இங்கே எப்படி வந்தது? வியப்பும், விந்தையும் விலக, முகத்தில் நீக் கங்குகளை வாரி இறைத்தாற் போல் வேதனை யுற்றான் அவன். அதன் முதற் பக்கத்தில் ''பிரமீளாவுக்கு அன்பளிப்பு — ராமு'' என்ற வாசகங்கள்! அவனது அன்புப் பூவை யாரோ இதழ் இதழாகப் பிய்த்தெறியும் வேதனை ஏற்பட்டது.

அடுத்து வரிசைக் கிரமமாக வெளிவந்த சிலம்பு, பாவை, கவிதைத் தொகுப்புகள் எல்லாமே அவன் அன்பளிப்பாக நல்கியவை தான்! அவன் பரிசாகத் தந்ததை யெல்லாம் கடையில் போடுவானேன்? அவளுக்குத் தெரி யாமல் யாரும் போட்டுவிடவும் வழியில்லை. வீட்டில் உள்ள மற்றவர்கள் அவளை விட வயதில் சிறியவர்களாயிற்றே?

''ஏனப்பா! இந்தப் புத்தகங்களையெல்லாம் இங்கு கொண்டு வந்து விற்றார்களா?''

''இதிலென்ன சார் ஆச்சரியம்? வீட்டில் நிறைய அடைஞ்சு கிடந்திருக்கும், விற் றிருப்பாங்க...''

''இதை யார் விற்றதுன்னு சொல்ல முடியுமா, கொஞ்சம் ஞாபகப்படுத்தி?''

''இல்லே சார்! அப்பா கடையிலே இருந்த போதே வந்திட்டிருக்கு ஸார். யாருன்னு எனக்குத் தெரியாது...''

''எத்தனை மாசமிருக்கும் அப்பா போய்?''

''ஒரு மாசம் ஆவுது ஸார்... உங்களுக்கு எந்தப் புத்தகம் ஸார் வேணும்?'' — விஷயத் திலேயே குறியாக இருந்தான் கடைக்காரன்.

''இதோ இந்தப் புத்தகங்கள் அத்தனை யையும் எடுத்துக்கறேன், மொத்த விலை போடு...''

அவன் அன்பளிப்பாகத் தந்தவற்றில் பதினைந்து புத்தகங்கள் அங்கு கிடைத்தன. மற்றவை அநேகமாக நாவல்கள். அவை விற்றிருக்கலாம். புத்தகத்தில் ஈடுபாடுள்ள வளால், அவன் அன்பை ஏற்கும் விருப்ப முள்ளவளால் இப்படி விற்க முடியுமா? ஈடுபாட்டை விட, ஈடுபாடு போல் காட்டிக் கொண்டதில்தான் பெருமை உற்றாளோ?

இது நியாயமா? அவன் பார்க்க மாட்டான் என்று செய்த செயலா? அவளுக்கு இத்தனை அலட்சியமா? எவ்வளவு துச்சமாக நினைத்து அந்த நினைவுகளைத் தூரத் தள்ளியிருந்தால் இப்படிச் செய்வது சாத்தியமாக இருக்கக் கூடும்? 'சட்'டென ஊசி முனையாக அந்த நினைவு அவன் மனத்தில் தைத்தது. ஒரு வேளை வெங்கடேசன் சொன்னது நிஜமோ? அவளது தூரத்துப் பணக்கார உறவினன் வீட்டில் தங்கி விருந்தானுமே! அடி மேல் அடி வைத்தால் அம்மியும் நகரும் என்று அவள் அம்மா முயற்சி செய்தாளாமே? இந்த இடைக் காலத்தில் அவளுக்கு அவன் மீது பற்று வந்து விட்டதோ? பணக்கார வாலிபனைக் கண்ட தும் பழகிய பாசமெல்லாம் மனத்தினின்றும் உதிர்ந்து விட்டதோ? அதனால்தான் பழைய அன்பின் கவடுகளை யெல்லாம் அழித்து ஒழித் துவிட இப்படிச் செய்தாளோ?

நினைவுகளின் சூட்டில் அவன் குருதி கொதித்தது. ஒருவனுக்கு உள்ளத்தைச் சமர்ப்பித்து விட்டு, மற்றொருவனை மணந்து கொண்டுவிடும் பெண்களை என்னவென்று நினைப்பது? அன்பின் கவடுகள் கலைவதுண்டா? உவமையை நிழலாக்கிப் பவனி வரும் அந்த இருவரிடையே துளிர்த்த அன்பிற்கு முறிவா? இதை அவனால் தாள முடியவில்லை. அன்று பிரியும்போது 'மறுபடியும் உங்களைச் சீக்கிரமாய்க் காண்பேனு, எப்போது அடை வேனே' என்று கதறியவளாயிற்றே அவள்? அப்போது அரும்புகளான விரல்களைப் பற்றி ஒரு கணம் நின்றான் அவன். அந்த ஸ்பரிச சுகத்தின் நினைவு இருவருக்கும் பொக்கிஷமாக இருக்கும் என்று நினைத்தது தவறுதானோ?

**மா**லை நேரம் மந்தகாசமாக விரிந்திருந் தது. கடற் காற்றால் அதன் ஓரப் பிராந் தியங்கள் எல்லாம் சிலிர்த்துக் கிடந்தன. அத்தகைய இடம் ஒன்றில்தான் ராமுவின் டாக்ஸி நுழைந்தது. அவன் டெல்லியில் வாங்கியிருந்த அன்பளிப்புக்களோடு, மூர் மார்க்கெட்டில் வாங்கிய புத்தகங்களும் அவன் கூட வந்தன. தற்போதைய உணர்வுக்கும், முந்தைய உணர்வுக்கும்தான் எத்தனை வேற் றுமை? அவளிடம் தந்து மகிழ வேண்டும் என்பதைவிட முகத்தில் வீசி எறிந்து விட்டு வரவேண்டும் என்ற வெறி மிகுந்திருந்தது.

ஐந்து குடித்தனங்களையும் தாண்டிப் பின் கட்டின் குகை போன்ற பகுதியை அவன் அடைந்தான். அந்தப் பகுதியின் கதவு ஒருக்களித்தாற்போல் சாத்தியிருந்தது. ராமு நோட்டமிடுவது போல் சிறிதளவே திறந் திருந்த கதவிடுக்கு வழியாக உள்ளே நோக்கினான். ஒருகால் உள்ளே அந்தப் பணக்காரப் பையன் இருப்பானோ?

''டேய் தடியா! உனக்கு எத்தனை தரம் சொல்வேன்? இப்படியா சோற்றை இறைப் பது?'' — திடீரென உள்ளே பிரமீளாவின் கோபக் குரல் கேட்டது. ''இப்படி வா, ஓடாதே, முதுகிலே செமத்தியா தரேன்... சனியனே! பிசாசு....!'' பிரமீளாவின் குரல் தான். அதில் எத்தனை கடூரம்!

தடதடவென்று ஓடிவந்த பையன்—அவள் தம்பி — கதவைச் சடாரென்று திறந்து கொண்டு வெளியே ஓடினான். ராமுவின் மீது கண்மண் தெரியாமல் மோதிக் கொண்டே. திறந்த கதவருகே அரை குறையாகப் பருக்கைகள் சிந்திய தட்டைக் கையில் ஏந்திய வாறே ஓடிவந்த பிரமீளா கண நேரத்தில் உணர்ச்சி மாறுதலின் குலுக்கலில் அதிர்ந் தாள். பூச்சுடராகக் கண்கள் மின்னின. புதிய இனிமை கலந்த படபடப்பில் அபூர்வ ஆவல் ரேகையிட்டது.

வியர்வையில் கலந்த முன்னுச்சி மயிர், உதடுகளின் புன்னகையின் நெளிவு, மிரண்ட பார்வையின் உள்ளக் கிளர்ச்சி, பிரமிப்பும், ரமிப்புமாகக் காணப்பட்டன. வாய் திறந் தால் குழல் கலந்து கலங்கி விடும்போல் தவிப்பு. அவளது வனப்பும், வாளிப்பும் உழைப்பில் கருகிவிட்டதோ?

''பிரமீளா...! ஓர் உருண்டைச் சாதத் துக்கு இத்தனை வசவா?''

# தரத் தேயிலைத் தூள்களிலே தனிப்பெருமை வாய்ந்தது

## லிப்டன்ஸ் ஹிமாலயன்

## கோல்டன் டஸ்ட் டீ

குணமும், சுவையும் நிறைந்த பொன்னிறமுள்ள டீ யை வெகு சீக்கிரத்தில் இந்தத் தேயிலையைக் கொண்டு அதிகமான கப்புகளைப் பெறுவீர்கள். இந்த ஒப்புயர்வற்ற டீ யை நீங்களே பருகிப் பாருங்கள்—உங்கள் விருந்தினர்களுக்கும் கொடுங்கள். நிச்சயமாக இதை ரசித்து நீங்கள் மகிழ்வீர்கள் — ஆம்! — அப்படியே உங்கள் விருந்தினர்களும்கூட! தரத் தேயிலைத் தூள்களில் லிப்டனின் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் தனிப் பெருமை வாய்ந்தது கனவிகாரற்றது என்பது உண்மை.






லிப்டன் என்றாலே நல்ல டீ






"வாருங்கள்; இப்படி வந்து உட்காருங்கள்." அவள் கண்களில் பனிப்புப் படர்ந்தது.

"சௌக்கியம்தானே, பிரமீளா?"

"வருகிறேன் என்று ஒரு கடிதம் எழுதக் கூடாதா?"

"திடீரென வந்து வியப்பில் ஆழ்த்த நினைத்தேன்" என்றவாறே அவன் உள்ளே வந்து உட்கார்ந்து கொண்டான்.

"அப்பப்பா! எத்தனை தொலைவு! எத்தனை காலம்!" அவனிடம் பெருமூச்சுத் துடித்தது.

"பிரமீளா! இதோ பார்! நமக்குள் தொலைவும் தூரமும் ஏது?"

"கொஞ்சம் இருங்கள். காப்பிக்கு ஸ்டவ் மூட்டிவிட்டு வருகிறேன்...."

"நோ நோ! இப்பொழுது காப்பி வேண்டாம். எவ்வளவோ பேசித் தீர்க்க வேண்டியிருக்கிறது.... ஏன் உன் தம்பியை அப்படி விரட்டிக் கொண்டு வந்தாய்? இப்போதுதான் அவன் சாப்பிட வீட்டுக்கு வந்தானு? என்மேல் மோதிக் கொள்ளாத குறையாக ஓடுகிறானே...."

அவள் மெல்ல முனகினாள். "ஆமாம்! இப்போதுதான் வந்து சாப்பிட்டான், சோற்றையெல்லாம் இறைத்துக் கொண்டு... ஒரு பருக்கை என்றாலும் கூட இறைக்கலாமா இந்த நிலையில்?" சொல்லும் வேகத்தில் எதை மறைக்க வேண்டுமென நினைத்தாளோ, அதை அப்பட்டமாக உடைத்து விட்ட பதற்றம். "நீங்கள் கொஞ்சம் இருங்கள். இதோ ஒரு நொடியில் வருகிறேன்." அவள் குரல் ஒடுங்கி அழுகையாகிப் பின் ஆனந்த மின்னவிட்டது.

அவள் உள்ளே போனதும் ராமு அந்தப் பகுதியை நோட்டமிட்டான். அதே ஒழுங்கு, சுத்தம், ஆடம்பரமற்ற அவசியமான சாமான்கள் அடங்கிய சூழல். பின் ஏன் புத்தகங்களை விற்றாள்? சற்று முன் பேசும்போது ஏதோ பதற்றமும் துயரமுமாகப் பேசினாளே... அதன் பொருள்?

பிரமீளா தட்டில் காப்பி டம்ளரோடு வந்தாள். அவள் முகம் இப்போது பளிச்சென்றிருந்தது. தலையைச் சீவி, முகம் கழுவிப் பொட்டிட்டு வந்திருக்கிறாள் என்பது தெரிந்தது. ஆயினும் அவளது இளைத்த உருவம், செழுமையற்ற முகம், இரங்கும் பார்வை எல்லாமே அவனை என்னவோ செய்தன. அவள் மேனியின் சந்தன நிறம்? அந்தச் சத்தான சிரிப்பு? எல்லாம் கடந்த காலக் கனவுகள் போல் மங்கிவிட்டனவே!

"உட்கார் பிரமீ! உனக்கு என்னென்ன பரிசுகள் வாங்கி வந்தேன், தெரியுமா?"

அவன் அன்பில் முற்றும் நனையத் துடித்தவள்போல் அவனருகே வந்து உட்கார்ந்தாள். அவனிடம் டெல்லியில் வாங்கிய அலங்கார சாதனங்களையும், அழகு உடைகளையும் எடுத்துத் தந்தான்.

"நிறையப் பணம் ஆகியிருக்குமே...!" அவள்குரலில்பெருமிதமானநிறைவுஒலித்தது.

"இதோ, இவை சிறந்த பரிசுகள், பிரித்துப் பாரேன்" என்று புத்தகக் கட்டை அவள் கையில் தந்துவிட்டு, அவள் முக உணர்ச்சிகளைக் கவனிக்கத் தயாரானான்.




புத்தகங்களைப் பிரித்த கைகள் நடுங்கின. அவள் முகம் இருண்டது. கண்கள் கலங்கி விதிர்த்தன. உடலில் வியர்வை 'குப்,' பென்று பெருகியது. அந்தப் புத்தகங்களையே சிலையாகப் பார்த்து நின்றாள் அவள்.

"எனக்குத் தெரிந்துவிட்டதே என்ற பயமா? பரவாயில்லை, எடுத்து வை. உனக்காக அவைகளை இரட்டை விலை கொடுத்து வாங்கவும் நான் தயார்தான்....ஆனால் நீ இதைத் திரும்பவும் கடையில் கொண்டு போய்ப் போட்டுவிடக் கூடாது...." சாதாரணமாகப் பேச முயன்ற குரல் வரவர வறுத்துச் சீறலாக வெளிப்பட்டது.

"ராமு...!" அவள் குரல் தழுதழுத்து விட்டது. "என்னைப் பற்றி நீங்கள் எதுவுமே கேள்விப்பட்டிருக்க முடியாது..."

"ஓ! நிறையக் கேள்விப்பட்டேன் பிரமீளா. ஆனால் அது உண்மையாகும் என்று நான் நம்பவில்லை. உன் மனத்தின் உன்னதத்தில் என்னைப் பற்றிய நினைவு அசைக்க முடியாததாக இருக்கும் என்று நம்பினேன். ஆனால் இந்தப் புத்தகங்களை மூர்மார்க்கெட்டில் பார்த்த கணமே... யாரோ உறவுக்காரப் பையன் இங்கே வந்து தங்கியிருக்கும் செய்திதான் நினைவில் வந்தது." அவன் இதழ்க் கடையோரம் இறுகியது.

அவளிடம் ஓர் விம்மல் அதிர்ந்தது.

"நீ என் எதிரில் பகிரங்கமாகச் செய்யும் செயலை என் மனம் ரகசியமாகவே செய்தது."

"என்னை மன்னித்துவிடுங்கள், ராமு!"

"இப்படிக் கேட்டுவிடுவது மிகச் சுலபம் தான், காரணத்தையே காட்டாமல்..."

"வேளை தோறும் ஏற்படும் தேவைக்கு அடிமைப்பட்டு விட்டேன் நான்..." அவள் உள்ளுக்குள் கொந்தளிக்கும் வேதனை சொற்களாக வடிந்தது.

"அதை விற்றுவிட்டாய்! பச்சையாகச் சொல்லேன்."

அவன் சொற்களால் அவள் புழுவாகத் துடித்தாள். "வறுமை அத்தனை கொடியது. ராமு! இல்லையென்றால் உயிர் மூச்சு என்று கருதியவற்றைக் கேவலம் வயிற்றுப் பசிக்கு

இரையாக்குவேனா? நீங்கள் புத்தகம் ஒரு பொக்கிஷம் என்று தந்தீர்கள். நானும் அப்படித்தான் கருதினேன். ஆனால் யதார்த்த உண்மை இதுதான்! அவை பசிக்குப் பின் தான் பொக்கிஷம்! எனவேதான் இதை விற்க நேர்ந்த இக்கட்டை மனமில்லாமலே ஏற்றுக் கொண்டேன்...''

''அதற்காக...? அதற்காக இவைகளையா விற்பது?''

''என்னுடையது என்று எதையுமே வைத்துக்கொள்ள முடியாத வறுமை. என் உணர்வுகளையெல்லாம் பிறிட்டு வடியவிட்டுவிடும் பசி உணர்வு. இவற்றிற்கு மனித உருவில் பிறந்த நான் அடிமையாகி விட்டேன் ராமு!... என்னை மன்னித்துவிடுங்கள்...! மற்றவர்கள் எதிரில் உணர்ச்சிகளின் வெளியீட்டால் என் வறுமையை நான் மிகையாக்கிக் காட்டிக் கொண்டதில்லைதான். அதில் எனக்கு விருப்பமுமில்லை. ஆனால் உண்மை இதுதான். இரண்டு மாதங்களுக்கு முன் அப்பா போய்விட்டார்....''

''அப்பா போய்விட்டாரா?'' அதிர்ச்சியோடு ராமு ஒரு மூலையில் மடக்கிச் சாத்தியிருந்த ஈசிச் சேரைப் பார்த்தான். ''எனக்கு ஏன் அதை எழுதவில்லை?''

''அத்தனை தூரத்திலிருந்து கொண்டு இதை நினைத்து வருந்தியவாறே கடமையில் ஈடுபட முடியாமல் போய்விடுமோ என்ற எண்ணத்தில்தான் எழுதவில்லை. ஆனால் உங்களின் வரவை ஒவ்வொரு நாளும் கழியும் பொழுதின் கணக்கோடு ஒப்பிட்டுப் பார்த்துக் காத்திருந்தேன். அப்போதுதான் பானு வந்து சேர்ந்தான். அம்மா இருந்த நிலையில், ஏற்பட்ட கைப்பில் வலியக் கரம் நீட்டும் அவன் கையை நான் பற்றிக் கொள்வதன் மூலம் குடும்பத்துக்கு வறுமையிலிருந்து ஒரு விடுதலை வாங்கித் தருவேனா என்று எதிர்பார்த்தாள். என் ஒப்புதல் கிடைக்காமல் அவன் போன பின் அம்மா என்னை இடித்துரைக்க ஆரம்பித்தாள். நாளுக்கு நாள் வறுமையின் கோர ஸ்வரூபம் பெரிதாகிக் கொண்டே வந்தது. நான் வேலை தேடினேன். கிடைக்கவில்லை. மூன்று தினங்களாகக் குழந்தைகளும் அரைப் பட்டினி. ஆவி சோர்ந்து, மெய் சோர்ந்து கிடந்த போது அம்மா என்னை மறுபடியும் உசுப்பினாள். ''பானுவை மணந்து கொள்கிறாயா, இல்லையா?'' என்று கோபித்தாள், அடித்தாள், புலம்பினாள், கேவினாள். என் பதில் அவளுக்குச் சாதகமாயில்லை. ''வயிற்றின் அக்கினியை எப்படி அடக்கப் போறே?'' என்று கூக்குரலிட்டாள். பிறகு அவளும் சுருண்டு விட்டாள். குழந்தைகள் பேசத் தெம்பற்றுக் கிடந்தன. நான் சுற்றுமுற்றும் பார்த்தேன். நீங்கள் தந்திருந்த புத்தகங்கள் கண்ணில் பட்டன.... உங்கள் பரிசுகளையெல்லாம் பத்திரமாக வைத்துக் கொண்டு, என்னைப் பிறிதொருவனுக்குத் தராமல், அவைகளை விற்றுவிட்டு, என்னை மட்டும் உங்களுக்காக வைத்துக் காத்திருக்கிறேன்... உங்களுக்குத் தரவேண்டியதைக் காக்க நேர்ந்த சமயத்தில் நீங்கள் தந்தவற்றையே உரிமையாக விற்று நிமிர்ந்தேன் நான்... இப்பொழுதெல்லாம் நான் இடையிடையே வேலைக்குப் போகிறேன்... தொடர்ந்த வேலை கிடைக்காததால். ஆனால் இப்போதும் வறுமையை வெற்றி கண்டு விட்டேன் என்று சொல்ல முடியாது...''

ராமு அவளை உற்றுப் பார்த்தான். அவளது மழைத்த விழிகளின் உறுதியில் உள்ளத்தைக் கண்டு கொண்டான் அவன்.

''என் முன்னின்றும் வயதையும், வளங்களையும், இளமையையும் பொறுத்த பிரச்னைகள் விலகிப் போயின. இந்த வறுமையின் பிடியில் நான் குற்றுயிராக நிற்கிறேனே, அதுதான் என்னிடம் மிச்சம். உங்களுக்காக நான் இப்படித்தான் காத்திருக்கிறேன், ராமு!'' அவளுடைய மிருதுவான குரலில்தான் எத்தனை பலவீன நடுக்கம்!

ராமு வேதனையான திகைப்பில் அவளைக் கண் கொட்டாமல் பார்க்கிறான். வாயில் சொல்லெழவில்லை. அவன் மௌனத்தை அவள் தவறாகத்தான் ஏற்றுக் கொண்டாள். அவன் மன்னிப்பும் அன்பும் கிட்டாதோ இனி என்ற அச்சம் நடுக்கியது.

''நீங்கள் இதை நம்ப மாட்டீர்கள் ராமு. இப்படிப்பட்ட பசியை நீங்கள் அறிந்திருக்கவே முடியாது...''

''அறிந்திருக்கிறேன் பிரமீளா... ஒரே ஒரு முறை அதுவும் சமீபத்தில்தான். அது உனக்காகத்தானோ என்னவோ? அந்த அனுபவம் மட்டும் எனக்கு வாய்க்கவில்லையானால் உன்னையே நம்புவேனோ, என்னவோ?'' என்று வாய் திறக்கிறான் அவன்.

போகும்போதும், வரும்போதும் டெல்லியின் அந்தச் சந்து முனைக் கடையைப் பார்த்து அவன் அருவருப்பால் முகம் சுளித்ததும், ஒரு நாள் சட்டென்று தேசிய விடுமுறை தினத்தன்று உணவு கிடைக்காமல் தவித்ததும், வரும் வழியிலிருந்த அதே முனைக் கடையை நாடி உள்ளே போய் வயிறு முட்டத் தின்று பசியை — அந்த அரக்கனைச் சமாதானப்படுத்தியதும் அந்தச் சமயத்தில் அவனிடமிருந்து விடைபெற்றிருந்த சுத்தம், சுகாதாரம் எல்லாம் பசியின் சுய தன்மையில் கரைந்து போய் மீண்டும் உயிர்த்ததும் அவன் நினைவில் மிதந்தன. ஒரு வேளைக்கே அப்படியென்றால்... பசியின் கொடுமை புரியவில்லையா ?

''பிரமீளா!'' அவன் கைகள் நீண்டன. ''உன்னை உணர்ந்து கொண்டேன், பிரமி!''

''ராமு!'' அவள் அலறியவாறே அந்தப் பிடிக்குள் ஐக்கியமாகி விம்மினாள்.

''நான்தான் வந்துவிட்டேனே, இன்னும் ஏன் அழறே? இனி எந்தக் கலக்கத்துக்கும் இடமில்லை, பிரமீளா!''

இது ஆனந்தத்தால் ஏற்படும் கண்ணீர் என்று அவன் பெருமிதமாகக் கூறிக்கொள்ளவில்லை. அவள் தான் அனுபவித்த உயிர் அவஸ்தைகளையெல்லாம் எண்ணி எண்ணிக் கேவினாள். வெகு நேரத்துக்குப் பின் அந்த விம்மல் அடங்கிப் புன்னகையாக அரும்பிட்டு நாணமாகப் பூத்தது.

மனத்தின் பொற்கதவுகள் திறந்துகொண்டு வைர ஒளி பாய்ச்சுகின்றன. இரண்டு உள்ளங்களின் சங்கமத்தில் இனி பசியற்ற வாழ்வின் பாதுகாப்பான நிறைவும் பகிரப்படுகிறது.

நாள்தோறும் ஹமாம் உபயோகியுங்கள். உங்கள் சருமத்தைச் சுத்தம் செய்வதுடன், புத்துணர்ச்சியையும் அளிக்கிறது. உங்கள் மேனிக்கு கவர்ச்சியான மெருகையும் கொடுக்கிறது. நெடுங்காலம்...நீடித்திருக்கும் ஹமாம் டாய்லெட் சோப்பை உபயோகியுங்கள்.

# புதுமையின் பொலிவுக்கு ஹமாம்




## அதிக காலம் நீடித்துழைக்கும் டாய்லெட் சோப்

டாடா
தயாரிப்பு

CMTH-4. TM

# சரப சாஸ்திரி சில்வியா செல்கிறார்

'திரிசங்கு'

மார்க்கண்டன் தயங்கிக் கொண்டே படியேறினான். ''உள்ளே ஒருத்தரும் இல்லீங்களா?'' என்று இரண்டு முறைகள் கேட்டுவிட்டு அவன் பதிலுக்காகக் காத்து நின்றான்.

உள்ளே இரண்டாம் கட்டுக் கதவு ஓசைப்பட்டது. யாரோ வருகிறார்கள் என்பதற்குக் கட்டியம் கூறியது.

''ஐயா வெளியிலே போயிருக்காங்களா?'' என்று மார்க்கண்டன் கேட்பதற்கும், உள்ளே யிருந்து, ''யாரோன்னு பார்த்தேன். உள்ளாற வரலாமே தம்பி!'' என்று வீட்டு எஜமானியம்மாள் பேசிக் கொண்டே வருவதற்கும் சரியாக இருந்தது.

''அவங்க இல்லீங்களா?'' என்று இரண்டாம் தடவை யாக மார்க்கண்டன் கேட்டு விட்டான். அதற்குப் பின் தான் அந்தக் கேள்விக்கு விடை வந்தது.

''தோட்டத்திலே இருக்கார். இப்படியே போய்ப் பார். எதினாச்சும் அவசரமா?''

இதற்குள் புறக்கடையிலிருந்து, ''யார் அங்கிட்டு வந் திருக்காங்க?'' என்ற கேள்வியுடன் கவுண்டர் வந்தார்.

''ஐயரு வீட்டுப் பிள்ளை வந்திருக்குது, 'உங்களைத் தேடிக்கிட்டு.''

மார்க்கண்டன் கையில் ஏதோ கடிதம் இருந்தது.

''எப்ப வந்தே பட்டணத்திலேந்து? நேத்துக்கூடக் கேட்டேனே சரபத்தை. நீ வந்திருக்கிறதாகச் சொல்ல லியே உங்க ஐயா?''

''இன்னிக்குக் காலேயிலேதான் வந்தேன்.''

கவுண்டர் மேல் துண்டினால் முதுகு, மார்பெல்லாம் துடைத்துக் கொண்டே பேசினார். ''என்ன விசயம்? படிப் பெல்லாம் முடிச்சுட்டாப்பலே இருக்குது?''

மார்க்கண்டன் கூறினான் — ''ஆமாங்க, முடிஞ்சுது ஓரளவு.-படிப்புக்கு முடிவு ஏது, சொல்லுங்க.''

''உட்கார், தம்பி, இப்படி நின்னுக்கிட்டே பேசறியே?''

மார்க்கண்டன் அவர் எதிரே ஸ்டூலில் அமர்ந்தான். வந்த விஷயத்தைத் தொடங்கினான்.

''இந்தக் கடிதாசு அமெரிக்காவிலேந்து வந்திருக்குது. அங்கே சில்வியா யுனிவர்சிடின்னு இருக்குது. அவங்க எழுதி யிருக்காங்க.''

கடிதத்தை உறையினின்று வெளியே எடுத்தான் மார்க் கண்டன். கவுண்டரும் என்னவோ அதைப் படிக்கப் போகிறவர்போல் மூக்குக் கண்ணாடியை எடுத்துத் துடைத் துக் கண்களில் மாட்டிக் கொண்டார். மறு விநாடி அவரே கேட்டு விட்டார்: ''தம்பி, அது இங்கிலீசுலேதானே எழுதியிருக்கும்? — அமெரிக்காக்காரன் தமிழா எழுதப் போறான்? நீதான் அந்தக் கடிதாசைக் கொணாந்திருக் கே'ன்னு, நானும் படிக்கிறாப்பலே உடனே கண்ணாடியை மாட்டிக்கிட்டேன், பார்!'' அவரே சிரித்தார்.

மார்க்கண்டனுக்கும் தன் தவறு தெரிந்தது. கவுண்ட ருக்குக் காட்டுவதற்காக அந்தக் கடிதத்தை எடுத்து வந் திருக்க வேண்டாம். இந்த ஒரு - விஷயத்தில் அப்பாவும் இவரும் ஒன்றுதான். இங்கிலீஷ் தெரியாத பிறவிகள். இப்படி ஏதோ அவன் மனம் முணுமுணுத்தது.

''நீயே வாசிச்சுச் சொல்லு விசயத்தை.''

''அங்கே மேல் படிப்புக்கு வரச் சொல்லி எழுதியிருக் காங்க என்னை.''

கவுண்டர் வாயைத் திறக்கவில்லை.

''அமெரிக்காவிலே போய் மூன்று வருஷங்கள் படிக்க லாம். படிச்சு, அவங்க பட்டத்தை வாங்கிட்டு வரலாம்.''

''போக, வர்ற செலவெல்லாம்?''

''எல்லாம் அவங்க ஏத்துப்பாங்க.''

''தங்கறது, சாப்பாட்டுச் செலவெல்லாம் கூட அவங்க பார்த்துப்பாங்களா?''

''நமக்குக் காலணாச் செல வில்லீங்க.''

கவுண்டர் சந்தோஷத்தோடு சொன்னார்: ''பரவாயில்லியே, இவ்வளவு வசதி பண்ணித் தர்றாங்களா அவங்க?''

''இது மட்டும் இல்லீங்க. படிக்கிறவங்களுக்கு 'உபகாரச் சம்பளம் வேறே தருவாங்க.''

இந்த இடத்தில் கவுண்டர் சரியான வினாத் தொடுத்தார் — ''உங்க ஐயா என்ன சொல் றார்? சரபத்துக்கு அமெரிக்கா போறதெல்லாம் பிடிக்குமா?''

அழாக் குறையாக மார்க் கண்டன் பேசினான் — ''அது தாங்க உங்ககிட்டே வந்தேன்.



அப்பாவுக்குச் சம்மதம் இல்லே? அங்கெல்லாம் போவேணும்கிறார்.''

''அதுதான் நானும் நெனச்சேன். சரபம் என்னிக்குமே வைதீகம் ஜாஸ்தி. அமெரிக்கா, ஐரோப்பா போகிற சான்ஸ் கிடைச்சிச்சின்னு பல்லேக் காட்ற ஆசாமி இல்லியே அவன்.''

''நீங்க கொஞ்சம் வந்து அப்பாகிட்டே சொல்லணுமுங்க. அதுக்குத்தான் வந்தேன். நீங்க என்னே அனுப்பும்படியாக் கொஞ்சம் பிடிவாதமாச் சொன்னு அப்பா கேட்பார்.''

கவுண்டர் கேட்டார்: ''ஏன் போகப்படா தாம்? கேட்டியா ஐயாவை?''

''அங்கே போனுக் கெட்டுப் போயிடு வேனும். அதெல்லாம் நமக்கு வேண்டாம்—அப்பாடுங்கறார்.''

கவுண்டர் முகத்தில் புன்முறுவல் பரவி நின்றது. ''நான் வந்து சொல்றேன். சரபம் கேப்பானுங்கிறதுதான் சந்தேகம்.''

''நீங்க ஒருத்தர் சொன்னுப் போதும். அப்பா சம்மதிப்பார்.''

''சரி, நான் சொல்றேன்.''

மார்க்கண்டன் விடைபெற்றுக் கொண்டான். ''இன்னும் ரெண்டு வாரங்களுக்குள்ளே சம்மதம் — இல்லேங்கறதை அவங்களுக்குத் தெரிவிச்சாகணும். அதனுலேதான் அவசரம்.''

மார்க்கண்டன் போவதையே பார்த்துக் கொண்டு கவுண்டர் நின்றார்.

(2)

அமெரிக்காவிலிருந்து வந்த கடிதம் சரப சாஸ்திரியின் கையில் இருந்தது. அன்று காலே வந்த கடிதம் அது. அதைப் படித்ததி லிருந்து அவருக்கு இருப்புக் கொள்ளவில்லே. நேரே பாய்ந்தோடிப் போய்க் கவுண்டரிடம் அதைக் காட்டி, 'இப்போது என்ன சொல் கிறுய்?' என்று கேட்டுத் தன் வயிற்றெரிச் சலேத் தீர்த்துக் கொள்ள வேண்டும் என்று உள்ளம் துடித்தது.

அமெரிக்காவி லிருந்து மார்க்கண்டன் மாதம் ஒரு கடிதம் எழுதுவது வழக்கம். இந்தக் கடிதம்போல முந்திய கடிதம் எதுவும் அவரைக் குலே நடுங்க வைத்த தில்லே. மூன்று முறை, நான்கு முறை படித்து விட்டார். அவருடைய கைகள் நடுக்குற்றன. வாய்க்கு வந்தவாறெல்லாம் பெற்ற மகனேத் திட்டினுர். தடிப் பயல், ராஸ்கல், காலிக் கழுதை... இவ்வாறு நீள மாக அவர் வாய் ஓயாது திட்டிக் கொண் டிருந்தது.

துண்டைக் கழற்றி ஆணியில் மாட்டி விட்டு, பள்ளிக்குப் போய் விட்டு வந்ததும் அகற்றிய ஜிப்பாவை எடுத்து அணிந்து கொண்டார். வேட்டியை எடுத்துக் கழுத் தைச் சுற்றி இரு தரம் சுற்றிக் கொண்டார். வீட்டைப் பூட்டிவிட்டு, போருக்குப் புறப் படும் வீரனேப் போல் வீதியில் கிளம்பினுர்.

''கப்பையா இருக்கானு?'' என்று வீதியி லிருந்தே கூவியவாறு அவர் வீட்டுக்குள் நுழைந்தார்.

''கவுண்டர்வாள்!'' — இதுவும் அவர் தாம். உற்சாகமோ வேறு உணர்ச்சியோ



மிருதியாக இருக்கையில் இப்படித்தான் அவர் அழைப்பார்.

''வாப்பா, வா, சரபம்'' என்று அழைத்த வாறு சுப்பையாக் கவுண்டர் வெளி வந்தார்.

''வந்திருக்கேன் நீ கூப்பிடாமெயே. உன்னே வெறும்மனே விடப் போறதில்லே நான்.''

கவுண்டர் சிறிது திகைத்தார்.

''ஏது. இன்னிக்கு ரொம்பக் கோவமா இருக்கார், வாத்தியாரய்யா?''

''எல்லாம் நீ பண்ணின வேலேதான். உன் பொரிகக்கு மதிப்புக் கொடுத்தேனே, என் புத்தியைத்தான் சொல்லணும்.''

''ஆமாம், என்ன கடிதாசு அது கையிலே?''

''எல்லாம் சொல்றேன். சொல்லத்தானே வந்திருக்கேன். உன்னால் வந்த வினேதான் அத்தனையும். உங்கிட்டச் சொல்லாமல் இருப்பேனா...?''

சரப சாஸ்திரியின் கரங்களில் நடுக்கம் நின்றபாடில்லே. கவுண்டர் என்னவோ ஏதோ என்ற திகைப்புடன் நின்றார்.

''படிச்சுப் பார் இந்தக் கடிதாசை. ராஸ்கல் என்ன எழுதியிருக்கான், பார்! காலிப் பயல்!'' சாஸ்திரிகளின் உதடுகள் துடித்தன.

''யார்? மார்க்கண்டனா?''

''ஆமாம், அந்தக் காலகண்டன்தான் எழுதியிருக்கான், நாறக் கழுதை!''

கவுண்டரின் நடுங்கும் கை கடிதத்தை வாங்கிப் பிரித்தது.

''கண்ணாடியைப் போட்டிண்டு நன்னாவே படி. அப்புறம் சொல்லு.''

'அன்புள்ள அப்பாவுக்கு அநேக நமஸ்காரம்...' என்று கடிதம் தொடங்கிய விதம் அழகாய்த்தான் இருந்தது. கவுண்டருக்கு விஷயம் என்னவாக இருக்கும் என்று ஊகிக்கக்கூட முடியவில்லே. படிக்கப் படிக்க அந்த விஷயமே அவருடைய கண்களை மறைத்தது.

மார்க்கண்டனோடு அங்கே அமெரிக்கப் பெண் ஒருத்தி லோரிடோ என்பவள் படிக்கிறளாம். அவளுக்குத் தென் இந்திய சங்கீதம் என்றால் உயிராம். அது அவளது விசேஷப் பாடமாம். இருவருக்கும் நல்ல தொடர்பு உண்டாம். அடிக்கடி சந்தித்துப் பேசி, ஒருவர் உள்ளத்தை ஒருவர் புரிந்து கொண்டு, இறுதியில் திருமணம் செய்து கொண்டு விட்டார்களாம். பிள்ளையாண்டான் பெற்றவரிடம் ஆசி கோரியிருந்தான்.

சரப சாஸ்திரிகளுக்கு ஆத்திரம் மூட்டிய பகுதி மார்க்கண்டன் அந்தப் பெண்ணைப் புகழ்ந்திருந்த இடம்தான். ''நீங்கள் என்னவோ என்று நினைக்க வேண்டாம். லோரிடா மிகவும் நல்ல பெண். நேரில் பார்த்து அவளது அடக்கத்தையும் குணத்தையும் கவனித்தால் கட்டாயம் உங்களுக்கு அவளைப் பிடித்துப் போய்விடும். நம் வழக்கங்கள், புராணங்கள் எல்லாவற்றிலுமே அவளுக்கு நிரம்ப ஈடுபாடு. யுனிவர்சிடியிலேயே ஓரளவு சம்ஸ்கிருதம் படிக்கிறள். நான் தமிழும் சொல்லித் தருகிறேன். நம்முடைய பக்கத்துப் பெண்களைப் போலத்தான் உடுத்துவதுகூட.''

கவுண்டர் கடிதத்தை முடித்தார். அவருக்கும் மனத்தில் தாங்கொணு வேதனைதான். நாம் சொல்லி அவனை அமெரிக்கா அனுப்பி வைத்ததற்கு இப்படி ஆகியிருக்க வேண்டாம் என்று அவர் உள்ளமும் வெதும்பியது.

''இப்ப என்ன சொல்லறே, சுப்பையா?''

கவுண்டர் வாய் திறக்கவில்லே.

''சொல்லேன். அப்ப கச்சை கட்டிண்டு வந்து பிரமாதமாச் சொன்னியே, பையனைப் படிக்க அனுப்புன்னுட்டு, இப்ப ஏன் வாயே திறக்கல்லே? படிக்கப் போனவனு யிருந்தால், ஊர்ப் பொண்ணு கையைப் பிடிச்சு இழுப்பானு?''

அழாக் குறையாகக் கவுண்டர் பேசினர். ''சரபம்! இப்படி நடக்குமின்னு நான் கனவிலும் நெனச்சதில்லே. அதுவும், நம்ம மார்க்கண்டு இப்படிச் செய்யுமின்னு நான் ஒருகாலும் நெனேச்சதில்லே.''

சரப சாஸ்திரிகள் உதட்டைக் கடித்துக் கொண்டு அவரையே உற்று நோக்கினர்.

''என்னே மன்னிச்சிடு, சரபம். நீ எவ்வளவோ சாக்கிரதையாப் பிள்ளையைக் கண்காணிச்சு ஆளாக்கினே. நான் தெரியாத்தனமாத் தலையிட்டுக் கெடுத்திட்டேன். நீ என்னே....''

கவுண்டரால் மேலே பேச முடியவில்லே.

சரப சாஸ்திரிகள் பேச்சின் திக்கை மாற்றி விட்டார்.

''போப்பா, பைத்தியக்காரா! நான் உன்னே ஒண்ணும் சொல்லல்லே. என் போறாத காலம் எல்லாம்! எவ்வளவு அசிங்கமாப் போச்சு, பார்!''

குரல் தழுதழுக்க, அவர் பேசினர் — ''ஆமாம்ப்பா, ஆமாம். உனக்கு மனசு கஷ்டமாத்தான் இருக்கும்.''

''நான் போறேன். என்னவோ உன்கிட்டே வந்து புலம்பித் தீர்த்துக்கணும்னு தோணித்து. அதுதான் வந்தேன்.''

கவுண்டர் வழியனுப்ப வாசல் வரையில் வந்தார்.

''ஆமாம், என்ன எழுதப் போறே?''

''என்ன எழுதறது? எக்கேடும் கெட்டு, நாசமாய்ப் போ. உனக்கும் எனக்கும் சம்பந்தம் கிடையாதுன்னு எழுத வேண்டியதுதான்....''

கவுண்டர் சரப சாஸ்திரிகள் நடந்து செல்வதைப் பார்த்துக் கொண்டு ஒரு நாழிகை நின்றார்.

3

திடுதிப்பென்று ஒரு நாள் மோட்டார் ஒன்று வீட்டு வாசலில் வந்து நின்றது. சரப சாஸ்திரி வீட்டினுள் என்னவோ செய்து கொண்டிருந்தவர் எட்டிப் பார்த்தார்.

மார்க்கண்டன் முதலில் இறங்கினன். பின்னேடு ஒரு பெண்மணி. நம் பக்கத்து நூல் புடவையைக் கட்டிக் கொண்டிருந்த அந்தப் பெண் மார்க்கண்டனின் அமெரிக்க மனைவி என்று புரிந்து கொள்ள அவருக்கு வெகு நேரம் பிடிக்கவில்லே. தெருவிலே தகராறு வேண்டாம் என்று நினைத்தாரோ என்னவோ? அவர் நேரே கூடத்துக்குச் சென்றார்.

'அப்பா!' என்று அழைத்துக் கொண்டே மார்க்கண்டன் உள்ளே சென்றன். பின்னேடு பெண்ணும் சென்றள்.

சாஸ்திரி மிகத் தெளிவான குரலில் பேசினர்: "டேய்! நான்தான் உனக்குக் கடிதாசியிலேயே எழுதிவிட்டேனே. உனக்கும் எனக்கும் ஸ்நானப் பிராப்திகூடக் கிடையாது. வீணு, இங்கே வந்து கலாட்டா பண்ணுதே. வந்த வழியாப் போய்ச் சேர்."

மார்க்கண்டன், "இல்லே...." என்று ஏதோ இழுத்தான். "இப்ப உன்னேடு பேசிண்டு நிக்கத் தயாராயில்லே."

"அப்பாவுக்கு நமஸ்காரம் பண்ணு. நான் சொல்லிக் கொடுத்தாப்பலே" என்று மார்க்கண்டன் கூற, அவனேடு வந்தவள் அவர் அருகே போய்த் தரையில் தலே குனிய அழகுற வணக்கம் செய்தாள். "நான்தான் லோரிடா. நமஸ்காரம்" என்று அவள் தமிழில் பேசிய அந்த ஒரு கணம் அவரே வியப்பில் ஆழ்ந்து விட்டார்.

"தமிழ் தெரியுமாம்மா ?" இப்படிக் கேட்டது அவர்தான்.

"சுமாராய்ப் பேசுவேன். எல்லாம் உங்கள் பிள்ளே சொல்லிக் கொடுத்தது தான்."

"அப்ப, ரொம்பச் சௌகரியமாப் போச்சு. உன்கிட்டே சொல்லிடறேன். நீ அவனே அழைச்சிண்டு எங்கேயாவது போயிடு. உனக்கும் எனக்கும் சண்டை இல்லே. நீ யாரோ ? நான் யாரோ ? ஆனல், அவன் முகத்தில் மட்டும் விழிக்க எனக்கு இஷ்டம் இல்லே. அவனேக் கிளம்பச் சொல்லு."

அந்தப் பெண் பேசவில்லே. இப்போது மார்க்கண்டன் பேசினன்.

"நான் போறேனப்பா. எதுக்கும், இவ்வளவு தூரம் வந்துட்டுக் கவுண்டர் மாமாவைப் பார்க்காமெ இருக்க வேண்டாம். அவரைப் பார்த்துட்டுப் போயிடறேம்."

"என்ன வேணுச் செய்."

"எனக்கும் இங்கியே நம்ம யூனிவர்ஸிடியிலேயே வேலே. இவளும் தென் இந்திய சங்கீதத்திலே 'ரிஸர்ச்' பண்ணப் போறு. அதனுலே ரெண்டு பேரும் பட்டணத்திலே தான் இருக்கப் போறேம். நீங்க எப்ப வேணுலும்...." என்று மார்க்கண்டன் கூறிக் கொண்டு போகும் போதே, சாஸ்திரிகள், "ஏனம்மா, நீ அவனே அழைச்சிண்டு போக மாட்டியா ? புண்ணியமுண்டு, உனக்கு ரொம்ப..." என்று கத்தினர்.

கார் கிளம்பிச் சென்றது.

4

ஊராட்சி ஒன்றிய அலுவலகத்து நடு அறையில் தலைவர் பீடத்தில் கப்பையாக் கவுண்டர் அமர்ந்திருந்தார். ஈ காக்காய் அருகே இல்லே. காவற்காரன்தான் சற்று எட்டி நின்றன்.

"வரலாமா ?" என்று விசாரித்தவாறு நுழைந்தவர் சம்ஸ்கிருத பண்டிதர் சரப சாஸ்திரிகள்தாம்.

"வாப்பா வா. நீயெல்லாம் வரக் கேட்கணுமா?" என்று கவுண்டர் தம் இருக்கையிலிருந்து எழுந்து கொண்டு விட்டார்.

கழுத்து அங்கவஸ்திரத்தை எடுத்து நாற்காலியின் கையின் மீது போட்டுவிட்டு வந்தவர் பேசலானர்: "கப்பையா, உன்



"எல்லோரும் எல்லாப் பாட்டையும் இப்படி வேகமாகவா பாடணும். இப்ப பாடுகிறது என்ன காலத்திலே சார் பாடிண்டிருக்கார்?"

"கலிகாலத்திலேதான்!"

னேடெ படிச்சவன்கிற முறையிலே கேட்டுக்கறேன். உனக்கு என்னப்பா, கெடுதல் பண்ணினேன் நான் ?"

"சரபம், விளையாடுறியா, நீ ? திடுதிப்னு என்னவோ பேசுறியே ?"

"ஆமாம், இன்னிக்கி உன் கையெழுத்து போட்ட உத்தரவு வாங்கிட்டேன். அதான் ஓடி வந்தேன் உன்கிட்டே."

ஒரு விநாடியில் புரிந்தது கவுண்டருக்கு.

"நான் என்னவோன்னுட்டுப் பயந்துட்டேன், சரபம். நீ அந்த உத்தரவைச் சொல்றியா ?"

சரப சாஸ்திரிகளுக்குக் கோபம் பற்றிக் கொண்டு வந்தது. கோபத்தை அடக்கிக் கொண்டு கேட்டார்: "எனக்கு வேலே போச்சு. நீ சிரிக்கிறே, கப்பையா. அப்படித் தானே?"

"வேலே போறதாவது ? இருக்காதே: நீயோ பழைய ஆள் ஆச்சே ; பர்மனெண்ட் ஸ்டாஃபை வெளியே போகச் சொல்ல முடியாதே."

'நீ சொல்றதெல்லாம் சொல்லு' என்பது போன்ற பார்வை அவர் கண்களில் தெறித்து நின்றது.

"வேலே போகாதே." இரண்டாம் முறை கவுண்டர் இவ்வாறு கூறியதும், சாஸ்திரிக்கு ஆத்திரமே வந்து விட்டது. "சம்பளம் காலணு குறையாது. ஆனல் பியூனு இருன்னு உத்தரவு. அப்படித்தானே ? சம்ஸ்கிருதப் பண்டிதனு இருந்தவன் ஸ்கூல் மேஜை — நாற்காலியைத் துடைக்கணும், இல்லாட்டா வேளாவேளைக்கு மணி அடிக்கணும். இந்த வேலேயெல்லாம் செய்யறத்துக் காகத்தான் நான் சிரோமணிப் பட்டம் வாங்கினது சம்ஸ்கிருதத்திலே. இல்லியா?"

"சரபம்! நீ வீணுக் கோவிச்சுக்காதே: யாரப்பா இந்த நாளிலே அந்தப் பாஷையைப் படிக்கிறங்க? வழக்குலேயே இல்லாத, செத்த பாஷைதானேப்பா அது?"

"தேவ பாஷையப்பா, கப்பையா, அது?"

''அப்ப தேவர்களே படிச்சிக்கட்டும். நானும் நீயும் அடிச்சிப்பானேன் ?''

''நான் சண்டை போட வரல்லே, கப்பையா! ஏதோ எனக்குக் கொஞ்சம் தெரிஞ்ச இந்தப் பாஷையை வரும் தலைமுறைப் பசங்க பத்துப் பேருக்குச் சொல்லி வைச்சால், என் மனசு வேகும். நான் கேட்டுக்கறது இவ்வளவுதான்.''

கவுண்டர் சரப சாஸ்திரியை முற்றும் அறிந்த, உற்ற நண்பர்.

''சரபம்! நீதான் இப்படி வருமின்னு தெரிஞ்சுக்கிட்டோ, என்னவோ, அந்த நாளிலேயே பிரைவேட்டாத் தமிழிலேயும் 'புலவர்' படிச்சவனாச்சே. இல்லியா ?''

சரப சாஸ்திரி கொதித்தெழுந்தார். ''அதனாலே ? அதுக்கும் இதுக்கும் என்ன சம்பந்தம் ?''

''நீபாட்டிலே தமிழ் கற்பிக்கலாமே ?''

''ஏன், சம்ஸ்கிருத பண்டிதர் வேலை போனவுடனே தமிழைப் பிடிச்சிண்டேன்னு சொல்லிக் காமிக்கவா ?''

கவுண்டர், ''அதெல்லாம் இல்லே. நல் லெண்ணத்திலேதான் சொல்றேன்'' என்றார் சிரித்துக் கொண்டே.

''நான் தமிழ்ப் பெருமை பேசாமெ, சம்ஸ்கிருத வகுப்பு நடத்தினதே இல்லே, கப்பையா. அது மட்டும் தெரிஞ்சுக்கோ. காளிதாசன் ரகு வம்சமோ, அல்லது வால்மீகியோ சொல்றப்போ, கம்பன் பெருமையைச் சொல்லாமெ இருக்கமாட்டேன். எனக்கு ரெண்டும் ரெண்டு கண்கள் மாதிரி. ஒரு கண்ணைப் பிடுங்கறயேன்னு நான் கதற்றேன்.''

பிறகு சரப சாஸ்திரிகள் அடங்கிய குரலில் பேசினார்: ''கப்பையா! உன் மேலே கோபம் இல்லே எனக்கு. சம்ஸ்கிருதம் இந்த நாட்டினுடைய பழைய பாஷை. அதை நம் நாடே இவ்வளவு ஒதுக்கலாமா? வாழ வகை செய்ய வேண்டாமா, சொல்லு.''

சரப சாஸ்திரி வால்மீகி ராமாயணத்தைப் பாராயணம் பண்ணிக் கொண்டிருந்தார். திடீரென வீட்டு வாசலில் நிழல் தட்டியது. மோட்டார் கார் ஒன்று வந்து நிற்கும் ஓசை கேட்டது. துண்டை மேல் உடம்பில் போர்த்திக் கொண்டு, வெளியே சென்றார்.

காரிலிருந்து இறங்கியவள் லோரிடா தான். வந்ததும் கைகூப்பி வணக்கம் செய்தவள், தரையில் விழுந்து அவரை நமஸ்கரித்தாள்.

கண்களைத் துடைத்துக் கொண்டு அவர் கவனித்தார்.

''உங்கள் பிள்ளை அமெரிக்காவுக்குப் போய் ரெண்டு மாசம் ஆச்சு. எனக்கும் அங்கியே சில்வியா யுனிவர்சிடியிலே வேலை கிடைச்சுடுத்து. அதனாலே, ரெண்டு பேருமா அங்கியே இருக்கலாம்னு தீர்மானம். நீங்க..'' என்று அவள் இழுத்தாள்.

''உங்கள் பிள்ளை சொல்லச் சொன்னார். இப்பல்லாம் காலம் மாறிண்டு வர்றது. சம்ஸ்கிருதத்தை இந்தப் பக்கத்திலே அதிகம் பேர் ஒதுக்கிண்டு வரா. சில்வியா யுனிவர்சிடியும் சரி, அங்கே இருக்கிற அத்வைத சென்டர்லேயும் சரி, சம்ஸ்கிருதத்துக்கு நல்ல ஆதரவு இருக்கு. உங்கள் பிள்ளை போய் விசாரிச்சு எழுதியிருக்கார். நீங்க வந்தேள்னு, அத்வைத சென்டர்லே எடுத்துப்பா. உங்களைப் போன்ற ஓரியண்டல் ஸ்காலர் கிடைச்சா, அவாளுக்கு எவ்வளவோ பெருமை. உங்களுக்கும் சம்ஸ்கிருதத்துக்குச் சேவை பண்ணின திருப்தி இருக்கும்.''

இங்கு அவள் நிறுத்தினாள். அவர் கேட்டார் — ''சம்ஸ்கிருதத்தைப் படிக்கிறதுக்கு அங்கே ஆள் இருக்கா?''

''ஏராளமான பேர் இருக்க மாட்டா; ஆனால் ஆர்வமுள்ள சிலர் காத்திண்டிருக்கா?''

''அப்படியா?'' என்று அவர் வாயைப் பிளந்தார்.

''வரேளா ?''

''நம் ஊரிலே விலை போகாத சரக்கு அங்கெல்லாம் எடுபடுமான்னுதானம்மா சந்தேகம்.''

''அந்த விசாரமே வேண்டாம்.''

சாஸ்திரிகளின் கண்களில் ஒளி பிறந்தது.

''அப்படியானால், நீங்க வரேளா? பிள்ளைக்கு எழுதிடட்டுமா ?''

''செய்யம்மா !''

அவள் பேச்சு, புடவை எல்லாமே அவருக்கு அதிசயமாய் இருந்தது.

''அப்ப, எப்பக் கிளம்பலாம்? நாளைக்கே பட்டணத்துக்குப் புறப்படலாமா ?''

ஒரு நிமிடம் யோசித்துவிட்டு, அவர், ''சரி'' என்றார்.

''எனக்கு வேறெருத்தர்கிட்டேயும்கூடச் சொல்லிக்க வேண்டாம். கப்பையாக் கவுண்டர்னு பஞ்சாயத்துப் போர்டு பிரசிடெண்ட் இருக்கார். அவர் என் அந்த நாளைத்துக் கிளாஸ்மேட். அவர்கிட்டே மட்டும் சொல்லிண்டு வரேன்.''

''ஆமாம், உங்கள் பிள்ளையும் சொல்லியிருக்கார். அவர் பொரிக பேரில்தான் நீங்க பிள்ளையை அமெரிக்காவுக்கு அனுப்பினேளாம். நானும் பார்த்திருக்கேன்.''

காரில் அவர் ஏறிக் கொள்ள, அவளும் ஏறினாள். 'டிரைவர்' காரைச் செலுத்தினான். கவுண்டர் வாசலுக்கே வரவேற்க வந்து விட்டார். சாஸ்திரிகள் தம் முடிவைச் சொன்னார். கவுண்டர் அப்படியே அவரைத் தழுவிக் கொண்டார்.

''சரபம்! ஒண்ணு மட்டும் கேட்டுக்கறேன். சம்ஸ்கிருதப் பிரசாரத்தோடே, நம் தமிழ்ப் பெருமையையும் பரப்பு. உன்னாலே தான் முடியும் அது.''

''நீ சொன்னாலும் சொல்லா விட்டாலும் நான் எப்படியும் செய்யப் போகிற காரியம் அது. எனக்குத்தான் ரெண்டும் ரெண்டு கண்கள் ஆச்சே.'' கண்களைத் துடைத்துக் கொண்டார் சாஸ்திரிகள்.

''என்னை மறந்திடாதே, சரபம்!'' என்று குரல் தழுதழுக்கப் பேசினார் கவுண்டர்.

---

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M 4392
Registered as a Newspaper in Ceylon